# பெண்ணரசியர் கதை

பொதுப்பதிப்பாசிரியர்கள்
டாக்டர் ஷூ ஹிகோசகா
டாக்டர் ஜி. ஜான்சாமுவேல்

பதிப்பாசிரியர்கள்
டாக்டர் கி. ஜெயகுமார்
திரு. த. பூமிநாகநாதன்




ஆசியவியல் ஆய்வு நிறுவனம்
சென்னை-600041.

**பெண்ணரசியர் கதை**

ஆசியவியல் ஆய்வு நிறுவனப்

முதற்பதிப்பு—மார்ச், 1995

வெளியீட்டு எண்—33

விலை ரூபாய்: 100 US $ 12

**சிறந்த தமிழ் நூலுக்கான தமிழ்நாடு அரசின்**
**பொருளுதவியுடன் வெளியிடப்படுகிறது**

நூல் கிடைக்குமிடம்:

**நூல் வெளியீட்டுத்துறை,**

**ஆசியவியல் ஆய்வு நிறுவனம்**

திருவான்மியூர், சென்னை-600 041. இந்தியா
தொலைபேசி: அலுவலகம் 4915428, 418962,
4919466, 4925085
தொலைவரி (Fax) 91-44-4919466

# பதிப்புரை

'பெண்ணரசியர் கதை' என்னும் இக்கதைப்பாடல் சுவடி வடிவத்தில் உள்ளது. இது ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தின் சுவடி எண் 50-இல் பதிவு செய்யப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. மொத்தம் 44 இதழ் களைப் பெற்றுள்ள இச்சுவடியில் 14-ஆவது என்னுடைய இதழ் மட்டும் விடுபட்டுள்ளது. விடுபட்டுப் போன பகுதியிலுள்ள கதைப்பகுதி சுக்குப் பாறைத் தேரிவிளையிலிருக்கும் பொ. தங்கராஜ் அளித்த சுவடி மற்றும் தெங்கம்புதூர் பகுதியை அடுத்த காட்டுவிளைப் பகுதியிலுள்ள இரத்தின சாமி நாடாரால் தரப்பட்ட கையெழுத்துப் பிரதி ஆகியன கொண்டும் முழுமையாக்கப்பட்டது.

**சுவடி வரலாறு**

சாதாரண பனையோலையில் இக்கதைப்பாடல் எழுதப்பட்டுள்ளது. 48 செ. மீட்டர் நீளமும் 3.5 செ. மீட்டர் அகலமும் கொண்ட இச்சுவடி சிறந்த நிலையில் உள்ளது. இவ்வேட்டினை ஆசியவியல் ஆய்வு நிறுவனத் தினர் அகஸ்தீஸ்வரம் ஆறுமுகப்பெருமாள் நாடாரின் குடும்பத்தாரிட மிருந்து பெற்று வந்தனர். தற்பொழுது இச்சுவடி இந்நிறுவனத்தில் ஓலைச் சுவடி நூலகத்தில் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

''பெண்ணரசி தவஞ்செய்து பெற்றிடுஞ் சுதையெனும்
புருஷா தேவி கதையைப்
பெருமையுட னேவில்லிற் பாடவே சுவடியாய்ப்
பெருகவே பண்ணி வைத்த
முன்னவர் மொழிவிடா திக்கொல்ல மாயிரத்
தொருநூற்றுப் பன்னி ரண்டில்
முதல்மாதம் புகர்வாரம் முற்பக்கப் பஞ்சமி
முற்பகுதி அத்தம் நாளில்
விண்மணி யெனும் நாடார் குலத்தவர் கூடிவீற்
றிருக்கும் அகத் தீசர் புரத்தில்
விருத்தல்செய்கு ஆறுமுக பெருமாள் நாடார்
விளக்கி யெழுதுங் காதையில்'' (44-49)

என இந்நூலில் காணப்படும் வரிகள் மூலம் நூலின் காலம் கொல்ல மாண்டு 1112 (1937 A.D.) என்பதை அறியமுடிகிறது. மேலும் இக் கதைப் பிரதி செய்து முற்றுப் பெற்றது மேற்படி ஆண்டில் சித்திரை மாதம் வெள்ளிக்கிழமை என்பதும் புலப்படுகிறது. இச்சுவடியைப் பிரதி செய்த வர் அகஸ்தீஸ்வரத்தைச் சார்ந்த ஆறுமுகப் பெருமாள் நாடார் ஆவார் என்பதும் தெளிவாகிறது.

**சுவடியியல் தேர்ச்சி**

இச்சுவடியைப் படியெடுத்தவர் பல நூல்களை ஏட்டில் பிரதி செய்வ தில் வல்லவர் என்பதை இவரால் எழுதப்பட்ட, ஆசியவியல் ஆய்வு நிறுவ

னத்துச் சுவடி நூலகத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ள பல கதைப் பாடல்கள் காட்டும். அவ்வகையில் இவரால்,

1. அரவமுத்து கதை
2. ஆமை அம்மானை
3. உச்சினி மாகாளி கதை
4. கஞ்சன் செயலினை அழித்த கதை
5. சித்திரபுத்திர நயினார் கதை
6. செங்கிடாய்க்காரன் கதை
7. நாலுமந்திரி கும்மி
8. பெருமாள்சுவாமி கதை
9. மார்க்கண்டன் பிறவி
10. முத்தாரம்மன் கதை
11. வலைவீசின கதை
12. வள்ளியம்மன் கதை

ஆகிய கதைப்பாடல்கள் செப்பமுற பிரதி செய்யப்பட்டுள்ளன. இக்கதைப் பாடல்கள் பெரும்பாலும் வில்லுப்பாட்டு வகை சார்ந்தனவே. இதனால் கதைப்பாடல்களைச் சிறந்த இசையமைதியோடு பாடும் புலமையையும் இவர் பெற்றிருந்தார் என்பது பெறப்படும்.

## ஆசிரியர் சமயம்

இந்நூலாசிரியர் சைவ சமயத்தைச் சார்ந்தவராகக் காணப்படலாம். கணபதி துதி, முருகன் துதி, சரஸ்வதி துதி மற்றும் குரு வணக்கம் என்கிற முறையில் இறைவாழ்த்தை அமைத்துள்ளார்.

''கறைமிடற் றண்ண லீன்ற
கணபதி காப்பு தானே (27)

— என்னும் பாடல் வரி இந்நூலாசிரியரது சிவபக்தியைப் புலப்படுத்தும். மேலும் நூலுள் பலவிடத்தும் சிவபெருமானைக் குறித்த பல அடைமொழிகளோடு கூடிய சொற்றொடர்கள் இந்நூலாசிரியரைச் சைவ சமயம் சார்ந்தவராகக் காட்டுகிறது.

## பாட்டுவகை

1643 வரிகள் நீளமுடைய இக்கதைப்பாடல் பல்லவி, அனுபல்லவி, சரணங்கள் என்னும் அமைப்பிலுள்ள தரு என்னும் யாப்பு வகை, சிந்து, எண்சீர் ஆசிரிய விருத்தங்கள், பன்னிரு சீர் ஆசிரிய விருத்தங்கள், அறுசீர் ஆசிரிய விருத்தங்கள் ஆகியன கொண்டு அமைகின்றன.

இவற்றுள் ஆசிரியராலேயே விருத்தம் என்கிற தலைப்பிட்டு 30 பாடல்கள் தரப்பட்டுள்ளன. விருத்த நடை மாற்றம், பாவகை மாற்றம் ஆகியவற்றை உணர்த்துவதற்கு ஏற்ற வகையில் ஆசிரியர் சுவடியில் அங்கங்கே 'வேறு' என்ற சொல்லாட்சியைக் கையாண்டுள்ளார்.

## பதிப்பு முறை

''முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவர் பொற்புலவர் — அன்னோர்
நடையிடையத் தம்வழியே நாட்டி மொழிமாற்றல்
கடையிடையர் மாட்டுவினை காண்''

(கலித்தொகை — பதிப்புரை)

என்பது வழி சுவடிச் செய்யுளின் மூல் வடிவத்தை விருப்பப்படி மாற்றுவதற்குப் பதிப்பாசிரியர் எந்த உரிமையும் உடையவர் அல்லர் என்பது பெறப்படும். என்றாலும் சுவடியில் படியெடுப்போரால் ஏற்பட்ட எழுத்துப் பிழைகளை நீக்க வேண்டிய கடமை பதிப்பாசிரியரைச் சார்ந்தது என்கிற அடிப்படையில் சிலவிடங்களில் திருத்தங்கள் தரப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| கெற்பம் நிச்சயமாய் | — 271 |
| பூவுலகில் அல்லோருங்காண | — 272 |
| பண்டுவுலகாண்ட சேரசோளனுடன் | — 332 |
| ஒருதர் வரவில்லாமல் | — 637 |

என்னும் இத்தொடர்களில் உள்ள எழுத்து மாற்றங்கள், பிழைகள், கொச்சைச் சொல் வடிவங்கள் ஆகியன முறையே 'கருப்பம்', 'எல்லோரும்', 'சோழன்' 'ஒருத்தர்' என்பனவாகத் திருத்திப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இப்படித் திருத்தம் பெற்றவை பாடல்களில் தனித்துச் சுட்டப்படுகின்றன.

பெண்களால் பெண்களுக்கு என்று அரசு நடத்தப்படும் கதையே இச் சுவடியின் மையக்கருத்தாக அமைகிறது. பெரும்பாலும் பலவிடங்களில் பேரரசி மற்றும் நூலின் தலைமைப் பாத்திரமான புருஷாதேவி இருவரும் பெண்ணரசியர் எனக்குறிப்பிடப்படுகின்றனர். ஆகவே, ஏட்டில் அமைந்து காணப்படும் 'புருஷாதேவி கதை' என்பது தமிழாக்க முறையில் இந் நூலுக்குப் 'பெண்ணரசியர் கதை' என்கிற த்லைப்பு கொடுக்கப்பட்டு மாற்றப்படுகிறது.

பெண்ணரசியர் தெய்வங்களாக மாறிய பிறகு அவர்கள் கன்னியாகுமரி மாவட்டத்தில் எழுந்தருள, அத்தெய்வங்கள் மக்களால் வழிபடப்பட்டன. மேலும் இத்தெய்வங்களுக்குப் பலவிடங்களில் கோயில்களும் எழுப்பப்பட்டன. அக்கோயில்கள் பதிப்பாசிரியரால் புகைப்படம் எடுக்கப்பட்டுத் தேவையான இடங்களில் நூலில் சேர்க்கப்பட்டுள்ளது.

1. சின்னத்தம்பி கதை
2. உச்சினிமாகாளி கதை
3. குறுக்களாஞ்சி கதை
4. சாகுந்தலை நாடகம்
5. பெருமாள் சுவாமி கதை
6. பலவேசஞ் சேர்வைக்காரன் கதை
7. வெங்கலராஜன் கதை
8. பூலித்தேவன் சிந்து
9. அண்ணன்மார் கதை
10. சந்தனத்தேவன் கதை

— எனப் பத்து கதைப்பாடல்களை வெளியிட்ட ஆசியவியல் ஆய்வு நிறுவனம் இவ்வகையில் தொடர்ந்து 'பெண்ணரசியர் கதை' என்னும் இக்கதைப் பாடலையும் இவண் வெளிக்கொணர்கிறது.

## நன்றி

'பெண்ணரசியர் கதை' என்னும் ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் சுவடி நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வந்த இச்சுவடியைப் பதிப்பிக்கும்படி எங்களைப் பணித்த நிறுவன இயக்குநர் **டாக்டர் ஜி. ஜான் சாமுவேல், டாக்டர் ஷு ஹிகோசகா** ஆகியோருக்கு நாங்கள் என்றும் நன்றிக் கடப் பாடுடையோம்.

இக்கதைப்பாடலைக் குறித்த காலத்திற்குள் எவ்விதம் முடிப்பது எனத் தெரியாது நாங்கள் கலங்கி நின்ற வேளையில் எங்களை ஊக்கமூட்டிச் சுவடியிலிருந்து பிரதி செய்த பாடல்களைச் செப்பனிட்டுத் தந்தவரும், ஆய்வுரைக்கு அரிய கருத்துக்களைக் கூறியவரும், 'அச்சுப்படியைப் பார்த்துச் செம்மைபடுத்தியவருமாகிய சுவடியியல் துறைத்தலைவர் டாக்டர் பூ. சுப்பிரமணியம் அவர்களுக்கு என்றும் நன்றியுடையோம்.

சொல்லடைவு, அச்சுப்படியைத் திருத்துதல் ஆகிய பணிகளில் பெரிதும் ஒத்துழைத்த எங்கள் சுவடித்துறையைச் சார்ந்த திருவாளர்கள் எம். மருதமுத்து, எம். பரிமணன், சி. அருணாசலம், செல்வி இராதா ஜெயலட்சுமி ஆகியோருக்கு நன்றி. சுவடிகளையும் நூல்களையும் தந்துதவிய திருமதி ச. சாந்தகுமாரி, தட்டச்சில் தன் முழு உழைப்பையும் தந்த திருமதி நே. உமாராணி அவர்களுக்கும் நன்றி. அழகுற அட்டைப்படம் உருவாக்கிய திரு. அ. செ. நடராசன், அழகிய புகைப்படங்களை எடுத்துத் தந்த ஆனந்தம் நிழற்பட உரிமையாளர் சங்கர் அவர்களுக்கும் நன்றியுடையோம்.

இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த பாவை அச்சகத் தாருக்கும் நன்றி கூறக் கடமையுடையோம்.

**கி. ஜெயகுமார்**
**த. பூமிநாகநாதன்**

# ஆய்வுரை

'பெண்ணரசியர் கதை' என்னும் இந்நூலின் அடிப்படையில் கதை, கதைப்பாடல், வில்லுப்பாட்டு என்பன ஆய்வுக்கு உரியவையாகின்றன.

## கதை

கதைத்தல், கதைப்பு என்பன ஒருவரோடு ஒருவர் பேசுதல், உரையாடு தல் என்னும் பொருளில் பயன்படுத்தப்படுவன. அதிகமாக நம்பமுடியாத அளவில் மிகுதிப்படுத்திக் கூறுவதும் தேவையில்லாவற்றை இயைத்துக் கூறுவதும் பொய்யான செய்திகளை மிகைப்படுத்திக் கூறுவதுமாகிய செயல்களைக் கதைவிடுதல், கதை அளத்தல் என்னும் தொடர்களால் கூறுவதுண்டு. 'அவன் சொல்லுவது வெறும் கதை'; 'கதை விடுகிறான் ; 'ஏன் கதையை வளர்த்துகிறாய்'?; 'அவன் கதையும் இன்றோடு முடிந்து போய்விட்டது'; 'அவன் கதை எல்லோருக்கும் தெரிந்தது தானே!; 'கதை கட்டுகிறவர்கள் மத்தியில் வாழவே முடியாது' என்னும் தொடர்கள் இல்லாத, நிகழாத செய்திகளைக் கற்பித்துக் கூறுவதாக எடுத்துக் காட்டு கின்றன.

## கதையின் பலன்

கதை என்பது எக்காலத்திலும் எல்லோராலும் விரும்பப்படுவ தாகும். இனிய பொழுதுபோக்காகவும் எளிய இலக்கியமாகவும் கதை அமைகின்றது. மக்களின் கவனத்தை எளிதாகக் கவரும் தன்மையில் பெரும் பாலான கதைகள் எழுந்து மக்களிடம் செல்வாக்குப் பெற்றன. கேட்ட வுடன் புரியும் தன்மை இருப்பதனால் பாமர மக்களும் குழந்தைகளும் கதையை மிகவும் விரும்பி ஏற்றனர். சிறு குழந்தைகள் முதலாகிய மக்களின் கவனத்தை ஈர்த்து, உள்ளத்தை மாற்றி அரிய பெரிய செயல்களில் ஈடு படச் செய்தவைகள் கதைகள். அரும்பெரும் தலைவர்களையும் வீரர்களை யும் உருவாக்கியவை கதைகளே.

## கதையின் விளக்கம்

ஏதேனும் ஒரு சிறு செய்தியை அல்லது ஒரு சிறு நிகழ்ச்சியை அல்லது ஒரு கற்பனைக் கருத்தை மையமாகக் கொண்டு சுவைபட வளர்த்திச் சொல் வது கதையெனப்படுகிறது. 'பாட்டி கதை சொன்னால் கேட்டுக் கொண்டே யிருக்கலாம்' என்பதும் கதை நிகழ்ச்சியைச் சுட்டுவதாகும்.

வாயுரையாகக் கூறப்படுவதனால் 'கதை' என்ற பெயர் தோன்றி யிருக்கிறது என்பாரும் உண்டு. தமிழகத்தைப் பொருத்தவரை பாரதம், இராமாயணம் போன்ற இதிகாசங்கள், புராணங்கள் போன்றவற்றில் கூறப்படும் சிறுசிறு நிகழ்ச்சிகள் கதைப்பொருளாகப் பயன்பட்டு வந்துள் ளன. 'நெல்லை, குமரி ஆகிய மாவட்டங்களில் மிகப் பரவலாக வழங்கப்

படும் நாட்டுப்புறத் தெய்வக் கதைகள் பெரும்பாலும் நடந்த கதைகளாகவே தோன்றுகின்றன'[1] —என்பது நடந்த நிகழ்ச்சிகளையும் கதையாகக் கூறி யுள்ளனர் என்பதைப் புலப்படுத்துகிறது.

### பெண்கள் பற்றிய கதைகள்

பெண்களின் சிறப்பை மையமாகக் கொண்ட, அமராவதி கதை, அமிர்தவல்லி மாலை, இசக்கி கதை, கன்னிமார் கதை போன்ற பல கதை களும் தமிழகத்தில் வழங்கி வந்துள்ளன.[2]

### கதைப்பாடல்

ஒரு செய்தியையோ நிகழ்ச்சியையோ, புராணக் கருத்தையோ கற் பனைக் கருத்தையோ, சமூகக் கருத்தையோ கருப்பொருளாகக் கொண்டு பாட்டு வடிவிலே அமைத்து வழங்கும் நாட்டுப்புற கலைவடிவமே கதைப் பாடல் எனப்படுகிறது.

வாய்மொழியாகக் கூறிவந்த ஒரு கதையைக் கதைப்பாடலாக்கிக் கூறும் பொழுது அவற்றிடையே உள்ள இசைத்தன்மை மட்டுமே வேறுபட்டதாகக் காணப்படும்.

### கதை கதைப்பாடல் ஆகும் முறை

ஒரு கதையை எடுத்துக் கொண்டு அல்லது உருவாக்கிக் கொண்டு நாட்டுப்புற பாடல்கள் இசை அமைப்பில் எளிய முறையில் அமைத்து வழங்குவது கதைப்பாடலாகிறது.

''கதையொன்றை உள்ளடக்கமாகக் கொண்டு, மக்கள் முன்னர் எடுத் துரைக்கப்பட்டுப் பரம்பரையாகப் பாடப்பட்டு வருவது கதைப்பாட லாகும்.''[3]

''வாய்மொழிக் கதைகளும் வாய்மொழிப் பாடல்களும் இருவேறு அமைப்பாக வளர்ந்திருக்க வேண்டும். இரண்டும் இணையும் முயற்சியாகக் கதைப்பாடல்கள் தோன்றி வளர்ந்திருக்க வேண்டும்''[4] என்பர்.

பொதுவாக வாய்மொழிப் பாடல்கள் ஒரே உணர்வின் அடிப்படை யில் குறுகிய அளவில் அமைகின்றன. ஆனால் கதைப்பாடல்கள் பல்வேறு உணர்வுகளின் தொடர்பாக எழுந்து நீண்ட பாடல்களாக அமைகின்றன.

---

1. தமிழில் கதைப்பாடல்கள், ப. 8.

2. இவற்றோடு தொடர்புடையனவாக அல்லியரசாணி மாலை, ஆரவல்லி சூரவல்லிகதை, உச்சினிமாகாளி அம்மன் கதை, கால கன்னியம்மன் கதை, சாவித்திரி பதம், சித்திரலேகா கதை, சுந்தரி கதை, தோட்டுக்காரி கதை, நல்லதங்காள் கதை, ந ளாயினி கதை, நீலி கதை முதலிய பல கதைகள் காணப்படுகின்றன.

3. நாட்டார் வழக்காறுகள், ப. 76.

4. தமிழில் கதைப்பாடல்கள், ப. 6.

## கதைப்பாடல்களின் உள்ளீடு

மகிழ்ச்சியால் ஏற்படும் மனக்கிளர்ச்சி, அவலத்தால் ஏற்படும் உள்ளக் கொதிப்பு, அன்பினால் உண்டாகும் இணைப்பு, காதலின் விளைவால் உண்டாகும் வலிமை, வீரத்தின் விளக்கத்தால் உண்டாகும் ஊக்க உணர்வு போன்றவை கதைப்பாடல்களின் அடிப்படை உணர்வுகளாக இருந்து மக்களைக் கவர்வதைக் காணலாம்.

ஆற்றல் சான்ற மனிதர்களைத் தலைவராகவும் தெய்வங்களாகவும் ஏற்றுக் கொள்ளுவது தமிழரிடையே உள்ள ஒரு உயர்ந்த பண்பு ஆகும். அச்ச உணர்வுகளும் பழிவாங்கும் மனப்பான்மைகளும் கதை கேட்போர்க்கு ஆர்வத்தைத் தூண்டவல்லதாக அமைந்து விடுகின்றன.

## கதைப்பாடல் நிகழுமிடங்கள்

கதைப்பாடல்களை ஜமீன்களின் அவையில் அடிக்கடி நிகழ்த்தி ஜமீன் தார்களின் உள்ளத்திற்கு மகிழ்ச்சியூட்டுவதுண்டு. தெய்வங்களைச் சாந்தி செய்யும் நோக்கில் ஆலயங்களில் நடைபெறும் திருவிழாக்காலங்களில் இறைபொருள் அமைந்த கதைப்பாடல்கள் மிகுந்த பக்தியுணர்வோடு இரவில் நெடிது நேரம் நிகழ்த்தி வருகின்றனர். உழைப்பாளர்களின் களைப்பைப் போக்கிக் கொள்ளவும் அதே சமயம் மக்களிடையே உயர்ந்த கருத்துக்களைப் பரப்பவும் கதைப்பாடல்களை நிகழ்த்துவதும் வழக்கமாக இருந்து வருகிறது.

## வில்லுப்பாட்டு

கதைப்பாடல்கள் விழாக்களில் பயன்படும் பொருளாக ஏற்கப்படும் பொழுது அவற்றில் படைப்பு கலைக்கூறுகள் சிறிது சிறிதாக மாற்றங் காணத் தொடங்கின. அவ்வகையில்தான் வாய்மொழிப் பாடல்களாகவே வழங்கப்பட்டு வந்த கதைப்பாடல்கள் வில்லுப்பாட்டு, உடுக்கடிப்பாட்டு, கணியான்கூத்து ஆகிய இசைப்பாடல் வடிவங்களோடு இணைக்கப்பட்டன.

## கதைப்பாடல்களும் இசையும்

கதைகள் இசைப்பாடல் பெற்று இணையும் பொழுது அந்தக் கதைப் பாடல்கள் மக்கள் மனத்தில் தனித்த இடத்தைப் பெற்றுவிடுகின்றன. கேட் போர் தங்களையே மறந்து விடுகின்றனர். இசையிலும் இசைக்கருத்திலும் ஊன்றிவிடுகின்றனர். அவை உள்ளத்தில் சோர்வை நீக்கி நிலைத்து விடு கின்றன.

## தமிழகத்தில் இசைப்பாடல் வடிவங்கள்

கணியான் கூத்து, குறவஞ்சி, தெருக்கூத்து, பள்ளு, யட்சகானம், வில்லுப்பாட்டு போன்ற பல்வேறுபட்ட இசை வடிவ வகைகள் இத்தகு நன்மை பயக்கக் கூடியனவாகும். கணியான் கூத்து மதுரை மற்றும் தென்

மாவட்டங்களில் அதிகமாகக் காணப்படுகின்றன. தெருக்கூத்து தென்னார்க்காடு, வடார்க்காடு மற்றும் தஞ்சை, நாகை காய்தே மில்லத் மாவட்டங்களில் பரவலாக நடிக்கப்பட்டு வருகின்றன. யட்சகானம் கருநாடகம், ஆந்திர பிரதேச மாநிலங்களில் அதிக ஆட்சியைப் பெற்றுள்ளன. குறவஞ்சி, பள்ளு முதலியன நாட்டுப்புற இலக்கிய வடிவத்தில் பல நூல்களாக முகிழ்த்துள்ளன.

## 'வில்' இசைக்கருவி

வில் என்பது ஒரு நீண்ட கம்பின் இரு முனைகளையும் வளைத்துக் கயிற்றால் கட்டி அம்பு எய்வதற்குப் பயன்படுத்தும் ஓர் போர்க்கருவி. சிவபெருமானும் கொற்றவையும் தாங்கி நிற்கும் பெருமைக்குரியது வில் என்னும் கருவி. அது தமிழர்தம் கொடியிலும், இலட்சனையிலும் மூவகை சின்னங்களுள் ஒன்றாகவும் சேரர்தம் தனிச்சின்னமாகவும் அமைந்த பெருமைக்குரியது.

வில்கதிர் முனைக்குப்பிகள், வடம், மணிகள் அவற்றைக் கோக்கும் வளையல்கள், கம்பிகள் ஆகியவற்றால் அலங்கரித்து அந்த வில்லைத் தரையில் படியுமாறு நிறுத்தி வைத்துக்கொண்டு கோலால் தட்டியவாறே கதைப் பாடலைப் பாடியும் இடையிடையே உரைநடையில் கதையைக் கூறியும் நிகழ்த்தப்பெறும் ஒரு நாட்டுப்புறக் கலையே வில்லுப்பாட்டாகும்.

## வில்லிசை தோன்றிய விதம்

''தமிழ்ப் பொதிகைக் காட்டிடத்தே வேட்டையாடப் புகுந்த வில்வீரன் ஒருவன் பகற்பொழுதெல்லாம் வேட்டையாடிக் களைத்துச் சோர்ந்தவன், மாலை நேரத்தில் செழித்த மரமொன்றின் அடியில் அமர்ந்தான்; தன் கையமர்ந்த வில்லைத் தரையில் சார்த்தி அம்புகோலால் அவ்வில்நாணில் மெல்லிய தாளவோசை தோன்ற அடித்து, அத்தாளத்திற்கேற்ப இன்னிசையும் தமிழ்ப்பாடல் பாடித் தன் களைப்பு நீங்கப் பெற்றான்''.[5]

''வேட்டைத் தொழிலிலும் போர்த் தொழிலிலும் பயன்படுத்தப்பட்ட வில்லின் அடிப்படைக் கூறில் அமைந்த நாண் அதிர்வினால் விளைந்த ஒலியே பின்னாளில் படிப்படியாக வளர்ச்சி பெற்றுச் சிறந்த யாழ் வகைகள் அனைத்திற்கும் மூலகாரணமாக அமைந்தது.''[6] என்பன முறையே

5. தமிழ் வில்லுப்பாட்டுகள், ப. 73

6. மேற்படி, ப. 4.

வில்லுப்பாட்டின் தோற்றத்தையும் தொடக்க நிலையையும் எடுத்துக் காட்டும் சான்றோர் கருத்துக்களாகும்.

> ''வினாயகர் குடம்போட — வெற்றி
> வேலவர் வலம்போட
> பார்வதியாள் வில்லடிக்க — எங்கள்
> பரமசிவம் கதைகள் கேட்க''[7]

## வில்லுப்பாட்டு வழங்கப்படும் இடங்கள்

இவற்றுள் வில்லுப்பாட்டு நெல்லை கட்டப்பொம்மன், வ. உ. சிதம்பரனார், கன்னியாகுமரி மாவட்டங்களில் சிறப்பாகப் போற்றப்படும் ஓர் இசைப்பாடல் வடிவமாகத் திகழ்கிறது. இதன் நோக்கத்தைக் குறித்து, ''சிற்றூர்த் தெய்வங்களுக்கு வழிபாடு நிகழும் 'கொடை' விழாக்காலங்களில் தெய்வ வரலாறுகளையும் தெய்வநிலை பெற்ற வீரர் வரலாறுகளையும் மக்களுக்கு எடுத்துச் சொல்லப்பயன்படும்''[8] எனக் கூறுவர்.

தென் மாவட்டங்களில் வில்லுப்பாட்டு இசைவடிவத்தின் ஊடே கதையைக் கூறுவது பெருவழக்கமாக இருக்கிறன்றது. இன்னாரால் இன்ன காலத்தில் இயற்றப்பட்டன என கூற முடியாத தன்மையில் அமைந்த இக் கதைப்பாடல்கள் வில்லுப்பாட்டிற்கு என அமைந்த பாவமைதியில் பாடப் பெற்றன. ''இருசீர் அடிகள் இரண்டிரண்டாகத் தொகுத்து வர, இரண்டாம் அடியில் அடிமோனை அமைய, முதலடி இரண்டாம் சீருக்குப் பின் (சந்த) இசைக்கேற்றவாறு தனிச்சொல் கொண்டு அமைவதான ஓர் பா அமைப்பிலேயே வில்லுப்பாட்டுக் கதைகள் ஆரம்ப காலத்தில் பாடப் பட்டன என அறிய முடிகின்றது. கால வளர்ச்சியில் இத்தகைய பாடல்களுக்கு இடையே கிளிக்கண்ணி, சிந்து, கும்மி, விருத்தம், மகுடி எனப் படும் பாம்பிசை, தரு மற்றும் பல்லவி, சரணம் முதலான அமையும் 'கீர்த்தனைகள்' ஆகிய பல்வேறு பா அமைப்புகள் இடம்பெறலாயின எனவும் அறியலாம்''[9] என வில்லுப்பாட்டின் பாவமைதியைப் பற்றிக் குறிப் பிடுவர்.

## பெண்ணரசியர் கதை

'புருஷாதேவி கதை' என்கிற தலைப்பிலமைந்த இக்கதைப்பாடல் வில்லுப்பாட்டு இசை வடிவத்தில் கன்னியாகுமரி மாவட்டத்தில் பரவலாகப் பலவிடங்களில் பாடப்பெற்று வருகிறது. தாய்வழி சமூகத்தைப் பிரதிபலிக்கும் இக்கதைப்பாடலில் ஆட்சிபீடம் ஏறுவோர் பெண்களாகவே திகழ்கின்றனர். ஆகவே இக்கதைப்பாடலுக்குப் 'பெண்ணரசியர் கதை' என்கிற தலைப்பு கொடுக்கப்படுகிறது.

---

7. மேற்படி, ப. 73
8. மேற்படி ப. 3.
9. மேற்படி, ப. 20.

கதைச்சுருக்கம்

விநாயகரை வணங்கித் தொடங்கி வில்லுப்பாட்டு இசைவடிவில் இக்கதை கூறப்படுகிறது. திருவணையார் அரசியானவள் நாடு சிறக்க தன் ஏழு தோழி மார்களோடு பெண்கள் வாழும் நாட்டினை ஆட்சி செய்து வந்தாள். அனைத்துச் செல்வங்களும் பெற்ற அப்பெண்ணரசி மகப்பேறு இன்றித் தவிக்கப் பெண்ணுக்குக் கருப்பம் உண்டாக்கும் சிங்களக் காற்று வீசியதால் கருப்பம் தரித்தாள்.

மாதம் ஒவ்வொன்றும் சென்றிட பத்தாம் மாதம் தோழியர்களாலும் அரச சேவகர்களாலும் கட்டப்பெற்ற தனிமாடத்தில் நாட்டின் நியதிப்படி பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். பிறந்த மகளுக்குப் புருஷாதேவி என்று பெயரிட்டு வளர்த்தாள்.

ஏழு வயதானவுடன் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்க விரும்பித் தகுந்தவர்பால் புருஷாதேவியை அரசியும் அனுப்பி வைத்தனள். அவளும் சிறந்த கல்விப் பயிற்சியோடு சிலம்பாட்டம், வாள்சண்டை, நடனம், குதிரையேற்றம், வேதக் கல்வி அனைத்தும் கற்றுத் தேர்ச்சி பெற்றாள்.

பன்னிரு வருடமும் புருஷாதேவிக்குக் கழியவே வழக்கம் போல் கருவை உண்டாக்கும் சிங்களக் காற்று வீசியது. அதனால் கண்ணன் அருளாலே கருப்பமும் உண்டாகி ஆறுமாதக் கருப்பவதியாகியிருந்தாள்.

புருஷாதேவி கருப்பம் ஏற்றது முதற்கொண்டு அரசியின் தோழியர்களும் நாட்டு மக்களும் ஒன்று கூடியே சிறந்ததொரு கோட்டையை வானம் முட்டக் கட்டத் தீர்மானித்தனர். இவ்விதமாய் மூன்றே மாதங்களில் கோட்டையைக் கட்டி முடிக்கவும் புருஷாதேவியும் ஒன்பது மாதக் கருப்பத்தைச் சுமந்தவளாய் இருந்தாள்.

அண்டை நாட்டைச் சேர்ந்த செம்பன்மாமுடி என்னும் வேந்தன் ஒருவன் காசித் தீர்த்தம் ஆடிட வேண்டி யாத்திரை புறப்பட்டுச் செல்லும் இடையில் பெண்ணரசியாலும் புருஷாதேவியாலும் கட்டப்பட்ட கோட்டையின் வழியே செல்ல அனுமதி வேண்டினான். ஆனால் பெண் கள் வாழும் இடத்தில் ஆண்கள் செல்ல நியாயமில்லை எனக்கூறி அனுமதி மறுக்கப்பட்டது. செம்பன்மாமுடி மன்னன் இதனால் சினந்து கப்பம் கேட்க, பெண்ணரசியாள் மறுக்க இருவருக்குமிடையே பெரும்போர் நடைபெற்றது.

முதலில் நடைபெற்ற போரில் யானை, குதிரை, காலாள் படைகளோடு பெண்ணரசி, புருஷாதேவி, தோழியர்கள் மற்றும் வீராங்கனையர் அனைவரும் திறம்பட நடந்து கொண்டமையால் செம்பன் மாமுடி தோற்றுப்போனான்.

தன் நண்பனான காடத்தி நாட்டு அரசனானவனைச் சந்தித்துப் பெண்படையால் தான் தோற்றுப் போன அவமானத்தைத் துடைக்க வேண்டும் என்ற முனைப்பில் செம்பன்மாமுடி துணைப்படையைப்

பெற்று மீண்டும் போருக்கு வந்தான். இரண்டாம் முறையாக நடந்த இப்போரில் தன் திறமைகள் அனைத்தையும் காண்பித்துப் பெண்ணரசியின் படையினர் போரிட்டனர். எனினும் போரில் தாங்கள் தோல்வியினையைத் தழுவ வேண்டிய நிலை ஏற்படுமோ என்கிற எண்ண மேலீட்டால் முதலில் தோழியர் அறுவரும் தாங்களே வாளால் உடல் பிளந்து மாண்டனர். இதைப் போன்றே பெண்ணரசியும் வாளால் உடல் பிளந்து கொண்டு உயிர் விட்டாள். நிறைமாதக் கர்ப்பிணியாக இருந்து கொண்டு போரில் தீவிரமாக இருந்த புருஷாதேவியும் மனம் நொடிந்து கையிலுள்ள சூலத்தை எடுத்து வயிற்றிலுள்ள குழந்தையைப் பிடுங்கி எறிந்து மாண்டு பட்டாள்.

செம்பன்மாமுடி மன்னனும் கா_த்தி கோனும் இது போன்ற கற்பர சியர்களை யாம் இதுவரை கண்டதுமில்லை, கேட்டதுமில்லை எனக்கூறி வாளைத் தரையில் நட்டு அதன்மீது விழுந்து உயிர்மாய்ந்தனர்.

உயிர்விட்ட பெண்ணரசியார் முதற்கொண்டு காடத்தி மன்னன் ஈறாக அனைவரும் சிவன் முன்பு சென்று வேள்வியில் மூழ்கி வரங்கள் பல பெற்று இசக்கி, ஆட்டுக்கார இசக்கி, செங்கிடாய்க்காரன், கழுக்காரன் என்கிற பெயர்களைப் பெற்றுப் பல துணை வாதைகளோடு அனைவரும் மதுரை மாநகரை அடைந்து ஊர் மக்களுக்குப் பலவித துன்பங்களை விளை வித்தனர்.

வேலன் என்னும் மந்திரவாதி இத்தேவதைகளை மக்களின் துன்பத்தி லிருந்து காக்க மன்னனின் வேண்டுகோளின்படி மதுரை அடைந்து வாதை களைப் பிடித்து அடைக்க முயற்சித்தான். துர்தேவதைகளின் கொடிய சக்தியில் மாட்டி அதனால் வேலன் உயிர் துறந்தான்.

வேலனைக் கொன்றபிறகு ஏழுகாணி மலை என்னும் இடத்தில் மக்க ளால் செய்யப்பட்ட பூசையில் சாந்தி அடைந்து வெள்ளாளர்களில் ஒரு பிரிவினராகிய கரையாளர் நடத்தும் கூத்தினைப் பார்க்கக் கன்னியாகுமரி மாவட்டம் தாழாக்குடி என்னும் ஊரினைத் தெய்வங்கள் அடைந்தன. மிகுந்த மகிழ்ச்சியில் தேவதைகள் கும்மாளமிடவே அதனால் ஊரார்கள் அச்சம் அடைந்து அவைகளைச் சாந்திப்படுத்த நீலன் குறுப்பு என்பவன் வயலில் கிழக்கு முகமாகச் செந்தாழம் மூடு அருகில் குளத்தின் எதிரே கோயில் எழுப்பினர்.

தன்வயலில் கோயில் கட்டியதை அறிந்த நீலன் குறுப்பு கோயிலை எரித்துவிடவே வாதைகள் சினம்கொண்டு அவனை அழித்து விடுவதோடு அவன் வாழும் மேலாங்கோட்டிற்கு அருகிலுள்ள கொக்கோட்டூர் மக்க ளுக்கும் துன்பம் விளைவிக்கின்றன. திருவிதாங்கூர் மன்னரால் சிறப்பு பூசை நடத்தப்பட்டு அத்தெய்வங்கள் சாந்தி செய்யப்படுகின்றன. மன்ன னின் பூசையை ஏற்ற தெய்வங்கள் கன்னியாகுமரியில் தீர்த்தமாடக் கொக் கோட்டூரிலிருந்து புறப்பட்டு பல ஊர்களையும் கடந்து சென்றன.

கன்னியாகுமரியில் தீர்த்தமாடிய இவ்வாதைகள் பகவதியம்மனிடம் வேண்டிய வரங்களைப் பெற்றுத் தெங்கன்புதூர் என்னும் ஊரின் அருகிலுள்ள குளத்தங்கரை மறுகால் அருகேயுள்ள ஐயனாரை வழிபட்டு நீரோடை மார்க்கத்தில் ஊரார்கள் பூசை வைக்க அங்கு மக்களுக்கு அருள் பாலித்து நின்றன.

தெங்கம்புதூர் அருகேயுள்ள காட்டு விளையில் திக்குக்குடி நாடார் பரம்பரையினர் இத்தெய்வங்களை வணங்கித் தம் ஊரில் சிறந்ததொரு கோவில் கட்டி, அதற்குப் பூசைகள் செய்து சாந்தி செய்து வந்தனர். இவ்விதம் சிறிது காலம் அங்கிருந்த இத்தெய்வங்கள் சுக்குப்பாறைதேரி என்னும் ஊருக்கு வந்தன.

தாஷ்டீகனம்மையடிமை நாடார் வாழும் மணிகட்டி விளையிலே தங்களுக்குக் கோவில் கட்ட வேண்டும் என்று தெய்வங்கள் வேண்ட அவ்வூரின் கன்னி மூலையிலே முதன்மை தெய்வங்களுக்குக் கோயில் கட்டப்பட்டன. பரிவார வாதைகளுக்குப் பூடங்கள் போடப்பட்டுச் சிறப்பு சாந்தி பூசைகள் செய்யப்பட்டன. இவ்வூரார்களும் பூசை நேர்த்திக்கடன் முதலியவற்றைத் தொடர்ந்து செய்துவரவே தெய்வங்களும் சாந்தியடைந்து அவ்விடத்திலேயே நிலைபெற்று இருந்தன.

### புருஷாதேவி மற்றும் தெய்வங்களுக்கான கோவில்கள்

சக்தியின் அடையாளமாகவும், தாய்வழி சமூகத்தின் எச்சமாகவும் நினைத்துப் பார்க்கத் தகுந்த இத்தெய்வங்கள் மதுரையிலிருந்து தெற்கு முகமாய்த் தன் பயணத்தைத் தொடர்ந்து கன்னியாகுமரிக்கும் வடமேற்கில் இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் தங்கள் இருப்பிடத்தை நிலை நிறுத்திக் கொள்வதாக இக்கதைப் பாடல் வழி அறிய முடிகிறது.

இக்கதைப் பாடலில் வரும் தெய்வங்களும் சக்தியின் அம்சமாக விளங்கும் மதுரை மீனாட்சி முதற்கொண்ட கன்னியாகுமரி பகவதியம்மன் வரையில் உள்ள இடங்களில் தங்கள் ஆட்சியை நிலைநிறுத்துகின்றன. மேலும் தாய்வழிச் சமூகத்தின் வழியாக வரும் இக்கதைப்பாடல்களின் தலைமை தெய்வங்கள் மதுரையில் முதன்மைத் தெய்வமான மீனாட்சி இருக்கும் இடத்திற்கு வருவதும் அடுத்து சக்தியின் ஆதார இருப்பிடங்களில் ஒன்றாக மதிக்கப்படும் கன்னியாகுமரி பகவதியம்மன் கோவிலில் வரம் வேண்டி நிற்பதும் அச்சக்தியின் இருப்பிடத்தின் அருகாமையிலேயே உறைந்து விடுவதும் இவண் நோக்கத்தக்கன.

### தெய்வங்களின் இருப்பிடங்கள்

மதுரையிலிருந்து தன் வலிமையை மக்களுக்கு உணர்த்தி வரும் இத்தெய்வங்கள் தெற்குமுகமாய் தன் பயணத்தைத் தொடர்கின்றன. அவ்வகையில் சிவபெருமானின் திருவிளையாடல் நடைபெற்ற இடமான மதுரையை இத்தெய்வங்கள் முதன் முதலில் அடைவது பல பின்புலங்களால் சிந்தித்து நோக்குவதற்கு இடந்தருகின்றன.

**மதுரை**

மதுரையம்பதி பெண்வழி சமூகத்திற்கு ஏற்றம் கொடுத்த ஒரு தலம் என்பது புராணிக ரீதியாகவும் இதிகாச ரீதியாகவும் வரலாற்று ரீதியாகவும் சமூக ரீதியாகவும் பெண்மைக்கு ஏற்றம் தருகின்ற அமைப்புடன் திகழ் கின்றன. இன்றும் மதுரையில் வீற்றிருக்கும் சொக்கநாதரைக் காட்டிலும் தலைமைத் தெய்வமாக மீனாட்சியம்மையையே வழிபடபட்டு வருவது குறிப்பிடத்தகுந்தது. இன்றும் இல்லற வாழ்க்கையில் மனைவியின் அதி காரம் மேலோங்கிக் காணப்படும் குடும்பத்தினர் வாழ்க்கை முறையை 'மீனாட்சி ஆட்சி' என்ற சொல்லாட்சியால் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. இதனாலேயே 'உங்கள் வீட்டு ஆட்சி சிதம்பரமா மதுரையா' என்ற பழ மொழி ஏற்பட்டது குறிப்பிடத்தகுந்தது. இத்தகு திருத்தலத்தைப் பெண் தெய்வங்களும் அதன் துணை வாதைகளும் தங்களுக்கு உரிய இடமாகத் தேர்வு செய்வது பொருத்தமாகத் தோன்றுகிறது.

இத்திருத்தலத்தில்தான் வட இந்தியாவின் ஜான்சிராணி போன்று வரலாற்றில் சிறந்த நாயக்கர் குலத்தைச் சார்ந்த இராணி மங்கம்மாள், அதே பரம்பரையில் வந்த மீனாட்சி ஆகியோர்கள் சிறந்த பெண் அரசி களாக இருந்து ஆட்சி நடத்தியுள்ளனர். சேதுபதி சமஸ்தானத்தைச் சார்ந்த வேலு நாச்சியாரும் இவ்வகையில் குறிப்படத் தகுந்தவரே. இதிகாசத்தை ஒட்டி எழுந்த கதைப் பாடல்கள் காட்டும் அல்லி அரசாணி மாலை, பவளக்கொடி மாலை ஆகிய கதைப்பாடல்களும் மதுரையை நிலைக்கள னாகக் கொண்டு ஆட்சி செய்த பெண்ணின் பெருமையைப் பேசும் பாடல் களாகத் தமிழகத்தில் வழங்கி வருகின்றன. சமூக அடித்தட்டிலும் மதுரை மாநகரின் பெண்களின் உரிமைப் போராட்டங்கள் நினைவு கூறத்தக்க னவாக அமைந்தன. அவ்வகையில் மதுரைவீரன் கதையில் வரும் பொம்மி, வெள்ளையம்மாள், நீதியை நிலைநாட்ட புகாரில் இருந்து புறப்பட்ட கண்ணகி ஆகியோர் எல்லாம் சமூக அடிப்படையில் மதுரை மாநக ரிலேயே பெண்மையின் வீர, சமூக நியதிகளை வெளிப்படுத்தியவர் களாகத் திகழ்கின்றனர்.

பெண்வழிச் சமுதாயத்தில் ஏற்ற மிகுந்தவர்களாகக் காணப்படும் இப் பெண் தெய்வங்கள் மதுரை வந்து சேருகின்ற நிலை நூலின் சிறப்புக்கும் பெண்களின் ஏற்றத்திற்கும் ஆசிரியர் கொடுக்கும் தகுந்த இடத்தைப் புலப் படுத்துகின்றன.

**ஏழுகாணி**

ஏழுகாணி மலை தென்காசி அருகில் உள்ள ஓர் ஊராகக் கருதப் படுகிறது. இது குறித்த தெளிவான வரலாறுகளையும் செய்திகளையும அறிந்து கொள்ள முடியவில்லை. ஏழுகாணி மக்கள் தங்கள் ஊர் மலையி லேயே குடியிருக்கிற இத்தெய்வங்களுக்கும் வாதைகளுக்கும் பூசை முதலி யன செய்து சாந்தப்படுத்துகின்ற நிலை இப்பகுதியில் விளக்கப்படுகின்றது.

தெய்வங்களை எல்லாம் கட்டுப் படுத்துகின்றவர்களும் தங்கள் ஏவ லுக்கு அடிபணிய வைக்கின்றவர்களும் ஆன மந்திர தந்திரங்களில் வல்ல

வர்களான வேலன்கள் என்கிற ஆடவர் சமுதாயம் இப்பெண் தெய்வங் களை தம் முதன்மைத் தெய்வங்களாக இப்பகுதியில் வழிபடுவது நோக்கத தக்கது.

**தாழாக்குடி**

கன்னியாகுமரி மாவட்டத்தில் தோவாளை தாலுகாவில் வட கிழக் காகச் சுமார் 8 கி.மீ. தூரத்தில் அமைந்து கிடக்கும் இவ்வூரில் இத்தெய்வங் கள் மற்றும் வாதைகள் பயணப்படுவது பெண்மையை முதன்மைப்படுத்திய தாகவே காணப்படுகிறது. இத்திருத்தலத்தில் சிவனும் சக்தியும் கூடிய ஆகம ரீதியிலான பெருங்கோயில் ஒன்று உள்ளது. எனினும் எவ்விதம் மதுரை யில் சொக்கநாதரை விட மீனாட்சிக்கு முக்கியத்துவம் அதிகமோ அவ் விதமே இங்கும் சிவலிங்கம் நோக்க அழகேசுவரி என்னும் பெயரில் அமைந்த சக்திக்கே முதன்மையிடம் அவ்வூர் மக்களால் தரப்பட்டுள்ளது. அத்தகு யிடத்தை பெண்ணரசியாக இருந்து இறந்துபட்ட புருஷாதேவியும் அவள் தோழிகளும் தேர்வு செய்வது பெண்மையை முதன்மைப்படுத்த வேண்டும் என்ற நெறி அமைந்த ஒரு சிந்தனையாகும்.

**கொக்கோட்டூர்**

கதையின்படி தெய்வங்களும் வாதைகளும் இவ்வூருக்குத் தாழாக்குடி யிலிருந்து வருவதாகச் சித்திரம் தரப்படுகிறது. இவ்வூர் கன்னியாகுமரி மாவட்டம் கல்குளம் தாலுகாவில் நாகர்கோவிலிலிருந்து சுமார் 15 கி.மீ. தொலைவில் மேற்குத் திசையில் அமைந்து காணப்படும் ஓர் ஊர் ஆகும்.

இத்தலம் மேலாங்கோட்டூர் என்னும் ஊரினை அடுத்துக் காணப்படுவ தாகும். இம்மேலாங்கோட்டூர் தாய் தெய்வ வழிபாட்டுக்குரிய தெய்வமான பெரிய இசக்கியம்மன் சின்னியிசக்கியம்மன் என்னும் இரு சக்தி வாய்ந்த பெண் தெய்வங்கள் உறைகின்ற ஊராகும். இத்தெய்வங்கள் உறையும் ஊரின் அருகிலேயே இத்தெய்வங்கள் கோயில் கொள்வது நூலின் அடித் தளமான பெண்மையை முதன்மைப்படுத்துவதாகவும் அதைச் சார்ந்து ஆடவர் சமுதாயம் திகழ்ந்தது என்பதையும் நுட்பமாகப் புலப்படுத்துவதாக உள்ளன.

**காட்டுவிளை**

மதுரை மீனாட்சியம்மனுக்கு அடுத்தபடியாக இந்தியத் துணைக்கண்டம் முழுவதும் உள்ள மக்களால் போற்றப்படுகின்ற கன்னியாகுமரி பகவதி யம்மன் கோயிலுக்குப் பெண் தெய்வங்களும் ஏனைய வாதைகளும் பயணப் படுவது, இக்கதைப்பாடல் ஒரு முழுமையான பெண்தெய்வ கதைப்பாடல் என்பதை வலியுறுத்தும். இத்தெய்வங்கள் முக்கடலும் சந்திக்கின்ற சங்கிலித் துறையில் நீராடி பகவதியம்மனின் அருளை வேண்டி நிற்கும் காட்சி நூலில் நியம்படச் சித்தரிக்கப்படுவதால் பெண்வழிச் சமூகத்தின் ஏற்றத்தை இங்கும் வலியுறுத்துகிறார் எனலாம். பகவதி அம்மனிடம் அருள் வாங்கிய இத்தெய்வங்களே நாகர்கோவிலுக்குத் தெற்குத் திசையில் சுமார் 8 கி.மீ தொலைவில் உள்ள தென்கொம்புதூர் என்ற பெயரால் வழங்கிய தெங்கம் புதூரின் அருகிலுள்ள காட்டுவிளை என்னும் ஊரில் திக்குக்குடி நாடார்

களால் எழுப்பப்பட்ட கோயிலில் உறையும் நிகழ்வுகள் கதைப்பாடலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

### சுக்குப்பாறைத் தேரிவிளை

இவ்வூரில்தான் பெண் தெய்வங்களும் ஏனைய வாதைகளும் நிலை பெற்று இருப்பதாக இக்கதையினில் ஆசிரியர் முடிக்கிறார். இவ்வாறு கதையினை முடிப்பதற்கான உள்ளீடு நுனிந்து நோக்குவதற்குரியது.

கன்னியாகுமரி பகவதியம்மன் சக்தியின் வடிவமாகத் திகழ்கின்றவள். அனைத்துத் தொழில்களையும் தான் ஒருத்தியாகவே நின்று செய்து முடிக்க வல்ல பெருந் தெய்வமாகக் காணப்படுகிறாள். புருஷாதேவியர் மற்றும் அனைவரும் போரில் மாண்டுபட்டு வரம் வாங்கி இந்நில உலகில் தென் பாண்டி நாட்டில் பல இடங்களில் அலைந்து திரிந்த போதும் ஒரு மன நிறைவு அற்ற நிலையிலேயே திகழ்கின்றனர். ஆடவர்களின் ஆட்சிக்கு அடிபணியாமல் அவர்களை எதிர்த்துப் போரிட்டு மாண்ட கன்னித் தெய்வங்களான இவர்கள் திருமணம் ஆகாமலேயே கன்னியாக இருந்து கெண்டே இவ்வுலகத்தைப் பாதுகாக்கின்ற தொழிலை முறையே செய்து கொண்டு வரும் பகவதியம்மனின் அருட் பார்வையில் தங்கியிருக்க நினைப்பது தர்க்க ரீதியான அடிப்படையில் கதை ஓட்டத்தில் சிறந்த இடத்தைப் பெறுகிறது.

**தெய்வங்களும் வாதைகளும் சென்ற இடங்களைக் குறிக்கும் குறியீட்டுப்படம்**



என்கிற அமைப்பில் தெய்வத்திடம் இருந்து வரம் வாங்கி வரும் சிறு தெய்வங்களும் வாதைகளும் எந்த எந்த ஊருக்கு முறையாகச் சென்றன என்பதை மேலே காட்டும் வரைபடக் குறிப்பு உணர்த்துகிறது.

இச்சுக்குப்பாறை தேரிவிளையானது பகவதியம்மன் எழுந்தருளியுள்ள கன்னியாகுமரியின் மிக அருகாமையிலேயே சுமார் 2 கி.மீ. தொலைவிற்கு உள்ளாகவே இவ்வூருக்கு வடமேற்கில் அமைந்துள்ளது.

**கதைப்பாடல் வகைமை**

பெரும்பாலும் நாட்டார் கதைப்பாடல்களின் அமைப்பு ஒருசில மாதிரி வடிவங்களுக்குள் அடக்கப்படும் தன்மையனவாகவே காட்டப்படும். இவ்வகையில் அறுபதுக்கும் மேற்பட்ட கதைப்பாடல்களை ஆய்ந்த ஸ்டுவர்ட் இவற்றை பிறப்புவகை இறப்புவகை என இரண்டுக்குள் அடக்குவார்.

இவ்வகையில் புருஷாதேவிகதை இறப்பு வகையைச் சார்ந்ததாக அமைகிறது.

## இறப்பு வகை

பின்புலம் — இவ்வுலகில் நிகழ்வதாக அமைக்கப்படும் குறிப்பிட்ட நில வியல் எல்லை, நாடு, நகர்ச்சிறப்பு போன்றவை வருணிக்கப்படும்.

பிறப்பு : மனிதர்களிடையே நிகழ்வது வேதனை நிரம்பியது பிள்ளையில்லா திருத்தல், பிள்ளைவரம் வேண்டிப்பல கோயில்களுக்குச் செல்லுதல், வரம் பெற்றுக் கர்ப்பிணியாதல், பத்துமாத சூல் வளர்ச்சி வருணனை, மருத்துவச்சி பிள்ளைப் பேற்றைக் கவனித்தல், பிள்ளைபெறல் போன்றவை விளக்கப்படும் பிள்ளை வளர்ப்பு முறை, கலைகளைக் கற்றல், திருமணம் என்பவையும் அவை.

முரண்பாடு : சமூகரீதியானது மனிதன் / மனிதன் பெரும்பாலும் நிலம், செல்வம், உரிமை, பெண் போன்றவற்றிற்காகப் போராடுவதாக அமையும்

இறப்பு : வன்முறையானது, கொலை/தற்கொலை. தெய்வத்திடம் வரம் பெறல், பூமி திரும்பல்.

முடிவு : வழிபடத்தூண்டுதல் பகைவர்களைப் பழிவாங்கல். கோயில் குடிகொண்டு திருவிழாக்களில் வழிபாடு பெறல்.

இக்கதையில் ஸ்டுவர்ட் குறிப்பிடும் கோட்பாடு பெரும்பாலும் பொருந்தி வருகிறது எனலாம்.[10]

---

10. Stuart. H. Blackburn, "Oral performance: Narrative and Ritual in a Tamil Tradition," Journal of American Folklore, Vol. 94 No. 372, 1981, pp. 212-214.

ஸ்டுவர்ட் குறிப்பிடும் பின்புலம் என்னும் பகுதியில்லாமலேயே கதை நேரடியாகத் தொடங்கப்படுவது இந்த நூலின் சிறப்பு அம்சமாகும்.

பிறப்புப் பகுதியில் கனவு காணும் கூறு இவண் விளக்கப்படுகிறது. எனினும் பிள்ளை வேண்டி தவம் இருக்கும் பெண்ணரசிக்குக் குழந்தை பிறக்க, குழந்தை பேற்றை உண்டாக்கும் சிங்களக் காற்று வீசுவது இக்கதையில் சிறப்பிடம் பெறுகிறது. இதன் வழி மறைமுகமாக ஆசிரியர் இந்நாட்டில் உள்ள பெண்கள் அனைவரும் ஆடவர் இன்றியே கருப்பம் தரிப்பர் என்பதை நுட்பமாகப் புலப்படுத்துகிறார்.

முரண்பாட்டுப் பகுதியில் பெண்ணரசிக்கும் 'செம்பொன்மாமுடிக்கும் நிலம் உரிமை காரணமாக முரண்பாடு தோன்றுகிறது. இம்முரண்பாட்டாலேயே இக்கதையில் இரண்டு பெரும் போர்கள் நடைபெறுகின்றன.

சிறப்புப் பகுதியில் தலைமைப் பாத்திரங்கள் அத்தனையுமே தங்களைத் தாங்களே தற்கொலை செய்து கொள்வது குறிப்பிடத்தக்கது.

முடிவில் தற்கொலை செய்து கொள்ளப்பட்ட முதன்மைப் பாத்திரங்கள் அனைவரும் ஊர் மக்களால் வழிபடத் தூண்டுகின்றவராகக் காணப்படுகிறார். அன்றியும் இத்தெய்வம் மற்றும் உடன் உறையும் வாதைகளுக்கும் குமரி மாவட்டத்தில் பல்வேறு ஊர்களில் பல்வேறு இனத்தார்களால் (காராளர், குறுப்பு நாடார் ஆகியோரால் கோயில்கள் கட்டப்பட்டு வழிபாடுகள் இன்றும் நடத்தப்படுவது நோக்கத்தக்கது.

## துணைக்கதைகள்

துணைக்கதைகளை ஊடிணைப்புக் கதைகள் என்றும் கூறுவர்.[11] இவ்விதக் கதைகள் மூலக்கதையின் நீட்சிக்கும் பொருட் சிறப்புக்கும் துணையாக அமைந்துள்ளமையைக் காணலாம். நமது காப்பியம், இதிகாசம் முதலியவற்றில் பின்பற்றப்படும் கிளைக் கதைகளை ஊடே சேர்க்கும் மரபு நாட்டுப்புற கதைப்பாடல்களிலும் சிறப்பாகக் காணப்படுகின்றன. 'ஐவர் ராசாக்கள் கதை', 'பஞ்ச பாண்டவர் வனவாசம்', 'ஏலக்கள்ளி கதை', 'ஊர்க் குருவிக் கதை', 'அபிமன்னன் சுந்தரி மாலை' ஆகிய நாட்டுப் புறக் கதைப் பாடல்களில் இம்மரபு பின்பற்றப்படுவது சில சான்றுகள் ஆகும். புருஷாதேவி கதையிலும் மூலக்கதையிலிருந்து விலகாமல் அதே நேரத்தில் கதைக்கு வலிமை சேர்ப்பதற்காகச் சில துணைக் கதைகள் எடுத்தாளப்பட்டுள்ளன.

## வெங்கலவன் கதை

கயத்தாறு என்னும் நகரைத் தலைமையிடமாகக் கொண்டு அரசாண்டு வந்த வடுகர் குலத்தைச் சேர்ந்த வெங்கலவன் என்னும் பெயர் கொண்ட மன்னன் ஆண்டு வந்தான்.

---

11. நாட்டுப்புறவியல் சிந்தனைகள், ப. 41.

சீரும் சிறப்புமாக அரசாண்டு வருகிற நாளில் ஒரு நாள் மன்னன் தீய கனா ஒன்றைக் கண்டு விட்டு மிகவும் நொந்து போயிருந்தான்.

மன்னன் வெங்கலவன் அவனது பகைவர்கள் படையெடுத்து வந்து போரிடும் போது, தான் பாரில் தோற்றுப் போவதாகவும் பின்னர் அதன் காரணமாக அவன், அவுன் மனைவி மற்றும் உற்றார், உறவினர் அனைவரும் தெற்கே உள்ள தெஷ்ண மலையில் உள்ள சுனையில் உயிர் விடுவதாகக் கூறுகின்றான்.

மன்னனின் கனவு ஏதும் செய்யாது என்று மந்திரிமார் அவனைத் தேற்றினர். பின்னர் மன்னன் தன் மனைவி சுற்றத்துடன் தெஷ்ணமலைக்கு கடைய நகர் விட்டு செல்லலானான்.

தென்மலையில் மன்னன் வெங்கலவன் மனைவி பொன்மணி மகிழ்வுடன் தன் தோழியருடன் பொழுது போக்கலானாள். மன்னனும் மகிழ்ச்சியாக இருக்கலானான். அப்போது பகைவர்கள் வெங்கலவனை வெல்வதற்குப் படையுடன் வரலாயினர். புழுதிப் படலத்தை மலையின் முகட்டில் இருந்து கண்ட பொன்மணி பகைவர் வரும் சேதியை உரைக்கலுற்றாள்.

பகைவர் வருவதை உறுதி செய்து கொண்ட மன்னன் வெங்கலவன், மலையில் உள்ள சுனையில் தனது பொருள்களை எல்லாம் போட்டு விட்டுத் தானும் தன் மனைவி மற்றும் சுற்றத்துடன் உயிர் நீத்தான். பகைவர்க்குப் பொன்னும் பொருளும் கிடைக்கக்கூடாது என்ற சாபத்தை இட்டுச் சென்றிருந்தான் மன்னன் வெங்கலவன்.

### பொன்னிறத்தாள் கதை

கிருஷ்ண நாயுடு இலஷ்மி தம்பதியரின் அன்பு மகளான பொன்னிறத்தாள் தன் கணவன் ரணசூரனுடன் இனிதாக இல்லறம் நடத்தி வந்த போது குழந்தை இல்லை என்ற குறையானது அவளை மிகவும் வருத்தியது.

மனைவியின் துயர் கண்டு பொறுக்காத ரணசூரன் தவத்தர் ஒருவரைக் கண்டான். ரணசூரனும் அவன் துணைவி பொன்னிறத்தாளும் தவத்தரை வணங்கித் தம் குறையைக் கூறினர்.

வாலியான் குன்றுக்கு வட கிழக்காக உள்ள சுனையில் குளித்து கெளரி நோன்பு நோற்று வந்தால் குழந்தை சிச்சயம் பிறக்கும் என தவத்தர் ஆசி வழங்கினார்.

ரணசூரனும் பொன்னிறத்தாளும் நீராடுவதற்கு வாலியான் குன்று செல்லலாயினர். புரட்டாசி மாதம் தொடங்கியே கெளரி நோன்பு நோற்று வரலாயினர்.

பொன்னிறத்தாள் சூல் வந்து ஆறு மாத கர்ப்பவதியாக இருக்கும் போது பொருள் ஆசை காரணமாக வெங்கலவன் விட்டுச் சென்ற புதையலை எடுப்பதற்கு இவளைப் பலி கொடுப்பதாகக் கனவு கண்ட செய்தியினைத் தன் கணவனிடம் கூறலானாள்.

ரணசூரன் பலவாறாகத் தன் மனைவியைத் தேற்றி அவள் கண்ட கனவு பலிக்காது என்றும் தைரிய மூட்டலானான். அவளும் நெஞ்சம் தெளிந்து மகிழ்ச்சியுடன் இருந்தாள்.

கன்னி மாசத்தில் வாலியான் குன்றுக்கு நீராட வந்த பொன்னிறத்தாள், தன் தோழிமார்களுடன் நீராடும் போது அவளது முத்து மாலை ஒன்று அறுந்து சுனையில் விழுந்தது. அதனைத் தேடிக் கண்டுபிடிக்க முயன்று பல முறை சுனையில் மூழ்கி எழுந்ததன் காரணமாக மாலைப் பொழுது ஆகி கதிரவன் மறையலானான்.

இருள் சூழ்ந்த காரணத்தால் வழித்தடம் தெரியாமல் பொன்னிறத் தாள் கவலையுறலானாள். விரைவாக உறைவிடம் செல்ல எண்ணி வரும் போது அருகே ஓர் ஆலமர மூடதனில் சிலர் கூடியிருப்பதைக் கண்டு அவர் களிடம் தனக்குற்ற இந்நிலையைக் கூறலானாள்.

பிராமண சமூகத்தைச் சேர்ந்த ராமசாமி ஐயர், புலையர், வேளாளர், துலுக்கர் என இருபத்திரண்டு பேர் புதையலை எவ்வாறேனும் அடைந்து விட வேண்டும் என்ற பேரவாவில் அங்குக் கூடியிருந்தனர்.

தனிவழியே அதுவும் 9 மாத கர்ப்பவதியாக பொன்னிறத்தாளைக் கண்டதும் அவர்களுக்கு அவளின் பால் இரக்கம் ஏற்படுவதற்கு மாறாக பொருளை அடைவதற்கு அவளைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற எண்ணத்தில் மகிழ்ச்சியே ஏற்பட்டது.

அவர்களும் அவளுக்கு இரங்குவது போல பாசாங்கு செய்து வெங்கல வன் நீரில் புதைத்த பொருளைக் கவருவதற்கு பொன்னிறத்தாளைப் பலி கொடுக்கத் துணிந்தனர்.

எவ்வளவோ மன்றாடியும் அவர்கள் கேட்கவில்லை. பொன்னிறத் தாள் தன்னைக் கொன்றால் புதையல் கிடைக்காது; அதற்கு மாறாகக் கான கத்தில் உள்ள புலி அடித்து இறப்பீர்கள் எனக் கூறியும் கேளாது அவளை உயிர்ப்பலி செய்தனர்.

கொலை செய்தோர் பொன்னிறத்தாளின் வாக்குப்படி புலியால் தாக்கப்பட்டனர். கண் பார்வையை யிழந்தனர். இறந்து பட்ட பொன்னிறத் தாள் திருக்குற்றால நாதரிடம் சென்று, தன்னை இந்நிலைக்கு ஆட்படுத்திய வர்தம் குலமறுக்க அருள் பாலிக்க வேண்டும் என்றும் வீரம் மிகுந்த தனது தோழியர் எழுவரையும் மீட்டுத்தரவேண்டும் என்றும் தன் கதையைப் படிப்போர்க்கு அருள் செய்ய தனக்கு வல்லமை வேண்டும் எனவும் வேண்டி நின்றாள்.

இத் தருணத்தில் பொன்னிறத்தாளின் உயிரைக் கொல்ல வந்த மூவர் திருக்குற்றாலநாதரிடம் வந்தனர். தம் தவறுக்கரக வருந்தினர். அவர்களின் நிலை கண்டு இரங்கிய குற்றாலநாதர் அவர்களை வாதைகளாக மாற்றியும் பொன்னிறத்தாளின் கோரிக்கைகளை ஏற்று அவள் வேண்டியதை நல்கிய தோடு பூலோகத்தில் சென்று நியாயத்திற்குத் துணை நின்று மக்கள் தரும்

ஊட்டு உண்டும் சிறியோர்கள் வறியோர்கள் தம் சிறு பிழை பொறுத்தும் மரியாதையற்றவரை வதைத்தும் நேர்மையுடன் நடக்கும் படி ஆசி செய்ய லானார்.

இறைவன் ஆணையும் அருளும் பெற்ற இச்சிறுதெய்வம் தன்னை வதைத்தவர்கள் பாண்டி நாட்டினைச் சார்ந்தவர்கள் என்பதனை மனதிற் கொண்டு, முதன் முதலில் அவர்கள் மதுரை நகர் அடைந்து மக்களைப் பல துன்பத்திற்கு ஆளாக்குகின்றனர். இறுதியில் மந்திரவேலன் என்பான் ஒருவனோடு வாதைகள் தமிழகத்தில் தென் பகுதிக்குப் பயணப்பட்டார்கள் என்பதுடன் பொன்னிறத்தாளின் கதை அமைகிறது.

## மந்திரவேலன் கதை

மதுரை நகர் மக்கள் வளமுடன் வாழ்ந்திருந்தபோது அங்கு வந்த வாதைகளின் இன்னலுக்கும் அச்சுறுத்தலுக்கும் ஆளாகிப் பெரிதும் துன்ப முற்றனர். மதுரை மக்கள் இவ்வின்னல்தனை அகற்ற ஏழுகாணி மலைப் பகுதியில் வாழும் நாகவள்ளி என்பாளின் மகன் மந்திரவேலனை அழைத்து வரக் கூறலாயினர். அதன்படி தூதர் சென்று மலைவேலனை அழைக்க லாயினர்.

அவனும் தனது சுற்றத்துடன் மதுரை வருவதற்கான ஆயுத்தங்களைச் செய்யலானான். அப்போது அவன் மனைவி மதுரை செல்வது துன்பத் தையே தரும் என்றும் வாதைகள் கட்டில்அடங்காது என்றும் எடுத்துக் கூறு கிறாள். ஆனால் அவள் சொல்லையும் மீறி மதுரை வந்து சேருகிறான்.

பல வகையான பூசைகள் மேற்கொண்டு வாதைகளைக் கட்டிக் குடத் தில் அடைக்க முயல்கிறான். அப்போது வாதைகளால் அவன் கொல்லப் படுகிறான். மற்ற தோழர்களான மலை வேலர்கள் அஞ்சி தம்ஊர்ப் போய்ச் சேருகின்றனர்.

ஊரில் வேலனின் மனைவி தன் கணவன் வராதது கண்டு வினவ மற்ற தோழர்கள் அவன் இறந்துபட்ட வரலாற்றைக் கூறுகின்றனர்.

வேலத்தி எவ்வாறேனும் தன் கணவனை உயிர்ப்பித்து அழைத்து வர முடிவு செய்து மதுரை வருகிறாள். வாதைகளிடம் தாலிப் பிச்சை கேட் கிறாள். சின்ன இசக்கி மற்றும் வாதைகள அவளது கணவன் மீண்டும் உயிர் பெற வேண்டும் என்றால் அவளது மகள் செம்பகக் குட்டியை பலிதர வேண்டும். இவ்வாறு பலி தந்தால் வேலனை உயிர்ப்பிக்கலாம் எனக் கூறுகின்றனர். வேலத்தியும் மகிழ்ச்சியுடன் சம்மதிக்க வேலனும் உயிர் பெற்று எழுகிறான்.

வேலனும் வேலத்தியும் பலி தருவதற்கான ஏற்பாடுகளைச் செய்கின்ற னர். வேலன் வேலத்தி வேண்டுதலுக்கு இணையாக வாதைகள் கூண்ட மலைக்கு வந்து சேர்ந்தனர். அங்கு வேலன் பலி தருவதற்கான அனைத்து ஏற்பாடுகளையும் செய்யலானான். சூல் உற்ற துள்ளு மறியை பரணின்

மேலே நிறுத்தினான். பரணிற்குக் கீழே வேலனின் மகள் செம்பகக்குட்டி நின்றிருந்தாள்.

சூல் கொண்ட துள்ளு மறியின் இரத்தத்தை வாழையிலையில் வார்க்க, வாதைகள் மகிழ்ந்து பரண்மேல் செல்ல அங்குப் பார்க்கும் போது செம்பகக் குட்டி உயிருடன் மகிழ்ச்சியாக கீழே நிற்பதைக் கண்டு சினம் கொண்டனர்.

உடனே சின்ன இசக்கி, மந்திரமூர்த்தி இருவரும் கோபம் கொண்டு ஒன்பது மாதக் கர்ப்பிணியான செம்பகக்குட்டியை உதைத்துக் கொன்றனர்.

பின்னர் ஏழுகாணி மலையிற் தங்கி அவ் வாதைகள் பூசை ஏற்று வந்தன.

### பிரம்மசத்தி — மாயவள் கதை

சுக்குப்பாஸ்றயில் வாழ்ந்து வந்த சுந்தரன் என்பான் ஆதரவு அற்றோர்க்கு அன்னம் அளித்து அருள் பாலித்து வந்தவன்; சுடலைமாட நாடான் என்றும் இவனை அழைப்பர். இறைவனின் அருளால் இவனுக்கு ஓர் மகன் பிறந்தான்.

அம்மகனுக்குச் செல்லத் திருமணம் செய்ய விரும்பினான். அதற்கான ஏற்பாடுகளைச் சுடலைமாடநாடான் செய்யலுற்றான். அளியங்காட்டுவிளையில் உள்ள உலகளந்தான் என்னும் நாடாத்தி மகள் பிரம்மசத்தி என்பிரானை மணப்பெண்ணாகத் தேர்ந்தெடுத்து திருமணம் செய்ய மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டிற்குச் சென்றனர்.

திருமணம் முடிந்து சுக்குப்பாறை வரும் பிரம்மசத்தியை இசக்கிப் பின் தொடரலானாள். கால வேகத்தில் பிரம்மசத்தி முதற் குழந்தையைப் பெற்றெடுத்தாள். குழந்தைக்குப் பாட்டன் சுடலை மாடநாடான் பெயரையே சூட்டி மகிழ்ந்தார்.

மீண்டும் பிரம்மசத்தி கருவுற்று மாயவள் என்ற அழகிய பெண்ணைப் பெற்று எடுத்தாள். சீரும் சிறப்புமாக குழந்தை வளர்ந்தது. மாயவளின் அழகிலும், அவள் சூடிய நறுமணப் பூக்களிலும் மனம் களித்த இசக்கி மாயவளைப் பின் தொடரலானாள். குறித்த பருவம் எய்தியவுடன் மாயவளைக் கொல்லத் திட்டமிட்டன வாதைகள். அவ்வாறே மாயவளின் பாட்டி வீட்டிற்கு அழைத்துச் செல்வதாகக் கூட்டிச் சென்று மாயவளைக் கொன்றனர். தேடிவந்த மாயவளின் அன்னை பிரம்மசத்தியையும் கொன்றனர் வாதைகள்.

இவ்வாறு சுக்குப்பாறை சுந்தரத்தின் சுற்றம் அழிவுற்றது. மக்கள் இந்நிலைக்கு வருந்தி இசக்கிக்குக் கோயில் கட்டி பூசை நடத்தலாயினர்.

### நீலன்குறுப்பு கதை

நாஞ்சில் நாட்டு கரையாளர் ஒரு முறை கூத்தாட்டுக்கு ஏற்பாடு செய்

தனர். பருப்பன் என்னும் கணியானை அழைத்தனர். கணியானுக்கும் மன்னனுக்கும் ஏற்பட்ட மனவெறுப்பின் காரணமாக கணியான் மன்னனைக் கொல்ல விழைந்தான். அதன் காரணமாக அவன் மலைவேலனின் உதவியை நாடினான்.

வேலன் தன்னிடம் உள்ள வாதைகளை அவனுடன் அனுப்பி வைத்தான். வளமான ஊரைக் கண்ட வாதைகள் மனமகிழ்வு கொண்டு சொல்லொண்ணாத துன்பத்தை அக்கரையாளர்க்குத் தந்தன.

கரையாளர் சோதிடம் பார்த்தனர். வாதைகளுககுப் பூசை த்ந்தால் துன்பம் குறையும் என சோதிடன் கூற அதன்படி செய்ய முடிவு செய்தனர்.

ஓர் நல்ல நாளில் கோயில் கட்டுவதற்கான இடத்தைத் தேர்வு செய்து அதன்படி கோயில் கட்டினர். இருவேளை பூசையும் செய்து வந்தனர்.

கோயில் கட்டிய இடம் நீலன்குறுப்பு என்பவனுக்குச் சொந்தமானதாகும். கோயில் இடம் போக ஏனைய இடத்தில் பயிர் நன்றாக செழித்து வளர்ந்து இருந்தது. பயிரை அறுவடை செய்வதற்காக நீலன்குறுப்புக்குத் தூது அனுப்பினர்.

தூதனும் சென்று செய்தி கூறலானான். நீலன்குறுப்பு செய்திக் கேட்டு அங்கு வந்தான். தன் நிலத்தில் கோயில் கட்டிய கரையாளர்களைக் கடிந்து கொண்டான்.

தன் இடத்தில் கட்டியிருந்த கோயிலையும் நீலன்குறுப்பு நெருப்பு இட்டு அழித்தான். கரையாளர்கள் மனம் வருந்தினர். இசக்கி சினம் கொண்டு மேலாங்கோட்டூர் நீலனைப் பழி வாங்கினாள்.

பின்னர் இசக்கி மேலாங்கோட்டூரையும் அழிக்கத் துணிந்தாள். மக்கள் மனம் வருந்தினர். மக்கள் தங்கள் மனக் குறையை அதனை ஆளும் மன்னன் சேரமான் தம்பிரானிடம் எடுத்துக் கூறினர்.

மன்னன் மக்கள் துயர் களைய கணியானை அழைத்துக் குறி பார்த்தான். சோதிடன் கூறியபடி கோயில் கட்டி பூசை செய்ய மக்கள் ஆவண செய்தனர்.

கோட்டம் அடைப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. மன்னன் கோயிலைக் கட்டி பூசையும் தொடங்கினான்.

இசக்கியும் மகிழ்ந்து மக்களைக் காத்து வரலானாள்.

### கதை மாந்தர்

கதைப் பாடல்களில் வரும் பாத்திரங்களை நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை மானிடர், தேவர், இறைவர், அரக்கர் ஆகும். புராணக் கதைகளில் மேற்கண்ட நான்கு பிரிவினரும் வரலாறு, சமூகம் அறவுணர்வுக் கதைகள் போன்றவற்றில் பெரும்பாலும் மானிடர்களும், அல்லி அரசாணி மாலை, பவளக்கொடி போன்றவற்றில் இறையம்சம்

பெற்றவரும் மானிடரும், மானிடப் பாத்திரங்களைத் தெய்வ நிலைக்கு உயர்த்திப் பேசப்படும் கதைகளில் மனிதர், தேவர், இறைவர்என்ற பிரிவி னரும், அரக்கர், இறைவர் போன்றவர் பெரும்பாலும் புர்ராண இதிகாச கதைகளிலும் இடம்பெற்று வருவதைக் காணலாம்.

நாட்டுப்புறக் கதைப் பாடல்களில் வரும் முதன்மைக் கதாப் பாத்திரங் கள் கதையின் யாப்புக்கு ஏற்றபடியே பார்க்கப்படுகிறார்கள். கதையின் நீட்சியைப் பொருத்தே பாத்திரங்களின் பங்கும் அமைகின்றன. அதே போன்று கதையின் பின்னலில் எந்தக் கதாபாத்திரம் முதன்மை பெறு கிறதோ அதனைச் சேர்ந்த ஏனைய பாத்திரங்கள் அவ்வியல்புக்குத் தக்கபடி வடிவமைக்கப்படுவதைக் காணலாம். எடுத்துக்காட்டாகச் சித்திர புத்திர நயினார் கதையில் அகலிகையின் மீது மையல் கொண்டு வரும் இந்தி ரனைப் பார்த்து ''பாவி கெடுவாய் பத்தினியார் தன்னிடத்தில் வந் தாயே....'' என தேவராசனைச் சாதாரணமாகச் சாடுவது ஈண்டுக் காண லாம். கோவலன் கதையில் கண்ணகியைச் சீற்றம் மிக்கவளாகக் காட்டு வதும் கதையின் இயல்பு கருதியே எனலாம். அதேபோன்று புருஷாதேவி கதையில் மானிடராகப் பிறந்த பேரரசி, புருஷாதேவி மற்றும் அவள் தோழியார் எழுவர் மந்திர தந்திரங்கள் கொண்ட வாதைகளாகவும் இறுதி யில் புருஷாதேவி இசக்கி என்ற தெய்வமாகவும் படைக்கப்படுவது கதை யின் நீட்சிக்கு ஏற்ப கதாபாத்திரம் அமையப் பெற்றுள்ள முறையையே காட்டுகிறது. அவ்வகையில் இக்கதையில் இடம் பெறும் முதன்மைப் பாத்தி ரங்கள் பற்றிக் காண்போம்.

### பேரரசி

சீர் பெருகும் பெண்ணரசாள் என்றும் திருவணையாரம்மையென்றும் அழைக்கப்படும் சிறப்பிற்குரிய அரசியான பெண்ணரசாள் தென்னகத்தின் தெற்கே சிறப்பான முறையில் ஆட்சி செய்யும் நல்லரசியாகத் திகழ்ந்தவள்.

தன்னுடைய ஆட்சிக் காலத்திற்குப் பின்னர் பெயர் சொல்ல ஒரு குழந்தை வேண்டி அவள் சிந்தித்து இருந்தாள். இறைவன் திருக்கூட்டால் அன்னவள் ஓர் நாள் நற்கனவு ஒன்று கண்டாள். குளவி கூடு கட்டுவ தாகவும் அதன் பலன் யாதென்றும் தனது ஏழு தோழிமாரை வினவி னாள். கண்ட கனவின்படி இறையருளால் நல்ல குழந்தை ஒன்று பிறக்கும் எனத் தோழியர் எழுவரும் மகிழ்ச்சியுடன் எடுத்துக் கூறினர்.

பேரரசி கருவுற்ற மூன்றாம் திங்களில் சத்தி பூசை நடத்திக் கருவுற்ற கரு நிலைபெற ஏழு தோழியரும் சுற்றமும் வேண்டினர். சிந்தையை வளர்க்கும் புராணக் கதைகளும் வீர மயிலேறும் முருகனுக்கு அபிஷேக ஆராதனையும் தோழியரால் செய்யப்பட்டு ஐந்தாம் மாதம் ஆன அரசிக்கு இறையாசியை வேண்டினர். ஒன்பதாம் மாதம் ஆனவுடன் ஏழு தோழியரும் சூரியனுக்குப் பூசையிட்டு அரசியைக் காக்க வேண்டிக் கொண்டனர். திங்கள் பத்து முடிந் ததும் அழகிய பெண் குழந்தை ஒன்றை ஈன்று எடுத்தாள் பேரரசி.

உயர்ந்த சிந்தனையும் இறை பக்தியும் நிறைந்த மாதரசியின் ஆட்சியில் தருமம் செழித்தது. தன் குழந்தையை குவலயத்தில் முந்தியிருக்கச் செய்வ திலேயே பெண்ணரசி தன்னை அர்ப்பணித்துக் கொண்டாள்.

சிறந்த கல்வி, வாட் பயிற்சி, போர்பயிற்சி, குதிரையேற்றம், ஆன்மக் கல்வியென அனைத்துத் துறையிலும் தன்னுடைய மகள் சிறப்புற வேண்டும் என்ற எண்ணத்தில் பெண்ணரசி திகழ்ந்தாள்.

பெண்ணரசியின் குழந்தையான புருஷாதேவியும் அன்னை காட்டிய வழியில் சிறிதும் பிறழாது நடந்தாள். தாய்க்கு உரிய முழுமையான குணங் கள், அரசிக்குரிய அரசியல் ஞானம், தாய்மைக்குரிய பரிவு, பாசம் இவை அத்தனையும் நிறையப்பெற்ற பெண்ணரசி தன் மகளுக்கு நாட்டுப் பற்றை யும் சேர்த்து ஊட்டினாள் எனலாம்.

வீரத்தை முளையிலேயே வித்திட்டு வீராங்கனையாகத் தன் மகளை வளர்த்த பேரரசி இக்கதையின் அடிப்படை ஊன்றுகோலாகத் திகழ் கிறாள் எனலாம். கதை வளர்ச்சியில் இப்பாத்திரம் தலைமைப் பாத்திர மான புருஷாதேவியின் வளர்ச்சிக்கு இடம் கொடுத்து அப்பாத்திரத்திற்கு வலிமை சேர்ப்பதாகவே அமைந்துள்ளதைக் காணலாம்.

### புருஷாதேவி

இப்பாத்திரத்தின் சிறப்பை 1643 வரிகளில் அமையப்பெற்ற இக் கதைப் பாடல் பல இடங்களிலும் சிறப்பித்து செல்வதைக் காணலாம்.

பேரரசிக்கு மகளாகத் தோன்றி இளமையிலேயே கற்க வேண்டிய கல்வி, குதிரையேற்றம், யானையேற்றம், போர்பயிற்சி, போன்ற ஓர் அரசிக்குத் தேவையான கலைகள் பல பயின்று,

''கொட்டு முழக்கத்துடன் குரவை முழங்கிடவே
கொடிசே ரிடையழகி புருஷா தேவியம்மை
மட்டுக் கடங்காத மறைகளு மாராய்ந்து
மகிழ்ச்சியுட னேவந்து மாவி லேறவென்ன'' (245-247)

என்று ஆகமங்கள் பல கற்ற வரலாற்றை இப்பாடல் வரிகள் நமக்கு எடுத்து இயம்புகின்றன.

கற்பரசியாக மாற்றான் நிழல்கூடப் படாதவாறு தன் கற்பைக் காத்து வாழ்ந்து வந்த உயர் பெண்மணிகளில் புருஷாதேவியும் ஒருத்தியாவாள். படைகள் நாலாபுறமும் சூழ்ந்த போது அன்னையும் அன்புத் தோழியும் மடிந்தது கண்டு வீராங்கனையான புருஷாதேவி போர்க்களத்தில் வீர மரணத்தைத் தழுவுகிறாள். இதனை,

'...... மங்கைதான் சூலமெடுத்து
ஊனமில்லாமலே வயிற்று ளிருந்த
ஒன்பதுமாத்ச் சிசுவை யெடுத்து

மாவுங் கொடியுடன் படையிலே வந்த
மன்னவன் முன்பி லெறிந்து யிர்விட்டு
காவுக் குயில்மொழி மடிந்தது கண்டு
கட்டுட னேது உரைக்கிறான் மன்னன்.' (581-584)

என்ற இந்த வரிகள் மூலம் ஆசிரியர் வீரம் நிறைந்த பெண்மகளின் துயரத்திலும்கூட கற்பு போற்றப்பட்டுள்ளதைக் காட்டி இக்கதையின் கதா நாயகியாகவே அவளைச் சிறப்பித்துப் போற்றுவது தகும் என்றே கூறலாம்.

கதாநாயகி என்ற நிலையில் மட்டும் அல்லாது வீரமரணத்தைத் தழுவிய புருஷாதேவி சிவனின் பேரருளைப் பெற்று இவள் சிறு தெய்வமாகவும் ஏனையோர் இவளுடன் உறையும் வாதைகளாகவும் அமையும்படிப் பிறவி பெற்று, எங்கெல்லாம் கொடுமைகளும் தீமைகளும் தலை தூக்குகின்றனவோ அங்கெல்லாம் விரைந்து வந்து தருமத்தை நிலைநாட்ட வேண்டும் என சிவனின் ஆணையோடு, பூவுலகு வருகிறாள் என்பதனை இக்கதைப் பாடல்

'தரைதனிலே நீங்கள் சென்றுதரணி மனுவோர்கள்
தரும்பூசை தன்னையுண்டு சஞ்சல மில்லாமல்
சிறியோர்கள் வறியோர்கள் செய்தபிழை பொறுத்து
தேசத்துக்கு உபகாரம் செய்திருப் பீர்நீங்கள்
மரியாதை யில்லாத மண்டர்களை முடித்து
மகிடசை யுடனினிதாக பூசை யுண்டிருந்து
வாழுமெனச் சிவனுரைக்க.' (855-858)

என்ற வரிகள் மூலம் அவள் நியாயம் காக்கும் இசக்கியாக உயர்ந்துள்ள வரலாற்றை நமக்குக் காட்டுகிறது.

ஆகவே பெண்ணாகப் பிறந்து பேரரசியாக வாழ்ந்து கற்பைக் காத்துக் கொள்ள உயிர் துறந்து இறையருளால் சிறுதெய்வமாகி ஒரு பூரணத் துவத்தைப் பெற்ற இப்பாத்திரம் கதையின் தலைமைப் பாத்திரமாக அமைவது சிறப்புடையதே எனலாம்.

**வாணுமாலை**

புருஷாதேவியின் உயிர்த்தோழிகளில் முதன்மையானவள்; சிறந்த பண்புகளைப் பெற்றவள். புருஷாதேவியின் இளமைக் காலமுதல் அனைத்திலும் உடன் சென்றவள். இதனைக் கதைப்பாடல்,

'வடிவுடை பெண்ணாள் வாணுமாலைத் தோழி
வளமாய் அருகிருந்து வகைமொழிகள் சொல்ல' (226)

என்ற வரிகள் மூலம் விளங்கும்.

புருஷாதேவியின் நல்ல தோழியாகச் சிறந்த செவிலியாக உயர்ந்த அமைச்சனாக உயிர்காக்கும் கவசமாக வாணுமாலை திகழ்ந்தாள் என

லாம். செம்பொன்முடி மன்னன் காசிக்குப் புருஷாதேவியின் கோட்டை வாயில் வழியிற் செல்ல அனுமதி கேட்டபோது தக்க மந்திரியாக இருந்து கோட்டை வாசல் திறப்பது முறையன்று என்று எடுத்துக் கூறினாள்.

'நாட்டையாளும் வேந்தனவன் நாரிமாரி ருப்பிடத்தில்
நாடிவழி கேட்டிடவும் ஞாயமோ
நல்லவழி தருகிறதில்லை.....' (301)

என்ற வரிகள் மூலம் அவளின் மதிநலத்தைக் காணலாம்.

போர்க்களத்தில் ஆறுதோழியரும் வீரமரணம் எய்தியதைக் கண்டு பேரரசியார் தன்னுயிர் இழக்க, வீராங்கனையான புருஷாதேவியும் வீர மரணத்தைத் தழுவ. இறுதிவரை துணையிருந்து இறப்பிலும் துணை செல்ல வீரமரணத்தை வாணுமாலை தன் கையால் வாள் எடுத்து வயிறு பிளந்து குடலை எடுத்து மாலையாகப் போட்டு வாழ்வை முடித்துக்கொண்டாள். அந்த வீர மங்கையை,

'துர்க்கை யெனவே வயிற்றைப் பிளந்து
சுறுக்குடனேகுடல் மாலைய தாக்கி
கருத்தாய் வாணுமாலை யிறக்க....' (576-577)

என்ற இக்கதைப்பாடல் வரிகள் பாராட்டுவது அவளின் பாத்திரத்தைக் குன்றிலிட்ட விளக்காக மிளிரச் செய்கிறது எனலாம்.

### செம்பொன்முடி

புருஷாதேவி தன் நாட்டின் நலன் கருதி அமைத்துக்கொண்ட கோட்டையின் வலிமை செம்பொன்முடிக்கு அழுக்காற்றை ஏற்படுத்தியது. காசிக்குத் தீர்த்தமாடச் செல்ல புருஷாதேவியின் கோட்டை வழியே செல்ல விண்ணப்பிக்க அதற்குப் புருஷாதேவி மறுத்தவுடன் போர் மேல் வருகிறான். யுத்தம் முதலில் இவனுக்குப் பாதகமாக அமைகிறது.

நாணுற்றுத் தோற்றுப் போனவன் மீண்டும் வலிமையைப் பெருக்கிக் கொண்டு தன் நண்பனான காடதத்தி மன்னனின் படையோடு மீண்டும் பொருதுகிறான். புருஷாதேவி அவள் அன்னை அவளது தோழிமார் வாணுமாலை உள்ளிட்ட ஏழுபேரும் வீரமரணத்தைத் தழுவுகின்றனர். இக்காட்சியைக் கண்ட மன்னன் களத்திலேயே கலங்குகின்றான். அறியாமையால் தவறு இழைத்தது எண்ணி மனம் கசிகின்றான்.

'காசினி தனிலே இவர்க்கு இணையாய்
கற்புறு பெண்களைக் கண்டது மில்லை
மாசில்லாயிப் பெண்மணி தானும்
மடிந்தா ளெனவே ஏங்கி மனதானும்
சென்றே உடைவாள் தன்னை நிறுத்தி
தீரமாய் நின்று சூர்தன்னைத் தொழுது
வந்து உடைவாள் முனையிலே சாடி
வளர்பொன் முடியார் பட்டன ரப்போ' (585-588)

செய்யக்கூடாத கொடுமை செய்து விட்டது கருதி அதற்குப் பிராயச் சித்த மாக வெற்றித் திருமகனைத் தழுவிய வேந்தன் வீராங்கனையின் வீரமர ணத்தை எண்ணி வியந்து வாழ்வுதனை முடித்துக்கொண்டு தன்னுடைய நேர்மைக்குச் சான்றாக உயிரையே தியாகம் செய்தது மன்னருள் மாணிக்க மாக அமைகிறதன்றோ. அதனை இக்கதைப்பாடல் வரிகள் மேலே தெளி வுறுத்துவதைக் காணலாம்.

**வரலாற்றுச் செய்திகள்**

'புருஷாதேவி கதை' என வழங்கப்படும் இச்சுவடி கதைப் பாடலின் தோற்றம் குறித்த காலத்தைத் தெளிவாக உணர முடியவில்லை. புருஷா தேவி மற்றும் அவர் தாயார் தோழியர்கள் முதலியோர் கதையின்படி ஒரு நாட்டினைக் கட்டி ஆண்டனரா என்பதற்கான எந்தவிதப் புறச் சான்று களும் கிடைக்கவில்லை.

தெய்வத்திடம் வரம் வாங்கி இப்பெண் தெய்வங்கள் மற்றும் வாதை கள் மதுரையை அடைந்து அங்குப் பல இன்னல்கள் செய்வதாகக் கூறப் படும் பொழுது அப்பகுதியை,

> 'வையகந் தன்னிலே பாண்டியெனும் நகர்தன்னை
> வரகுண மன்னனாண்டங் கிருக்கிற நாளில்' (740)

வரகுணபாண்டியன் ஆண்டான் என்கிற குறிப்புக் காணப்படுகிறது. இம்மன்னன் பாண்டிய நாட்டை ஆண்ட காலம் கி.பி. 16-ம் நூற்றாண்டா கும். ஆகவே புருஷாதேவி உள்ளிட்ட பெண்கள் இக்காலத்தைச் சார்ந்தவர் களாகலாம்.

கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள மேலாங்கோடு, கொக்கோட்டூர் ஆகிய ஊர்களைப் பெண் தெய்வங்களும் வாதைகளும் அழிக்கின்ற காலத் தில் ஊர்மக்கள் சேரமன்னனிடம் தங்கள் குறைகளை முறையிடுவதாக வருகிறது.

> 'சென்றந்த மேலாங் கோட்டூரி லுள்ளோர்கள்
> சேரமான் தம்பிரா னிடமதில் வந்து
> நாட்டுக் கதிபதி சேரமான் மன்னா
> நாங்களிது வரையும் பொறுத்தோமே (1341-1342)

— என்கிற வரிகள் இதனைப் புலப்படுத்தும். எனினும் இதில் குறிப் பிடப்படும் சேரமன்னன் யார்? என்பது பற்றிய குறிப்புத் தெளிவாக விளங்கவில்லை.

கன்னியாகுமரி மாவட்டம் தாழாக்குடியிலுள்ள ஊரில். மொகம்பரி அம்மன் என்கிற பெயரில் புருஷாதேவி பெண் தெய்வம் உறைந்துள்ளது. மேலும் இத்தோடு உறையும் பிற தெய்வங்கள், உடன் வரும் 21 வாதைகள் ஆகியவற்றிற்கு 'மூகாம்பிகையம்மன் கோவில்' என்கிற பெயரில் அமைந் துள்ள கோயிலிலுள்ள கல்வெட்டுக்கள் இக்கதையினை 14-ம் நூற் றாண்டைச் சார்ந்ததாகக் கொள்ள இடமளிக்கிறது. 'கோயில் சிகரம் முதலி

யன கொல்லம் 511 மாசி 9-இல் (கி.பி. 1336-இல்) பணி நடத்தப் பட்டது* என கோயில் சுவரில் ஏழாவது கல்வெட்டாக ஒன்று காணப்படு கிறது. இதன் மூலம் புருஷாதேவியின் கோவில் இக்காலம் முதலே (கி.பி. 14-ம் நூற்றாண்டு) தாழாக்குடி ஊரில் நிலைபெற்றிருக்க வாய்ப்புள்ளதை அறிய முடிகிறது.

அகஸ்தீஸ்வரம் தாலுகா தெங்கன்புதூர் அருகே மழை நீர் ஓடுவதற் காகக் கட்டப்பட்ட நீரோடையிலும் புருஷாதேவியின் கோவில் இருப்பினும் இதைக் கட்டிவித்தவர் யார் என்கிற விவரங்களை வரலாற்று ரீதியாகப் பெற முடியவில்லை.

''மாரி பொழிந்து நீராடுகிற ஓமடை மார்க்கத்தில் கோவில் வைத்து
திக்கெங்கும் போற்றிட பூசை புரிந்து......'' (1510-1511)

காட்டுவிளை என்னும் தெங்கம்புதூரை அடுத்து விளங்கும் ஓர் ஊரில் திக்குக்குடி நாடார்கள் புருஷாதேவியம்மனுக்கும் துணை தெய்வங்களுக்கும் கோவில் எழுப்பினர் என்கிற செய்தியை அறிய முடிகிறது. இக்கோவி லைத் தற்பொழுது நிர்வகித்து வருபவர் இரத்தினசாமி நாடார் என்பவர் என்றும், இக்கோவில் இவருக்குப் பல தலைமுறைகளுக்கு முன்பு இருந்தது என்றும், முன்னோர்களால் கட்டப்பட்டு அழிந்துபட்ட இக்கோயிலை இரத்தின சாமி நாடார் ஊர் மக்களின் துணையுடன் ரூ. 2,00,000/- செலவில் கட்டி முடிந்ததாகத் தகவலாளி வழி அறிய முடிந்தது. மேற்படி இடத்தில் கோயில் கட்டப்பட்டிருந்ததை,

'திக்குக்குடி நாடாரின் சேகரத்தை ஆதரித்து
சீராக காட்டு விளையூரில்
அம்மையவள் படையோடு ஆதரவு டனிருக்க' (1542-1543)

— என்கிற வரிகள் புலப்படுத்தும்.

சுக்குப்பாறை தேரிவிளையில் புருஷாதேவி மற்றும் பிற தெய்வங்க ளுக்குக் கட்டப்பட்ட கோவில் 17-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்க முடியும் என்பதைக் கதைப்பாடல் தெளிவுபடுத்துகிறது.

''எண்ணுற்று நாற்பது ஐந்தெனு மாண்டினில் மேடம்
ஈரைந்து தெய்தியினில் புதன்வாரம் முகூர்த்தம்
தாப்பிட்டு உள்ள சடங்கு முடிந்ததின் பின்னெ
தாமசமின்றியே அம்மையடிமை நாடானை''

(1555-1556)

— என்னும் வரிகளில் வரும் மணமகனான அம்மையடிமை நாடான் காலத்தில் தான் சுக்குபாறை தேரிவிளையில் இக்கோயில் கொல்லம் 845- இல் (கி.பி. 1670-இல்) கட்டப்பட்டது என்பதை பர்டலால் உணர முடி கிறது. இவரின் பரம்பரையில் தற்பொழுது தங்கராஜ் என்பவர் ஐந்தாவது

---

* ஆர். பத்மனாபபிள்ளை, தாழைக்குடிச் சரிதமும் சயந்தீர் அழகம்மன் கோவிலும், ப. 302.

தலைமுறையைச் சார்ந்தவராகத் திகழ்வதாக ஆய்வாளரின் நேர்காணலில் குறிப்பிட்டார்.

அவ்வகையில் இவ்வூரிலுள்ள கோயில்,

அம்மியடி நாடார் — சுவாமியடி நாடார் — மூர்த்திமாடன் நாடார் — பொன்னையா நாடார் — தங்கராஜ் — தங்கராஜ் குழந்தைகள்

— என ஆறாவது தலைமுறையினரால் பாதுகாக்கப்பட்டு பூஜைகள் முதலியன செய்யப்பட்டு வருகின்றன.

### புருஷாதேவி கோவில் பூசைகள்

### தாழாக்குடி

தாழாக்குடியில் புருஷாதேவி முப்பிடாரி அம்மன் என்றும் செம்பன் மாமுடி பூதத்தான் என்றும் வழங்கப்படுகின்றனர். தற்பொழுது கல்மண்டபம் மற்றும் ஓடு வேய்ந்த கோயில் ஆகிய இரு நிலைகளில் இக்கோயில் காணப்படுகிறது. ஊருக்கு வெளியே குளத்தங்கரை அருகில் செந்தாழம் மூட்டின் பக்கத்தில் காணப்படும் இக்கோயிலில் பூசைகள் வரன்முறைக்கு உட்பட்டு நடைபெறவில்லை. அறுவடை காலங்களில் சில வேளைகளில் சிறப்பு பூசை நடத்தப்படுகிறது.

இவ்வூருக்கு நெல் அறுவடைக்காக வருகின்ற அறுவடை தொழிலாளர்கள் இக்கோவிலில் சில கதிர்களைக் காணிக்கையாகச் செலுத்தி மஞ்சணை என்னும் சிவந்த வாசனைக் குழம்பைத் தெய்வத்திற்குப் பூசும் மரபைக் காணமுடிகிறது.

### கொக்கோட்டூர்

இவ்வூரில் நடைபெறும் பூசை முறைகளைக் கள ஆய்வில் அறியமுடியவில்லை.

### காட்டுவிளை

தெங்கன்புதூர் அடுத்து இருக்கும் காட்டுவிளையில் பெரிய கோயில் அண்மையில் நிர்மாணிக்கப்பட்டு அதற்கெனத் தர்மகர்த்தாக்களும் நியமிக்கப்பட்டு பூசைகள் முறையாக நடத்தி வரப்படுகின்றன.

தினந்தோறும் இருவேளைகளில் பூஜைகள் நடத்தப்படும் இக்கோவிலில் வெள்ளிக்கிழமை தோறும் சிறப்பு பூஜையும் தமிழ் மாதத்தின் இறுதி வெள்ளிக்கிழமை தோறும் படையல் சார்த்திப் பெரும் பூஜையும் நடத்தப் பெறுகின்றன.

சித்திரை அல்லது வைகாசி மாதத்தில் மூன்று நாள்களுக்குத் தெய்வங்களை சாந்திப்படுத்தும் கொடை விழா சிறப்புற நடத்தப் பெறுகிறது. வில் கலைஞர் வரவழைக்கப்பட்டு புருஷாதேவிக் கதை படிக்கப்படுகிறது. மேலும் கணியான் ஆட்டம், கும்பாட்டம், நையாண்டி மேளம் முதலியன கொண்டு விழா சிறப்பிக்கப்படுகிறது.

### நீரோடை

பறக்கை ஊரின் அருகில் நீரோடை மார்க்கத்தில் புருஷாதேவி மற்றும் திறந்த வெளியில் ஒரு கோயில் அமைந்துள்ளது. கல் சிலைகள், மண் சுதைகள், கல் பீடங்கள் ஆகியன இக்கோயிலில் காணப்படுகின்றன. பிள்ளை வரம் வேண்டி அருகாமையிலுள்ள கிராமத்தார் 'தொட்டில் நேர்த்திக் கடன்' என்பதை இவ்விடத்தில் செலுத்துகின்றனர்.

### சுக்குப்பாறை தேரிவிளை

ஓட்டால் வேயப்பட்ட கோயிலாக இது காணப்படுகிறது. வெள்ளிக் கிழமை தோறும் சிறப்பு பூஜை நடத்தப்பெறும் இக்கோயிலில் ஆண்டிற்கு ஒரு முறை ஆவணி மாதத்தில், அம்மாதத்தில் வரும் ஏதேனும் ஒரு வெள்ளி — சனி — ஞாயிறு ஆகிய மூன்று தினங்களில் கொடை என்று கூறப்படும் திருவிழா நடத்தப்படுகிறது.

தற்பொழுது இக்கோயிலின் தர்மகர்த்தாவாக விளங்கும் பொ. தங்க ராஜ் என்பவர் ஆண்டுதோறும் நடத்தப்பெறும் இக்கோயில் கொடைவிழா விற்கு ரூ. 25,000/- செலவு செய்யப்படுவதாகக் கள ஆய்வில் பதிப்பா சிரியரிடம் கூறினார்.

இக்கோயிலில் முதன்மை தெய்வங்களோடு ஏனைய வாதைகளுக்கும் பூஜைகள் நடத்தப்படுகின்றன. இக்கோயில் கொடை விழாவின் போது வில்லிசை, மகுடாட்டம், நையாண்டிமேளம், பொழுதுபோக்கு நாடகங் கள் ஆகியன நடத்தப்பெறுகின்றன.

### உவமை, உருவகம்

ஒரு சொற்றொடரை இலக்கியமாக மாற்றக்கூடிய தன்மை உவமை, உருவகங்களாக அவை அமையும் போது ஏற்படுகிறது எனலாம். ஏட்டு இலக்கியத்தில் காணப்படும் உவமைகள் நாட்டுப்புற இலக்கிய வடிவமான கதைப் பாடல்களிலும் பல்வகை சுவையோடு அமைந்து இருப்பதையும் காணலாம்.

புருஷாதேவி கதைப்பாடலில் பெண்களைச் சிறப்பித்துக் கூறும்போது அழகிய உவமைகள் நயம்படவும் பொருத்தமாகவும் இடத்திற்கு ஏற்பவும் கையாளப்பட்டுள்ள தன்மையைக் காணலாம்.

'முல்லைப் பூவொத்த பெண்ணரசி' (88)
'காரென்னும் குழலாள்' (106)
'கயலெனும் விழியார்' (108)
'புயலெனும் குழல்சேர் நட்பு பெண்மணி வாணுமாலை' (109)
'கொண்டல் நேர் குழலாள்' (105)
'பிறை போல் நுதலழகி' (186)
'வேல் நுதலாள்' (570)
'காவின் கிளிமொழி வாணுமாலை' (570)

எனப் பெண்மைக் கதாபாத்திரங்கள் வருணிக்கப்படும் போதெல்லாம் நல்ல உவமைகள் வழி ஆசிரியர் கூறுவது காணத் தக்கது.

புருஷாதேவி கோட்டைக் கதவுகளைத் திறக்க மறுத்தவுடன் மன்னன் செம்பொன்முடி பொங்கி எழுந்த விதத்தைக் கூறும் போது பாம்பு சீறி யெழுந்து தன் சினத்தை வெளிப்படுத்துவது போன்று சினந்து எழுந்தான் என்பதை,

''பாந்தள் போல் கோபம் மூண்டு
படையெடுத்திட்டான் தானே'' (289)

என்ற கதைப் பாடலின் வரிகொண்டு உணரலாம்.

போர்க்களத்தில் அனைவரும் வீரமரணம் எய்தி விட்டனர். பேரரசி முதல் இறுதியாகக் காடதத்தி மன்னன் வரை உயிர் நீத்து தேவலோகம் சென்று விட்டனர்.

அங்கு திருவேள்வியில் மூழ்கி வர வேண்டப்படுகின்றனர். அவ் வேள்வித் தீ வளர்க்கப்படும் இடத்தை வருணிக்கும் போது கதை ஆசிரியர் தங்கத்தைத் தயிலம் போலக் கரைத்து அவ்விடத்தை மெழுகியிருப்பதாக வருணிக்கின்றார்.

''தயிலம் போன்ற தங்கத் தாலே
தரையை மெழுகியே வேள்வி வளர்த்தார்'' (529)

என்ற வரிகள் எடுத்துக் காட்டுகின்றன.

''நாள்வழி குப்பையை நீலன்குறிப்பு வயலின்
தலத்தி லேறியவே குப்பை உயர்ந்து உயர்ந்து
சலன்போலே கதிர்தானுமே முங்கிக் கிடக்க
சிறந்ததோர் செந்நெல் விளைந்து கிடக்குது வென்ன''

(1245-1248)

என்ற வரிகள் நமக்குப் பின்வரும் செய்தியைப் புலப்படுத்துகின்றன.

நீலன்குறுப்பு நிலத்தில் விளைந்த செந்நெற்கதிரானது வஞ்சகன் எப்படித் தலைசாய்ந்து நிற்பானோ அதே போன்று கதிர்களும் தலை சாய்ந்து கொண்டும் இசக்கி பூசையில் அன்றாடம் சேர்ந்த நாள்வழிக் குப்பையானது பெருகிப் பெருகி மலைபோல உயர்வதாகவும் ஆசிரியர் கூறுகிறார். இதனில் உட்கருத்தாகப் பக்தியின் காரணமாகப் பயன்பட்ட பொருள்கள் பயன்முடிந்து (பூசை முடிந்து) தூக்கி வீசப்பட்ட போதும் உயர்ந்து மலைபோல் வளர்வதும் அதே வேளையில் இசக்கி கோயிலைத் தீயிட்டுக் கொளுத்தக் கருதும் நீலன்குறுப்பின் குறுகிய வஞ்சக எண்ணம் போன்று கதிர்கள் சாய்ந்து தலை குனிந்து கிடப்பதாகவும் உயர்ந்த செய லுக்கும் தாழ்ந்த எண்ணத்திற்கும் உள்ள வேறுபாட்டை அழகிய முறையில் முரணாக அமைத்துக் காட்டியுள்ளதைக் காணலாம்.

நீலன்குறுப்பு இசக்கி கோயிலைத் தீயிட்டுக் கொளுத்தியபின் அவன் செயலையும் தவற்றையும் ஆசிரியர் மிக அற்புதமாக உவமைப்படுத்திக் காட்டுவதைக் காணலாம்.

> ''பாழான நிலத்தின் பயிர்போல நினைப்பு
> பழியாமல் அங்குள்ள பேரறியாமல்'' — 1320

என ஆசிரியர் கூறும்போது அவனைத் தண்டிக்கப் போகும் இசக்கி மறைவாக யாரும் அறியாமல் உள்ளதை சுட்டிக் காட்டியுள்ள விதம் எண்ணத் தக்கது.

## முடிவுரை

புருஷாதேவி கதைப்பாடல் தாய்வழிச் சமூகத்தின் பெருமையை எடுத்துக் கூறும் கதைப்பாடல்களுள் சிறந்த இடத்தைப் பெறுகிறது. 'பெண்களால் பெண்களுக்காக அரசாளுதல்' என்கிற மரபினை அடிப்படையாகக் கொண்ட கதைப்பாடலாக இது திகழ்கிறது. வீரப் பெண்களாக அரசாட்சி புரிந்து தாய்வழி சமூகத்தின் பெருமையை நிலைநாட்டும் இப்பெண் தெய்வங்களை ஒரு பெண்ணின் பெயரால் அமைந்திருக்கும் 'கன்னியாகுமரி' மாவட்டத்தில் சிறப்பிடம் கொடுத்து பல்வேறு இடங்களில் கோவில் அமைத்து ஊர் மக்கள் வணங்கி வருவது ஊன்றி நோக்கத் தக்கது.

சாதீய மரபுகளைக் கடந்து இப்பெண் தெய்வங்கள் மற்றும் துணை தெய்வங்கள் வழிபடப்படுவதும் நோக்கத்தக்கன. அவ்வகையில் காராளர் என்னும் வெள்ளாளர் சாதியினர், குறுப்பு சாதியினர், நாடார் சாதியினர் ஆகியோர் இத்தெய்வங்களைத் தம் குலதெய்வங்களாகக் கொண்டு அவற்றிற்குக் கோயில் கட்டி பரவலாகக் குமரி மாவட்டத்தில் வணங்கி வருகின்றனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

# பெண்ணரசியர் கதை

## கணபதி துதி

ஆகு வாகனத் தேறிவந் தருள்வாய் — ஆனை முகவனே
    ஆகு வாகனத் தேறிவந் தருள்வாய்
ஆகு வானகத் தேறி வந்தருள்
    அடியினைப் புத்தி சித்தி போற்றவே
பாகு சேர்மொழி மாத ரிருபுறம்
    பாங்கு டன்நின்று கவரி வீசிட
சிவனுஞ் சத்தியுங் கூடி வனத்தினிற்
    சென்று கரியுருக் கொண்டு புணர்ந்திட
தவவுருவுடன் கரிமுகத்துடன் சங்கை யாகவே
    வந்து பிறந்தவா (ஆகு) 5
கயமுக னெனும்அ ரக்க னைக்கொல
    கயமு கத்துடன் சென்ற ரைக்கணம்
பயமில் லாதுபுல் லாயு தத்தினால்
    பக்ஷ மின்றியே அன்று கொன்றவா (ஆகு)
ருக்கு மாங்கதற் குற்ற நோயினை
    ஒருநொ டியினிற் தீர்த்த புண்ணியா
பக்குவ மாக யாங்கள் வில்லினில்
    பாட விக்கினம் பலதும் மாற்றவே (ஆகு)
சுகப்பி ரமரிஷி கொடுத்த கனியினைச்
    சுதாக்க ரன்மனம் கொடுக்க நினைத்துமே 10
சகத்தை வலம்வரு பவர்க்குக் கனியென
    சணத்திற் சம்புவை வலமாய்ப் பெற்றவா (ஆகு)
ஆறு முகனொடு வள்ளி யானையும்
    ஆத ரவுடன் மருங்கி லேவர
உறுதி யாய்ப்பல தேவர் தொழுதிட
    ஊக்க மாகவே இந்த அவையினில் (ஆகு)
வில்லி னிற்கவி பாட அருளிய
    விற்ப னமுடை குருவைப் போற்றியே
நல்ல தோர்கவி வில்லிற் பாடவி
    நாய காஅருள் புரியவே யிங்கு (ஆகு) 15

(1 — 15) ஆகுவாகனம் — பெருச்சாளி வாகனம். ஆனை-யானை என்பதின் பேச்சு வழக்குச் சொல். புத்தி — பேரறிவு. சித்தி — மோட்சம். பாகுசேர்மொழி — இளகக் காய்ச்சிய வெல்லம் போன்ற சொல். கவரி — சாமரை. கரியுரு — யானை வடிவம். புணர்ந்திட — உடற்சேர்க்கை கொள்ள. தவவுரு — முனிவர்களின் தவக்கோலம். சங்கை யாகவே — சிறப்பாகவே. கயமுகன் — ஓர் அசுரன்; விநாயகரால் அழிக்கப்பட்டவுன். கயமுகத்துடன் — யானைமுகத்துடன்; புல்லாயுதம் — தந்தமாகிய கொம்பு. பக்ஷமின்றியே — வேறுபாடின்றியே, ருக்குமாங்கதர் — ஓர் அரசன். வில்லினில் — இங்கு வில்லுப் பாட்டினில்; விக்கினம் — இடையூறு. சுதாக்கரன் — சுதாகரன்; சந்திரனைத் தரித்தவன்; சிவன். சகம் — உலகம். சணத்தில் — நொடி நேரத்தில். சம்பு — சிவன். ஆறுமுகன் — ஆறு முகங்களை உடையவன்; முருகன்.

ஆறு முகனொடு வள்ளி யானையும்
ஆத ரவுடன் மருங்கி லேவர
உறுதி யாய்ப்பல தேவர் தொழுதிட
ஊக்க மாகவே இந்த அவையினில் (ஆகு)
வில்லி னிற்கவி பாட அருளிய
விற்ப னமுடை குருவைப் போற்றியே
நல்ல தோர்கவி வில்லிற் பாடவி
நாய காஅருள் புரியவே யிங்கு (ஆகு)
குணமாய் அகத்தீசர் புரத்தி னெல்லைக்குள்
குலசே கரவி நாயகக் கடவுளென
சணத்தில் அடியர்மன மாசு தவிர்த்தருள்
தந்தி முகவனே ஐந்து கரத்துடன் (ஆகு)
கூறுந் தமிழ்முனி புரத்தி னுள்வளர்
குமார சுவாமி நாடாரின் சேயெனும்
ஆறுமுகப் பெருமாள் நாடா ருரைத்து
அருள்பு ரிந்திரு ளறுகவே.... (ஆகு)
மெல்லி லைபழம் பாக்கு புஷ்பமும்
மேன்மை யாயொரு கோட்டை தேங்காயும்
கல்லை மீதினி லேப டைத்துடன்
கனம்பெற தூப தீப மேந்துவேன் (ஆகு) 25
பெண்ண ரசெனும் புருஷா தேவியின்
பெரிய வீரத்தை யடியேன் கூறவே
மண்ணு ளோர்வுற்று நோக்கிப் பின்வந்து
மனங்க ளித்திட வருள்பு ரியவே (ஆகு)
பெருகின செல்வந் தோன்றி
பெண்ணர சான தாயும்
ஒருகுறை வாரா வண்ணம்
உலகினை யாண்ட காவிக்
குருபதம் மறவா திந்த
குவலையத் தில்நான் கூறு 30
கறைமிடற் றண்ண லீன்ற
கணபதி காப்பு தானே

(16-28.) ஆறுமுகனொடு — ஆறுமுகங்களை உடைய முருகனோடு. வள்ளி — வேடர் குலப்பெண். முருகன் மனைவி. மருங்கிலே — பக்கத்திலே. அவை — கற்றறிந்தோர் வாழும் சபை. வில் — வில்லுப்பாட்டு. விற்பனம் — அறிவு. அகத்தீசர்புரம் — குமரி மாவட்டத்தி லுள்ள ஓர் ஊர். சணத்தில் — விரைவில். மாசு — குற்றம், தந்தி முகவன் — யானை முகத்தை யுடையவன்; விநாயகர். தமிழ்முனி புரம் — அகத்தியர் வாழும் புரம்; அகத்தீசர்புரம். சேய் — மகன். மெல்லிலை — மென்மை + இலை; வெற்றிலை. கோட்டை — 21 மரக்கால் மரக்கால் கொண்ட ஓர் அளவை. கல்லை — தைக்கப்பட்ட இலை. கனம் — பெருமை. களித்திட — மகிழ்ந்திட.

வேறு

### (சரஸ்வதி துதி)

பூவதி லிருக்கும் ஞான மூர்த்தியே புருஷா தேவி
காவதில் மிகுந்த செல்வி கதைதனை யடியேன் கூறும்
பாவதில் பிழைவா ராமல் பரிதமிழ் புரிந்து நல்கி
நாவதி லிருந்து தாயே நற்கதைக் கருள்செய் வாயே 35

### (முருகன் துதி)

பொன்னெனும் புருஷ தேவி பொலிவுடன் புவியி லோங்கி
நன்னயக் கோட்டை யிட்டு நாட்டினை யாண்ட காவியம்
மண்ணினில் மிகுந்த வேள்வி மலைவளர் குமர சுவாமி
உன்னிரு மலர்த்தாள் போற்றி உலகினர்க் கருள லுற்றேன்

### (குரு வணக்கம்)

உற்றதோர் கதையை மனத்துள்.... 10
சொற்களிற் குற்றம் வந்தால் தூய்மையா யெங்கள் பேரில்
நற்றமிழ் கற்ற மேலோர் நாடுமிச் சபையோ ரெல்லாம்
குற்றந்தீர்த் தெமையாட் கொள்ள [1]குருசரண் முதலோர் காப்பாம்

## ஆசிரிய விருத்தம்

### (அவையடக்கம்)

பெண்ணரசி தவஞ்செய்து பெற்றிடுஞ் சுதையெனும்
  புருஷா தேவி காதையைப்
பெருமையுட னேவில்லிற் பாடவே சுவடியாய்ப்
  பெருகவே பண்ணி வைத்த 45
முன்னவர் மொழிவிடா திக்கொல்ல மாயிரத்
  தொருநூற்றுப் பன்னி ரண்டில்
முதல்மாதம் புகர்வாரம் முற்பக்கப் பஞ்சமி
  முற்பகுதி அத்தம் நாளில்
விண்மணி யெனும்நாடார் குலத்தவர் கூடி
  வீற்றிருக்கும் அகத்தீசர் புரத்தில்

(29 — 43) காவி — காவி நிறத்தையுடைய ஆடை. கறை மிடற்றண்ணல் — நீல நிறம் கொண்ட கண்டத் தைவுடையவன்; சிவன். பூ — தாமரைப்பூ. ஞானமூர்த்தி — ஞானத்திற் குத்தலைவன்; பிரமன். பா — பாட்டு. பரி தமிழ் — உயர்ந்த தமிழ். நல்கி — வழங்கி. 'தாயே' என்றது இங்கு கல்வி தெய்வமாகிய சரஸ்வதியை ஆகும். பொலிவுடன் — மாட்சிமையுடன் நன்னய — மிகச் சிறந்த. கோட்டை — அரண்மனை வெளியே கட்டப்பட்ட மதிற்சுவர். மலைவளர் குமரசுவாமி — மலையில் காணப்படும் குமாரசுவாமியாகிய கடவுள்; முருகன். குருசரண் — குருவின் திருவடிகள்.

---

1. குருசரன்.

விருத்தல்செய்கு ஆறுமுகப் பெருமாள் நாடார்
விளக்கி யெழுதுங் காதையில்
எண்ணுட னெழுத்துந் தவறிடில் பார்ப்பவர்
ஏந்து குழந்தைச் சொல்லென 50
எடுத்துப் பிழைபொறுத் தாட்கொளும் பண்டிதர்
இருசரணந் தொழுவன் யானே

## (குழந்தை வேண்டி அரசி தவமிருத்தல்)

ஆசானின் முன்னவன்றன் அம்புயப் பதம்போற்றி
ஆசாரங் குறையாமல் அம்மைகதை பாடலுற்றேன்
சீர்பெருகும் பெண்ணரசாள் திருவணையா ரம்மையென்று
ஊர்பெருக அரசாண்டு உண்மையறிந் திருக்குமந்நாள் 55
தொண்டுசெய்யும் பெண்களுடன் தோழியென யெழுபேரை
கண்டெடுத்துப் பெண்ணரசாள் கனம்பெறவே யிருந்தாலும்
வாணுமாலைத் தோழியுடன் வளமைசொல்லி நாள்தோறும்
தாணுவேயுன் செயலெனவே தையலர்கள் வாழுமந்நாள்
பெண்ணரசி வரம்பெறவே பிரிய முற்றுப் பாங்கியுடன் 60
உண்ணாமல் நோன்பிருந்து உத்தமியும் தவங்கள் செய்தாள்
பன்னகர் பரனொடு [1]பார்வதியை யும்பணிந்து
நன்னயமாய் நாற்பத்தொன்று நாள்வரைக்கும் பெண்ணரசாள்

## (அரசி கனவு காணுதல்)

நெறியாகத் தீனிருந்து நித்தனைத் துதித்திருக்க
செறிவாக நாற்பத்தொரு திவசமது செல்லும்முன்னே 65
மின்னார்கள் விரிமலர்தான் மிகுதிகொடு வந்திடவும்
மண்ணாளும் மாமலையில் [2]வாழ்குளவிக் கூடதுவும்
பன்னகம்வந் தேமடியில் பையநின்று ஆடிடவும்
பெண்ணரசி கண்ணிற்கண்டு பொருக்கனவே தோழியுடன்

(44 — 59) பெண்ணரசி — ராணி. சுதை — மகள். சுவடி — ஏட்டுப் புத்தகம். பண்ணி — செய்து. கொல்லம் — கி.பி. 825-லிருந்து கணக்கிடப்படும் தென்தமிழ் நாட்டிலும் மலையாள நாட்டிலும் வழங்கப்படும் ஓராண்டு முறை. முதல்மாதம் — சித்திரை. புகர்வாரம் — வெள்ளிக்கிழமை. அத்தம் நாள் — அத்தம் நட்சத்திரம். ஏந்து குழந்தை — கைக்குழந்தை. பண்டிதர் — அறிஞர். அம்புயப் பதம் — தாமரை போன்ற சிவந்த நிறமுடைய பாதம். ஆசாரம் — சாஸ்திர முறை. அம்மை கதை — புருஷாதேவியின் கதை. திருவணையா ரம்மை — புருஷா தேவியின் தாயார்; ராணி. கனம் — பெருமை. வாணுமாலை — ராணியின் தோழியர் எழுவருள் முதன்மையாய் திகழ்கின்றவள் பெயர். தாணு — தாணுமாலயன்; சிவன். தையலர் — பெண்கள்.

### (கனவின் பலனைக் கேட்டலும் தோழியர் பதிலும்)

சேடிகளே யிரவிற்கண்ட தெரிசனத்தின் பலனுரைத்துக் 70
கூடிடுவீ ரெனவுரைக்க கோதையருங் கூறிடுவார்
கூடதுவுங் கண்டகனா குறிப்புணர்ந்து பார்த்ததிலே
நாடதுவுந் தானறிய நல்லபிள்ளை யென்றனராம்
ஏடலருங் குழலார்கள் எழுபேருஞ் சொன்னமொழி
கேடதொன்றும் வாராது கெட்டிகெட்டி யென்றுமெய்த்து 75
என்றுமெய்த்து பெண்ணரசாள் ஏத்தநிற்ற யூட்டுவைத்து
அன்றுசிவன் கோயிலெல்லாம் ஆநேயத்தால் விளக்கேற்றி
ஒன்றுங் குறைவாராமல் உம்பர்களும் மகிழ்ந்திருக்க
நன்றியுடன் சிவன்பாதம் நாடியங்கே தானிருந்தாள்

### (அரசி கர்ப்பம் தரித்தல்)

**விருத்தம்**

இருந்தர சாளும் நாளில் எழுந்தசிங் களகா ரிங்கே
பரந்துதே பன்னி ரண்டு பருவமும் திகைத்த போது
நிரந்தர மாகவீசி நிற்கும்நாள் கெற்பந் தோன்ற
வரந்தாருஞ் சிவனே யென்று வல்லபெண் ணரசி வாழ்ந்தாள்

### (கர்ப்ப வளர்ச்சி)

**வேறு**

வாழ்ந்த நாளதில் பெண்ண ரசிக்கு
  மாத மொன்றெனச் சொல்லவே
வந்து தோழிமா ரெழுபேர்களும்
  வளைந்து பக்கலி லிருக்கவே
சூழ்ந்த வூரதி லுள்ள மாதர்கள்
  சுற்றிக் கூடியே சிவகெதி
சொல்லி வாழவே பெண்ண ரசிக்குச்
  சுருக்காய் மதியிரண் டாகியே 85
நல்ல தாகவே வுருவ ளர்ந்திட
  நாய னார்முன்ன மைத்ததே

(60 — 78) பரன் — சிவன். பார்வதி — சிவனின் துணைவி; உமையவள். நித்தன் — சிவன். திவசம் — நாள். மின்னார் — அழகிய பெண்கள். மாமலை — பெரிய மலை. குளவி — வண்டு. பன்னகம் — பாம்பு. பைய — மெதுவாக. சேடிகளே — தோழிகளே. தெரிசனம் — காட்சி. கூடிடுவீர் — ஒன்று சேர்வீர். கூடதுவும் — கைக்கூடுமா? கூடாதா என்ற நிலையில் ஏடலரும் — மலர் மலர்கின்ற. குழலார்கள் — சுருண்ட மயிருடைய கூந்தலார்கள்; இராணியின் தோழியர்கள். கெட்டி — உறுதி மெய்த்து — உண்மையாகக் கூறி. ஊட்டு — இறைவனுக்குப் படைக்கப்படும் பெருஞ்சோறு. நேயத்தால் — நெய்யால். உம்பர் — தேவர்.

நன்று நன்றென ரகசி யங்களை
நாடி யேபலர் சொல்லுவார்
கல்லைப் பெண்ணெனச் சமைத்த சீதராமா
காப்ப துன்பர மென்னவே
கருத்தி லுற்றவர் பழமை பேசியே
கெளவை நீங்கியே சென்றிட

### (கருவின் மூன்று மாத வளர்ச்சி)

முல்லைப் பூவொத்த பெண்ண ரசிக்கு
மூன்று மாதம தாகிட
முத்தி பெறவேநல் சத்தி பூசையும்
முதன்மை யாகவே செய்தவர்
புல்லா சனத்துறை ஆண்ட வர்உனைப்
போலக் காப்பவ ராரினி
பெண்ண ரசியைப் போற்றல் செய்திடும்
புகழு னக்கெனச் சொல்லவே
வேதர் வென்றலை மீதி லெழுதின
விதிவி ருதாவில் போகுமோ
வீற்றி ருப்பவர் காத்தி ருப்பவர்
மெய்ய தல்லவே யென்பார் 90

### (கருவின் நாலுமாத வளர்ச்சி)

நாதர் சிவகுரு நாதர் பரமென
நாட்கள் சென்றிட அரசிக்கு
நாலு மாதமும் வந்து பிறந்திட
நல்ல கெற்பம தாகினாள்
போதி மறிந்தநல் தோழி கள்பல
புராண சூத்திரங் கூறவே
புண்ணி யப்பல தீர்த்த வெண்ணைகள்
போற்றி யேமிகக் கொடுத்தனர்
பாத மொன்றெனக் கேச நீளமும்
பாவை யர்நிறம் மாறவே

(79 — 88) சிங்களகார் — சிங்களத்திசை; இங்கு தென்கிழக்கு திசையைக் குறித்தது. கெற்பம் — மகப்பேறு உண்டாதல் பக்கல் — அருகாமை. சிவகெதி — முக்திக்குரிய வழிகள். சுருக்காய் — விரைவாய். மதி — மாதம். உரு — கருப்பையில் இருக்கும் குழந்தை. நாயனார் — சிவன். 'கல்லைப் பெண்ணெனச் சமைத்த' வரலாறாவது கௌதமர் மனைவியாகிய அகலிகை தன் கணவர் உருவோடு வந்த இந்திரனோடு அறியாமல் புணர்ந்தமையை அறிந்த கௌதமர் அகலிகைஸ்யை தவறு செய்த நீ கல்லாவாய் என்றும் இந்தபாவத்திலிருந்தும் நீ ராமன் கால் பாதம் பட மீள்வாய் என்று கூறிய செய்திகள் கூறுவதாகும். கௌவை — துன்பம். சத்தி பூசை — பார்வதி பூசை.

பாங்கி மார்களும் சாந்த மாகவே
　　பலவ ளமைகள் சொல்லினார்
ஊர தானவர் நேர தானவர்
　　உடனே கூடியே சாத்திரம்
உரைக்கும் முறைமைகள் பிசகில் லாமலே
　　உண்மை யாகவே செய்தனர்

### (கருவின் ஐந்துமாத வளர்ச்சி)

கோர மானநல் வீர மஞ்ஞையில்
　　ஏறிக் குஅபி ஷேகமும்
குணமாய்ச் செய்திட ஐந்து மாதமும்
　　கூடி வந்திட தோழிகள் 95
சீர தானநல் ஞான மூர்த்தியைச்
　　சிந்தித்துப் பூசை செய்தவர்
சிறப்ப தாகவே இருக்கும் நாளதில்
　　ஆறு மாதமும் தோன்றிட

### (கருவின் ஆறுமாத வளர்ச்சி)

ஆற தாகிய மாதம் வந்திட
　　எல்லோ ரும்மனம் மகிழ்ந்தவர்
அம்மை யாகிய பெண்ண ரசிக்கு
　　ஆற்ற லாய்ப்பல கூறுவார்
கூறும் வார்த்தையைத் தோழி எழுவரும்
　　கொண்டு மனமது தேறியே
கூடி னாரவ ரேழு பேர்களும்
　　கூண்டு ஒருமுறை பேசியே

### (கருவின் ஏழுமாத வளர்ச்சி)

ஆறு செஞ்சடை சூடி யைத்தொழு
　　தங்கி ருக்கவே அரசிக்கு
அன்ப தாகவே மாத மேழென
　　அறிந்து தோழிய ரெழுவரும்

(89-94) புல்லாசனம் — புல்லையே ஆசனமாகக் கொண்டிருத்தல். வேதர் — பிராமணர். விருதா — வீணாய். நாதர் — சிவபெருமான். போதம் — ஞானம். புராணச் சூத்திரம் — பழங்கதை விதிகள். தீர்த்தம் — அடியார்கட்கு வழங்கப்படும் ஆராதனை நீர். கேசம் — முடி. நிறம் — கருப்பம் உண்டாமையில் உடலில் ஏற்பட்ட நிற மாற்றம். ஊர தானவர் — நேரதானவர். சாத்திரம் — வேதம், தர்க்கம் பற்றிக் கூறுவன. பிசகு — தவறு.

### (கருவின் எட்டுமாத வளர்ச்சி)

இயல்வ தாகவே கோப்புக் கூட்டியே
　　இறையின் கோயில் முகப்பிலே
ஏந்த லாகவே பொங்கி யிருக்கவே
　　எட்டு மாசமு மாகிட 100
வசந்த மண்டப வாயில் விட்டந்த
　　மங்கை யரசிநீ ராடியே
வட்டம் பட்டிகை யிறுக்கிக் கட்டியே
　　வந்து வெளியிலே நின்றனள்

### (கருவின் ஒன்பது மாத வளர்ச்சி)

நயமாய் நல்லமா தரசுக் கும்மதி
　　நவம தாகிடப் பெண்டுகள்
நாட்ட மாகவே கூடி வந்தவர்
　　நலமு டனேயே சொல்லுவார்

### (மகப்பேறு நலமாய் முடிய பொங்கலிடுதல்)

மயங்க ளானது உனது மயமல்லால்
　　மற்றுண் டோயினித் தினகரா
மயங்கா திந்தநல் பெண்ண ரசியை
　　மகிழச் செய்வைநீ யென்னவே
உயர்ந்த வானவர் புவியி லுள்ளவர்
　　உடனே கூடிநல் சாஸ்திர
ஓது வார்வேத மானதை
　　ஓது வார்பல பேர்களும்
பயந்து கலமது ஏற வைத்தனர்
　　பண்ப தாகவே குரவைகள்
பரவை ஒலியென கோல பூசைகள்
　　பாங்க தாகவே செய்திட 105

(95 — 99) மஞ்ஞை — மயில். அபிஷேகம் — புனித நீராட்டு. ஞானமூர்த்தி — சிவன். மறை — வேதம். ஆறு — கங்கையாறு. ஆறு செஞ்சடை சூடி — கங்கையை சிவந்த சடையில் சூடியவன்; சிவன்.

(100 — 105) கோப்பு — அலங்காரம். பொங்கி — நைவேத்தியம் சமைத்து. வசந்த மண்டபம் — பூந்தோட்டம் நிரம்பிய மண்டபம். வட்டம் — ஒரு வகை முத்து. பட்டிகை — இடுப்பில் அணியும் மேகலை என்றும் அணிகலன். மதி — மாதம். நவமதாகிட — ஒன்பதாகிட. பெண்டுகள் — பெண்கள்; தோழிகள். மயம் — அழகு. தினகரா — சூரியனே. வானவர் — தேவர். ஓதுவார் — உச்சரிப்போர். கலம் — உண்கலம். பரவை ஒலி — கடலலை ஓசை கோல — அழகிய

காரெ னுங்குழ லார்கள் கூடியே
கலமி றக்கிப்பா லடிசிலை
கல்லை மீதினில் நல்ல தாகவே
கட்டு டனெடுத் திட்டவர்
சூரி யபக வானுக் கென்றெதிர்
தோற்றும் வண்மை தாகவே
தோகை யர்படைத் திட்ட வுன்னத
சுத்த மாக இருந்தனர்

### (மகப்பேறுக்குத் தனிமாடம் அமைக்க எண்ணுதல்)

**விருத்தம்**

கயலெனும் விழியார் கூடி கருணையா யிருக்கும் நாளில்
புயலெனுங் குழல்சேர் நட்பு பெண்மணி வானு மாலை
நயமுடன் அரசிக் கிப்போ நல்லதோர் மரங்கள் வெட்டி 110
வசமுடன் பிள்ளை யீன வருக்கணம் புரைய தென்றார்

### (தோழி வாணுமாலையின் அழைப்பு)

**வேறு**

என்று வாணுமாலைத் தோழி சொல்லவே
இகுளை மாரெல்லா மொன்றுபோற் கூடியே
நன்று நன்றெனச் சிற்பியரைக் கூட்டி
நலம தாகவே ஏதுரை சொல்லுவார்
இன்று கண்ணுள் வினைஞரே நீங்களும்
ஏகியே மலைமீதில்மரம் வெட்டி
அன்னை பெண்ண ரசிக்கு ஈத்துப்புரை
அழைக்க வேண்டிய தென்றுரை கூறவே 115

### (மரம் வெட்ட ஆயுத்தமாதல்)

சிற்பியர் கூடி நல்லநாள் பார்த்துமே
தேறிக் கட்கத் துடனுளி கோடாலி
அற்புத மாய்கொடு வாளுங் கைக்கொண்டு
அசலந் தன்னில் மரம்வெட்டப் போகவே
எண்ணி மாந்தையர் ஓர்முகம் ஆகவே
இருந்து யீசனைப் போற்றுவா ரிப்படி

(106-117) கார் — கறுத்த மேகம். கலம் — பொங்கலிட்ட பானை. அடிசில் — சோறு. கல்லை — தைக்கப்பட்ட இலை. தோகையர் — மயில் போன்ற சாயலர்; தோழியர் கயல் — கயல் மீன். புயலெனும் — கறுத்த மேகம் போன்ற. இப்போ — இப்பொழுது ஈன — பிறக்க. வருக்கணம் — உருவாக்க வேண்டும். இகுளை — தோழி. சிற்பியர் — கல் தச்சர் ஏதுரை — ஏற்ற உரை. கண்ணுள் வினைஞர் — மர ஆசாரி. ஈத்துப் புரை — மகப்பேறுக்கென தனியாக அமைக்கப்பட்ட அறை. கட்கம் — வாள். உளி — ஒரு தச்சுக் கருவி. கோடாலி — ஒரு மரம் வெட்டும் கருவி. அசலம். மலை.

## (சிவனை வணங்கி மரம் வெட்டுதல்)

கண்ணன் மைத்துன னான சதாசிவ
    கடுங்கை யங்கண்ணி சூடியே கங்காளர்
பண்டு முப்புரந் தன்னை யெரித்தவா
    பதஞ்சலி முனிவர்க் கருளீந்தவா
கன்று மானை கரத்தில் தரித்தவா 120
    கங்கை வேணியனே கயிலை யாளி
அரவ ணிந்திடு மாதி யழலாடி
    அந்தி வண்ணா ஆனந்தா அனந்தனே
பரசு பாணியே பாண்டுரங் காசோதி
    பர்க்கன் யோகி பவனே உமாபதி
பெண்ணர சாருக்கு ஈத்துப் புரைகட்ட
    பூருகம் வெட்டப் போகிறோ மெங்கட்கு
இன்ன லின்றி நிலைபெறுத்தல் செய்யும்
    ஈஸ்வரா வெனமாந்தை யரோதியே 125
உந்தி தன்னிலே தாமரை பூத்தவா
    உதவ வேணுமடி யார்க்கு வுண்மையாய்
மூந்த வேமலை தன்னில்வாழ் சேந்தனே
    முக்கண்ணன் சுதனே வந்து காரென
மலையிற் சென்று மரங்களைச் சோதித்து
    மனசுக் கேற்ற மரங்களை வெட்டிட
நிலையில் வாது மரங்கள் விழுந்திட
    நிச்சய மாய்அந்த ரகத்தில் வாழ்கின்ற

## (துர்தெய்வங்கள் வெருட்டுதல்)

இசக்கி யோடு கழுக்காரன் மானும்
    ஈனனும் ஈரைப் பேச்சியுந் தோணியே 130
பசங்கள் யாரோ வந்திம் மலையிலேறி
    பக்குவ மின்றி நன்மைக் கெணியாமல்
நாமள் சந்தோஷ மாகவே வாழ்கின்ற
    நல்ல நல்ல மரம்வெட்டி சாய்க்கிறார்
நாமள் ஓடிப் பிடித்துக் கொலை செய்வோம்
    நரரை யென்னவே மாடனு மோடியே

(118 — 132) மாந்தையர் — மரம் வெட்டும் பணியாளர் (மாந்தர் — மாந்தையர் எனப் பட்டது). கண்ணன் மைத்துனன் — சிவன். கடுங்கை — கடுமை. கண்ணி — பூமாலை. கங்காளர் — சிவன். முப்புரம் — பொன் வெள்ளி, இரும்புகளால் செய்யப்பட்ட மூன்று கோட்டைகள்; இவை சிவபெருமானால் எரிக்கப்பட்டன. பதஞ்சலி முனவர் சிவ பெருமானின் ஆனந்த நடனத்தைக் கண்டு களித்தவரும் பல வடமொழி நூல்களை இயற்றியவருமான முனிவர். கன்று மான் — இளமான். கங்கை வேணியன் — கங்கையைச் சூடியவன்; சிவன். அரவு — பாம்பு. ஆதி — எல்லாவற்றுக்கும் முதலாக உள்ள இறைவன்; சிவன். அழலாடி — நெருப்புச் சட்டியைக் கையில் வைத்து ஆடுபவன்; சிவன். அந்தி

### (தெய்வத் தண்டனை)

மற்று முண்டான பேர்களு மோடியே
    மாந்தை யர்வயி றுள்ளே புகுந்தவர்
சற்றுந் தாரள மின்றிக் கசக்கவே
    தபதி யர்க்கு உதிரம் வெளிப்பட 135
வந்த பேர்கட்கு வாசி பொறுக்காமல்
    வாயி னாலே உதிரங்கள் கக்கியே

### (மரம் வெட்டச் சென்றோர் புலம்பல்)

எங்கள் வாணாள் முடியுதே ஐயையோ
    எங்களைக் காத்து ரெஷியும் தெய்வமே
தெய்வமே யென்று தேறிக் கண்ணார்கள்
    திட்டம் வாராம லேவிரல் வெட்டியே
[1]வைய்யம் மீதிலே சோரி தெளித்திட
    வந்த பூதங்கள் நின்று ஒருவன்மேல்

### (இசக்கியின் நற்சொல்)

துரிச மாக யிசக்கி யாராதனை
    தோன்றி யேயொரு வார்த்தை யுரைக்குமாம் 140
வரிசை யாக மரங்களைக் கொண்டுமே
    வாழும் ஊருக்குப் போங்கோ அவிடத்தில்
நாங்களும் வந்து காப்போ மெனச்சொல்ல
    நாடியே அக்கச் சாலையர் கூடியே

### (மரம் கொண்டு வந்து கீற்றுப்புரை செய்தல்)

பாங்க தாக மரத்தைப் பணிசெய்து
    பைந்தொடி பெண்ண ரசியி டத்திலே
கண்ணாளர் கொண்டு வந்து யிறக்கியே
    காரி யங்கள் பலது முரைத்தவர்

வண்ணா — மாலை நேரத்து மேக வண்ணா; சிவனே. ஆனந்தா — சிவனே, பரசுபாணி — கோடரியை ஆயுதமாகக் கொண்டவன்; சிவன். பாண்டுரங்கா — வெண்மையான மேனியனே; சிவனே. சோதி பர்க்கன் — சோதி மயமான சிவன். உமாபதி — உமையின் கணவன்; சிவன். பூருகம் — மரம். ஈஸ்வரா — இறைவா; சிவனே. 'உந்தி தன்னிலே தாமரை பூத்தவா' — கொப்பூழில் தாமரை மலரை மலரச் செய்தவர்; விஷ்ணு. சேந்தன் — முருகன். முக்கண்ணன் — மூன்று கண்களை உடையவன்; சிவன். சுதன் — மகன்; சிவ பிரான் மகனான முருகன். கார் — காப்பாய். பசங்கள் — சிறார்கள் கெணியாமல் — கௌரவிக்காமல். நாமள் — நாம்.

(133 — 144) நரர் — மானிடர். கசக்கவே — நெருக்கி கசக்கவே. தபதியர் — சிற்பியர். வாசி — சுவாசம். வாணாள் — வாழ்க்கை நாள். வைய்யம் — உலகம். சோரி — இரத்தம். துரிசமாக — வேகமாக. இசக்கி யாராதனை — இசக்கிக்கு செய்யப்படும் வழிபாடு. அக்க சாலையர் — மரவேலை செய்யும் ஆசாரிமார்.

1. வையும்.

நண்ண லாகவே மாந்தையர் கூடியே
நாரிக் கீற்றுப் புரைசெய்ய வந்தனர் 145

(கீற்றுப்புரையைக் கட்டி முடித்தல்)

**விருத்தம்**

வைத்ததோர் மரங்க ளெல்லாம் வகை[1]தொகை கணக்குப் பார்த்து
செத்தியே புனைந்தோர் தாமும் திறம்படக் கூரை சேர்த்து
சித்திர மாக நல்ல சீர்புரை யதுமு கித்து
கர்த்தனார் அருளி னாலே கருத்து டனிருந் தாரன்றே
அன்றவர் புரைமு கித்து அடங்கலும் வருவீ ரென்ன
குன்றெனும் ஸ்தனத்தார் கூடி கொடுத்தனர் சன்மா னங்கள்
பொன்றுத வில்லா வாறு புரவுதல் கொடுத்த போது
நன்றென மாந்தை வேந்தர் நலமுடன் நடக்க லுற்றார்

(அரசிக்குக் குழந்தைப் பேறுக்கான வயற்று நோவு காணுதல்)

நடந்திடப் பெண்ணா ளுக்கு நவமதி கழிந்த பின்பு
திடம்பெறப் பத்து மாதம் திகைந்திட வயிறு நொந்து 155
மடந்தைதான் மருளும் போது மருத்துவத் தாளைக் கூட்டிப்
படபடப் புடனே வந்தார் பாங்கிமா ரென்று தானே
வந்ததோர் மருந்து வத்தாள் வயிறதை வளையப் பார்த்து
சந்தமாய் வருங்காண் நம்மை தையலே மலங்கா தென்ன
அந்த வேளையிலே நோவு அடிக்கடி வந்து நொந்து 160
விந்தைசே ரரசு பெற்றாள் மேதினி புரக்க வென்றே
என்றதோர் மொழியைக் கேட்டு எழிலுடன் வூரி லுள்ளோர்
ஒன்றுமே குறைவா ராது [2]உற்றவிற் பனைஞ்சொன் னோர்க்கு
வென்றிசாம் பூன தத்தால் விதித்தநற் பணிகளெல்லாம்
கொண்டல்நேர் குழலாள் கண்டு கொடுத்தனர் குறைவா ராமல் 165

(145—167) நாரி—பெண். கீற்றுப்புரை—மரங்களால் செய்யப்பட்ட சிறுவீடு. கணக்கு—தரம். செத்தியே—செதுக்கியே. புனைந்தோர்—அழகு படுத்தியோர். முகித்து—முடித்து. கர்த்தனார்—கடவுள். புரை—கீற்றுப்புரை. குன்றெனும் ஸ்தனத்தார்—பருத்த மார்பகத்தார்; தோழியர்கள். சன்மானங்கள்—பரிசுப் பொருட்கள். பொன்றுதல்—குறைதல். புரவுதல்—கொடை. நவமதி—ஒன்பது மாதங்கள். நொந்து—குழந்தை பேற்றுக்கான வலி உண்டாகி. மருளும் போது—மயங்கும் பொழுது. மருத்துவத்தாள்—மருத்துவச்சி. படபடப்புடனே—விரைவு குறித்த சொற்றொடர். பாங்கிமார்—தோழி மார். வளைய—சந்தமாய்—அழகாய். மலங்காதென்ன—மயக்கம் கொள்ளாது இரு எனக் கூற. நோவு—பிரசவ வலி. மேதினி—உலகம். புரக்க—காக்க. விற்பனம்—மொழி அல்லது சொல். வென்றி—வெற்றி. சாம்பூனதத்தால்—'சாம்புநதம்' என்னும் பொன் னால். கொண்டல்நேர் குழலாள்—கருமேகம் ஒத்த கூந்தல் உடையாள்; அரசி. மல்லார்—மல்யுத்த வல்லவர்.

---

1. துகை 2. உத்த

## (குழந்தை பிறத்தல்)

வேறு

மல்லார் தானீன்ற தென்புவியில் வாழும் பெண்ணரசி நாடதிலே
அல்லல்தனைத் தீர்க்கப் பிறந்தமகள் அவதரித் தோர்பல மதனை
சோதிட னாலே தானறிந்து சுறுக்காய்ச் சாதகமும் வருத்தி
சோதிடற் குப்பரி சீந்தனுப்பி தோகைக் கரசியுந் தானிருந்தாள்

## (குழந்தையை அழகு படுத்தல்)

இருக்கும் நாளிலே பாங்கியர்கள் எழிலாய்ப் பாலகி தனையெடுத்து 170
வருணத் தாற்குளிப் பாட்டிவைத்து வஸ்திரத்தி னாலே துவட்டி
பூதி யணந்த பாலகிக்கு பொன்னாற் றோடொடு பதக்கமுடன்
பாத கிண்கிணி நூபுரமும் பாடகந் தண்டை சதங்கையுடன்
கையி லாழியுஞ் சூடகமும் கழுத்தி லட்டிகை தானணிந்து
கொய்சகம் வைத்துத் துகிலுடுத்துக் குழந்தையைத் தொட்டில்
தனிற்கிடத்தி 175
சேலொத்த கோக்கஞ் சனமெழுதி சேய்யிழை மார்பக்கல் சூழ்ந்திருந்து
நீலி பகவதி துணையெனவே நினைத்துஇரு பத்தெட்டதுவுங் கெட்டி

## (குழந்தைக்குப் புருஷாதேவி யெனப் பெயர் சூட்டுதல்)

பிழைத்தோமே யென்று பெண்கொடிமார் பிள்ளைக்கு நாம
மிடணமென்ன
பொழிலெலாம் வாழப் பிறந்தமகள் புருஷா தேவியென் றேயழைத்து
எங்கும் புகழவே பாலகியை இன்ப மாகவே போற்றல்செய்து 180
தங்கள் மனமது களிகூர சந்த மாகத்தா லாட்டுவாராம்

## குழந்தையைப் புகழ்ந்து தாலாட்டுதல்

வேறு

பொன்னிலங்கும் பெண்ணரசாள் புவிதனையும் ஆளவென்று
மண்ணிலங்க வேயுதித்து வாழுமெங்க ளரசாரோ
பெண்ணரசர் எம்மையவள் பெற்றதவத் தாலேவந்து
மண்ணதனை யரசாள வந்தளங்க ளரசாரோ 185

(168 — 189) சாதகமும் — கிரக நிலையைக் கணக்கிட்டு எழுதப்படும் ஜாதகமும். வருத்தி — வரச்செய்து. தோகை யரசி — மயில் போல் சாயலுடைய அரசி. பாலகி — பெண் குழந்தை. வருணம் — மஞ்சள். வஸ்திரம் — ஆடை. பூதி — நறுமணப் பொருளுள் ஒன்றான புனுகு. தோடு — ஒரு வகை காதணி. பதக்கம் — ஒரு வகை கழுத்தணி. பாத கிண்கிணி நூபுரம் — பாத சங்கை. பாடக தண்டை சதங்கை — ஒரு வகை காலணி. ஆழி — மோதிரம். சூடகம் — கை வளையல். அட்டிகை — கழுத்தணிகலனில் ஒன்று. கொய்துகம் — ஓரங் கொய்து சுருக்கப்பட்ட ஆடை. சேலொத்த — சேல் மீனை ஒத்த. கோ — கண். அஞ்சனம் — மை. இடனம் — சூட்ட வேண்டும். களி கூர — மகிழ்ச்சி மிகுதியாக. புவி — உலகம். தாபரமாய் — பற்றுக்கோடாய். பவம் — பாவம். பாலகி — பெண் குழந்தை. கீர்த்தி — புகழ்.

தவங்கள் பலதுமான தானடியேன் தாபரமாய்
பவங்கள்பல தீர்க்கவந்த பாலகியே அழவேண்டாம்
எத்திசையுங் கீர்த்திதனை இனிநடத்த வேண்டுமென்று
புத்தியினால் வந்துதித்த புருஷாதேவி பொன்னம்மையோ
பிறைபோல் நுதலழகி பெண்ணரசா ளம்மைபெற்ற 190
குறையாத செல்வ[1]மென்னும் குஞ்சரமே கண்வளராய்
சேனைப் பெருக்கமெனும் சேயிழைமார் சூழ்ந்திருக்க
ஆனை குதிரைகட்டி அரசாள வந்தவளோ
வந்தஎங்க ளரசாரோ வாழ்மயிலோ மாங்குயிலோ
சந்தமுறும் பூங்குழலாள் தானீன்ற தையலரோ 195
தையலரோ வையகத்தில் தாபரமோ நீபரமோ
கையத்தில் வந்தபொருள் காரணமோ நீயரசோ
அரசோ குயில்மொழியோ அன்னநடை வாழ்மயிலாளோ
விரியும் நறுமலரோ மெய்ப்பொருளோ அற்புதமோ
அற்புதமோ மெய்ப்புருஷா அணங்குசிவ காமியரோ 200

இப்புவியைக் காக்கவந்த ரெத்தின மணிவிளக்கோ
புருஷாதேவி யெனவே போற்றித்தினம் வாழ்வோரின்
இருள்நீக்கி யருள்கொடுக்க இரங்கிவந்த அரசாரோ
அரசுரிமை வேணுமென்று அம்மைநெடு நாளாக
[2]பரிதவித்து இருந்ததற்குப் பாலகியாய் வந்தவளோ 205
வந்தவளோ வையகத்தில் வாழுகின்றோர் தான்மலங்கி
நொந்துருகிப் போகாமல் நொடிக்குள்வந்து காத்தவளே
காத்தவெங்க ளரசாரோ கண்கொள்ளா ஓவியமோ
பூத்தநல்ல நறுமலரோ பொன்னனைய மின்னாரோ
மின்னோ ஒளிவெளியோ விளங்கும்நவ ரத்தினமோ 210
பொன்னோ நவமணியோ பூமகளோ பொற்குயிலோ
பொற்குயிலோ மெய்குமரன் பொன்னடியைப் போற்றுவதால்
திக்குஜெயம் கொள்ளவந்த தேனோ சிவக்கொழுந்தோ
சிவனே பவானியரே தேவிசிவ காமியம்மா
அவம்நீக்க வேபிறந்த ஆயிழையே ராராரோ 215

(190-215) பிறை — சந்திரன் வளர்பிறையில் மூன்றாம் பிறை நுதல் — நெற்றி. குஞ்சரம் — கருங்குவளை மலர் கண்ணாள்; புருஷாதேவி. தையலரோ — பெண்ணோ. தாபரமோ — பற்றுக்கோடோ பரமோ — கவசமோ. கையத்தில் — கைக்குள்ளே. சிவ காமி — பார்வதி தெய்வம். அரசுரிமை — வாரிசு. நவரத்தினம் — கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து, புருடராசம், வைடூரியம், வயிரம் ஆகிய ஒன்பது வகை கற்கள். நவமணியோ — நவரத்தினமோ. திக்கு — எட்டு திக்குகள் அல்லது எண் திசைகள்.

---

1. மெனும் 2. பரிதவிந்து

வேறு

## (புருஷாதேவியின் கல்வி தேர்ச்சி)

பிறந்தனள் — புருஷாதேவி — பிறந்தனள்
பிறந்தாள் புருஷாதேவி பெண்ணரசாள் செய்து
பெற்ற தவத்தினாலே பெருக மனம்மகிழ்ந்து
அறத்தான் தழைத்திடவே அரசர் மனமகிழ
ஆனை குதிரைகெட்டி ஆளப் புவியிலொன்று (பிறந்த) 220
ஆளப் புவியிலன்று [1]ஐந்து வயதுசெல்ல
அழகதாகப் பள்ளிக் கன்பா யிருத்தலென்ன
காள மேகம்போன்ற ஆசானைத் தேடியே
கட்டாயத் தெக்ஷணையது கன்னி கொடுத்திடவே (பிறந்த)
கொடுத்த திவசமதில் குரவை[2]குமுறிடவே
கண்ட வாத்தியங்கள் வேண்டும் வண்ணம்முழங்க
எடுத்தார்கை தனிலேடு இதமாய்த் தமிழ்க்கிரந்தம்
[3]ஏற்ற பலகலையும் கீர்த்தியுடன் படிக்க (பிறந்த)
படித்தா ளருவரியும் பதினெண் புராணம்வரை
பாரிலாரு மிவள்போல் படிக்க வில்லையெனவே 225
வடிவுடைய பெண்ணாள் வாணுமாலைத் தோழி
வளமாய் அருகிருந்து வாகைமொழிகள் சொல்ல (பிறந்த)

## (போர்ப் பயிற்சியில் புருஷதேவி தேர்ச்சி பெறுதல்)

படித்துக் கல்வியெல்லாம் பாடமான போது
பாவை புருஷாதேவிக் கேழு வயசதாக
அடித்தாள் சிலம்பம்முதல் உடைவாள் வெட்டுஆயுதம்
அடவு முறைகளெல்லாம் அம்மை படிக்கும்வண்ணம்(பிறந்த)
கரத்தால் கச்சையிறுக்கி காதில் பணியுமிட்டு
கனகமாம் மூக்குத்தி நெற்றிப் பிறையுமிட்டு
சிறந்த காலில்தண்டைப் பொன்னின் பாடகமும்
சேரவணிந்து சட்டை யிட்டு பிடிபடிக (பிறந்த) 230

(216-228) புவி — பூமி. காளமேகம் — ஒரு புலவர்; விரைவாகக் கவிபாட வல்லவர். தெக்ஷணை — தட்சிணை; குரு முதலியோர்க்கு கொடுக்கும் பொருள். கன்னி — இளம் பிராயத்தாள்; புருஷாதேவி. திவசம் — தினம். குரவை — மகளிர் மகிழ்ச்சி காலத்தில் நாவால் எழுப்பும் ஒலி. கூண்ட வாத்தியம் — இருவரி — இருவரியில் எழுதப்பட்ட குறள் வெண்பா; திருக்குறள் பதினெண் புராணம் — சிவபிரானைப் பற்றிக் கூறும் மச்ச புராணம், கூர்மபுராணம், வராகபுராணம், வாமனபுராணம், சிவமகா புராணம், இலிங்க புராணம், பவிடியபுராணம், காந்தபுராணம், மார்க்கண்டேயபுராணம், பிரமாண்ட புராணம் என்னும் பத்தும், திருமாலைப் பற்றிக் கூறும் விஷ்ணுபுராணம், பாகவத புராணம், கருடபுராணம், நாரதீயபுராணம் என்ற நான்கும், பிரமனைப் பற்றிக் கூறும் பிரமபுராணம், பதுமபுராணம் என்ற இரண்டும் அக்கினியைப் பற்றிக் கூறும் ஆக்கினேய புராணம் ஒன்றும், சூரியனைப் பற்றிக் கூறும் பிரமவைவாத்தபுராணம் ஒன்றும் ஆகிய பதினென் புராணஙகள. வடிவுடைய பெண்ணாள் — அழகுடைய பெண்ணாள் பாவை — பெண். சிலம்பம் — கழி கொண்டு போரிடும் ஒரு போர் முறை. அடவுமுறை — காலடி வைக்கும் அளவு முறை. அம்மை — புருஷாதேவியின் தாய்.

1. அஞ்சு 2. குமிறிடவே 3. ஏத்த

இலங்காபுரியில் வந்து புருஷாதேவி யம்மை
ஈஸ்வரி பகவதி பத்ரகாளி யென்ன
துலங்க வாணுமாலைத் தோழி யவளுடனே
தொந்தந் தரிகிட மென்றுகால் முறைவைத்து (பிறந்த)
கட்டியான பொன்னை வெட்டிக் கணபதிக்குக்
கையாரவே வைத்துக் காலில் விழுந்தெழுந்து
பட்டுக்கச்சை கட்டிபணிந்து கால்முறை வைத்து
பாங்கி வாணுமாலை தன்னுடனே படிக்க (பிறந்த)
பொடித்த பொன்னாற்செய்த முத்து வடமணிந்து
பொருந்தச் சட்டையிட்டு புகழக் கொண்டையுமிட்டு 235
அடித்துப் படித்துவெட்ட அட்வு முறைகளெல்லாம்
ஆய்ந்த உடைவாள்வெட்டி அடக்கம் படிக்கவென்றே(பிறந்த)
கண்டோர் மனம்மகிழப் புருஷா தேவியம்மை
கையில் உடைவாள்கொண்டு தெருவில் வரும்போது
மண்டலத்தி லுள்ளபேர்கள் கண்ட துண்டால்
மாறிநின்று துதிசெய்யும் வண்ண மாக (பிறந்த)
பாரனைத்தும் புகழ சாரமான மகளை
பாங்கியர் கூடியே ஓங்கி யருகிருக்க
வீரமுடைய சூர தீரர் கட்டியதொரு
வெண்வாசி மேலேற நண்ணும் மனமுடனே (பிறந்த) 240

## (புருஷாதேவியின் குதிரைப் பயிற்சி)

பரிக்குப் பலவகைகள் பரியகல் லணைவைத்து
பச்சை நீலமொத்த கல்லணையும் வைத்து
தரிக்கும் நாலுகாலும் சிலம்பும் புலம்பிடவே
தத்தரி இடமெனும் சடில மதிலேறவே (பிறந்த)
வன்னப் புரவியேற வானில்மின் னதுபோல
வையக மாம்பெண் ணரசி இடம்வர
கன்னிமார் ஆயிரம் தோழிமார் சூழவே
ககனத் திடியெனவே கதறுங் கொக்கிலேற (பிறந்த)

## (புருஷாதேவி வேதகல்வி கற்றல்)

கொட்டு முழக்குமுடன் குரவை முழங்கிடவே
கொடிசே ரிடையழகி புருஷா தேவியம்மை 245

(229 — 241) கச்சை — அரைக்கச்சை. பணி — ஆபரணம். கனகம் — ஒருவகை பொன். நெற்றிப்பிறை — பிறைச் சந்திரன் போன்ற அணிகலன். தண்டை — ஒரு காலணி வகையின் பெயர். பாடகம் — ஒரு காலணி வகை. துலங்க — விளங்க. பாங்கி — தோழி. கொண்டை — முடிக்கட்டு. மண்டலம் — பூமி. துதி — வணக்கம். பார் — உலகம். இவண் உலகிலுள்ள மக்களைக் குறித்த இடவாகு பெயர். வெண்வாசி — வெண்மை-வாசி; வெண்மை நிறங்கொண்ட குதிரை. நண்ணும் — பொருந்தும். பரிய கல்லணை — பருத்த சேணம்.

மட்டுக் கடங்காத மறைகளு மாராய்ந்து
மகிழ்ச்சியுட னேவந்த மாவி லேறவென்ன (பிறந்த)
பரியேறியே புருஷா தேவி பன்னிரண்டு
பருவம் வருகையில் தெருவில் பவனிவர
தரியலர்கள் கண்டு அஞ்சி யோடும்படி
தையல் புருஷர்பலர் கண்டு களித்திடவே (பிறந்த)
எழுந்து புறப்படவே எங்குங் குடைசேரும்
இடிபோல் வெடிகுமிற ஏற்கும் படிநடக்க
பழுவாய்ப் புருஷாதேவி பகவா னொளியதுபோல்
பரியேறி யேநடத்தப் பயந்தா ளரசிருக்க (பிறந்த) 250

## (தோழியர்கள் புருஷாதேவியை அலங்கரிக்கும் மாட்சிமை)

வேறு

அரசிபுரு ஷாதேவியை ஆயிழைமார் கூட்டிவைத்து
ஆதரவாய்ச் சுந்த நீரா லாட்டி
அஞ்சு[1]வர்ண முமிலங்க ஆனநல்ல பட்டுடுத்தி
அரிவைவாணு மாலை தோழி தானும்
கொண்டல்வர்ண கூந்தல்சீவி வண்டுமொய்க்க வேபூவை
கோதைஎழு பேரும் கூடிச் சூட்டி
சாம்பூனத மெனும் பொன்னால் சமைத்திட்ட[2]பலவணிகள்
சாற்றினார் புருஷா தேவியர்க்கே

## (புருஷாதேவி அழகு கண்டு மங்கையர் வியப்பு)

அஞ்சன விழியிலங்க ஆபரண மாலைகொஞ்ச
அமைநிகர் குழலி லங்கவே 255
ஆசையாய்ப் பணிகள்பூண ஆகம்மின்னென துலங்க
ஆசைப் படுவாராம் பெண்களும்

## (புருஷாதேவியின் திருமணம்)

புஞ்சணி துடியிடை மார்பாங் குடனிடுங் குரவை
பட்டினங்க ளெங்குமே ஒலிக்க
பாரத்திடி மனுடனே வீராணஞ் சின்னமும் முழங்க
பாங்காக விண்ணிடி கலங்கிட்டு

(242 — 254) தரிக்கும் — நிலை பெற்று இருக்கின்ற. சிலம்பு — ஒரு காலணி வகை. புலம்பிடவே — ஒலித்திடவே. தத்தரி — குதிரை — தடை ஒலிக்குறிப்பு. சடிலம் — குதிரை. புரவி — குதிரை. ககனம் — ஆகாயம். கொக்கு — குதிரை. மறை — வேதம். மா — குதிரை, பரி — குதிரை. பவனி — ஊர்வலம். தரியலர் — பகைவர். அஞ்சி — பயந்து. தையல் — பெண்கள். பழுவாய் — பக்குவமாய். அஞ்சு வர்ணம் — வெள்ளை, கறுப்பு, சிவப்பு, மஞ்சள், பச்சை என்ற பஞ்ச வர்ணங்கள், அரிவை — எழுவகை மகளிர் பருவ நிலைகளுள் ஐந்தாம் பருவத்தைக் குறிக்கும் சொல். கொண்டல் — மழை மேகம். சாம்பூனதம் — நால்வகை பொன்களுள் ஒன்று.

1. வர்ன 2. பலபணிகள்

கலங்கிடவே பொன்னென விலங்கும் பெண்ணர சாளின்ற
காரிகை புருஷா தேவிக்கு
கருதிய முகூர்த்தர்வர காலதா மதம்வா ராமல்
கட்டினார் கழுத்தில் மாங்கலியம் 260
கட்டிடவே தெய்வலோகக் கன்னியர்பூ மாரிபெய்ய
கன்னிபுரு ஷாதேவி யிருந்தாள்

**விருத்தம்**

மாலைதான் புருஷா தேவி மங்கைக்குத் திருக்கல் யாணம்
சாலவே சிறப்ப தாகத் தான்முடித் தல்லோர் காண
பாலையும் பழிக்கு மின்சொல் பாங்கிய ரேழு பேரும்
கோலப்பெண் ணரசி யோடு குணமுடன் புவியில் வாழ்ந்தார் 265

## (புருஷாதேவிக்கு நாலாநீர் கலியாணம் நடத்தல்)

**வேறு**

வாழ்த்த நாளில் பெண்ணரசி மற்றமாதரும்
வந்துகூடி னார்கள் தோழிஏழு பேர்களும்
சூழ்ந்துபுருஷா தேவியர்க்குத் துணையாய் வந்து
சொல்லினார்கள் நல்லமொழி மேன்மை யாகவே
தானதர்மஞ் செய்துலகில் தாயா ரிருக்க
தன்னையறிந் தாள்புருஷா தேவி தையலும்
ஊனமில்லா நாள்வரவே ஒண்டொடி யாட்கு
உடனே சடங்குமுகித்தார் உத்தமி மார்கள்
அன்றுதிரட்டுக் கலியாணம் அரசிக் கென்னவே
[1]ஆயிழைமார் தாங்கள்கூடி அங்குச் சொல்லிட 270
நன்றெனப் பலருங்கூடி நாலாம் நாளிலே
நல்லவாச்சி யங்குரவை நாட்டி லொலிக்க
நாட்டிலுள்ள பெண்கள்கூடி புருஷா தேவிக்கு
நாலாம்நீர்க் கலியாணமும் நன்றாய் முடித்தார்
தாட்டிமைசே ரும்புருஷா தேவி தானன்று
சங்கராவுன் தஞ்சமென்று தானி ருந்தனள்

## (புருஷாதேவி மகப்பேறு அடைதல்)

இருந்தநாளில் பன்னிரண்டு வருடமுஞ் சென்று
இன்பமாகச் சிங்களக்காற் றெங்கும் வீசியே
பொருந்திடப் புருஷாதேவி பொற்கொடி யாட்கு
போதனரு ளாலேகர்ப்பம் பொருந்தி நின்றிட 275

(255-267) அஞ்சனம் — மை. ஆகம் — உடம்பு. பஞ்சணி — பஞ்சால் நெய்யப்பட்ட ஆடை. பாரம் — உலகம். வீராணம் — ஒருவகைப் பெரியபறை. முகூர்த்தர் — முகூர்த்தம்; சுபவேளை. கோலப் பெண்ணரசி — அழகிய பெண்ணரசி; புருஷாதேவியின் தாயார்.

1. ஆயிளை

நின்ற [1]கர்ப்பம் நிச்சயமாய் மாத மொன்றென
நிலைத்துரெண்டு மூன்றெனவே மாத முயர்ந்து
கன்றுகொண்டு கனியெறிந்த கண்ண னருளால்
காரிகைக்கு நாலுஐந்து ஆற தாகவே
ஆறுமாசம் முற்றுபெற புருஷா தேவிதான்
அடைந்தகர்ப்பம் பூவுலகில் [2]எல்லோ ருங்காண
பேருலகி லேழுமாத மான பொழுது
பெண்ணரசித் தோழிப்பெண்கள் பெருகப் பொங்குவார்

**(நாட்டில் கோட்டை யெழுப்ப முடிவு செய்தல்)**

விண்ணும் மண்ணு மொன்றெனவே மேவியிருக்க
விதிப்படியே கோட்டையிட வேண்டு மென்னவே 280
எண்ணிச்சிவன் கோயில்முன்னே அசன சத்திரம்
இட்டுப்பெண்ணாள் வூட்டுவ்வைத்து அபிஷேகம் செய்தாள்
வென்றியுடன் இப்படியே செய்து முடிக்க
வேனுதலாள் வாணுமாலை தோழி மெய்க்கவே
நன்றியாகப் பொங்கலிட்டு நாட்டா ரறிய
நலமுடனே மூன்று கோட்டை நாரியரிட
நாதனரு ளால்புருஷா நாரிக்கு மாதங்கள்
நலம்பெறவே எட்டுடனே ஒன்பது வர
பூதலம் புகழுந் தோழி எழுவரும்
புண்ணிய தானங்கள்செய்து புவியினில் வாழ்ந்தாள் 285

**விருத்தம்**

வாழ்ந்ததோர் தேசந் தன்னில் மாற்றலர் வாரா வண்ணம்
சேர்ந்ததோர் கோட்டை மூன்று செய்துவைத் திருக்கும் நாளில்
சேர்ந்ததோர் படைவீ டாண்ட செம்பன்மா முடியார் வேந்தன்
பாந்தள்போற் கோபம் மூண்டு படையெடுத் திட்டான் தானே

**(செம்பன் மாமுடியான் தம்பியரோடு ஆலோசனை நடத்துதல்)**

**வேறு**

கோட்டை மூன்று போட்ட செய்தி
கூவ லூர்படை வீடாண்ட

(268-279) ஊனமில்லா — குறைவில்லா. ஒண்டொடியாள் — ஒண்மை — தொடியாள்; ஒருவகை தோளன் அணிந்தவள்; புருஷாதேவி. வாச்சியம் — வாத்தியம். நாலாம்நீர்க் கலியாணம் — திருமணத்தின் நான்காம் நாளன்று மணமக்கள் நீராடும் சடங்கு. தாட்டிமை — தாள்-இமை; காலைத் தன் விழிகளால் பார்த்தல். சிங்களக்காற்று — இலங்கைக்காற்று. போதன் — பிரமன். கன்றுகொண்டு கனியெறிந்த கண்ணன்.
(280-290) மேவி — பொருந்தி. அசன சத்திரம் — உணவு சத்திரம். ஊட்டு — பெரும் படையல். வென்றி — வெற்றி. வேனுதலாள் — வேல் போன்ற நுதலாள்; வாணுமாலை. நாரியர் — பெண்கள். மாற்றலர் — பகைவர். பாந்தள் — பாம்பு. பூதலம் —

1. கெற்பம் 2. அல்லோரும்

கொஞ்சுஞ் செம்பொன் முடிமன்னர் கேட்டதும்
　　கொடிதாய் தம்பி மந்திரிமாரே கேளென்றார் 290
நாட்டிற் பலசேனை யோடு
　　நாமகள் காசித் தீர்த்த மாட
நமக்கு வழிபெண்ணரசி நாட்டினில்
　　நலமதல்லால் வேறு வழியில்லையே
இல்லை யெனவே யுரைக்க
　　இளைய வர்கள்தான் கேட்டு
எண்ணருடன் ஆலோசனை செய்துமே
　　ஏந்திழை மார்கள் பலரைக் கூவியே

**(காசிக்குச் செல்ல புருஷாதேவியின் கோட்டை வழியை வேண்டுதல்)**

முல்லை மலர்பல் லழகி
　　மொய்குழல் மார்கிட்டச் சென்று
முத்திதருங் காசிதனிற் செல்லவே
　　முழுதும் வழிமன்னர் கேட்டா ரென்றுதான்
சொல்லி யவர்களு ரைக்கும்
　　சூக்ஷமதை தான்கேட்டு
சுறுக்குடனே வாருமெனச் சொல்லவே
　　தோகையர்கள் தான்நடந்து வேகமாய்
வல்லவள் புருஷாதேவி
　　வாணு மாலை தோழியுடன்
வாழுங் கோட்டை யானதிலே சென்றுமே
　　வனிதையர்க ளேதுமொழி சொல்லுவார் 295
கேட்டாயோநீ பெண்கொடியே கீர்த்தியாக எம்மரசன்
　　கேண்மையுடன் காசிநகர் செல்லவே
கேட்டார் கோட்டைக் குள்ளேவழி தாவென
வாட்டமற்ற பெண்கள்சொல்ல வாணுமாலைத் தோழியவள்
வந்தநீங்க ளெந்தவூருப் பெண்டுகள்
　　வரலாறு சொல்லவேணு மெள்ளவே

**(வாணுமாலை என்னும் தோழி கோட்டை வாசல் திறப்பது முறையன்று எனல்)**

கூவலூர் படைவீடாண்ட கோன்செம்பன் முடியார்தான்
　　கூறும்மொழி சொல்லவந்தோ மென்னவே
　　கோதைவாணு மாலைதொழி யானவள்

(291-297) நாமகள் — சரஸ்வதி. மொய்குழல் — வண்டுகள் மொய்க்கும்படி பூச்சூடிய மகளிர். முத்தி — வீடுபேறு. சூக்ஷம் — இரகசியம். சுறுக்குடனே — விரைவுடனே. வனிதையர் — பெண்கள். கேண்மை — நட்பு.

பெண்ணரசா ளம்மைபெற்ற புருஷா தேவியுடனே
  பேதகமில் லாமலுரை கூறவே
  புந்தியில் விசார முற்று கூறுவார்
கோட்டையுடன் வழிகேட்ட கோதையரே யிப்போது
  கண்டபுரு ஷாதேவி வாழ்கிற
  கோட்டைவழி கோன்வரவும் ஞாயமோ 300

### (புருஷாதேவி கோட்டை வழிதர மறுத்தல்)

நாட்டையாளும் வேந்தனவன் நாரிமாரி ருப்பிடத்தில்
  நாடிவழி கேட்டிடவும் ஞாயமோ
  நல்லவழி தருகிறதில்லை போவென்றாள்
போவெனப் புருஷாதேவி புகன்றமொழி கேட்டுடனே
  புந்தியில் விசாரமுடன் பெண்களும்
  புறப்பட்டுப் பலநகர் கடந்துதான்
கூவலூர் நகரந்தனில் கோதையர்க ளோடுவந்து
  கொண்டுவந்த செய்தியை எடுத்தவர்
  கூண்டதம்பி மந்திரிமார்க்கும் கூறுவாள்
வளர்மிகுதி யுள்ளதொரு பெண்ணரசி நாட்டினிற்சென்று
  வரிசையுள்ள அரசியுடன் கேட்கவே
  வழிதருவ தில்லையென்று சொல்லினாள்

### (செம்பன் கப்பம் வேண்டலும் புருஷாதேவி மறுத்தலும்)

சொல்லினா ளெனவுரைக்கச் சொர்னமுடி மன்னர்கேட்டு
  துணையதாக முன்னும்பின்னு முள்ளதோர்
  தோன்றுங்கப்ப மின்னுவாங்கி வாவென்றார் 305
மங்கையர்கள் பின்னையும் வழிநடந்து சென்றுடனே
  மகிழ்வுட னரசிக்குரை செப்புவார்
  மன்னர்கப்பம் வாங்கவிட்டா ரென்னவே
என்னவே யுரைத்திடவே ஏந்திழை புருஷாதேவி
  எரியென விழிசிவக்க நோக்கியே
  இங்குகப்பந் தரமாட்டோ மென்றிட
தேறியிறை வாங்கவந்த தெரிவையர்கள் தான்நடந்து
  [1]செம்பொன்முடி மன்னரை வணங்கியே
  செய்திபல தும்பகுந் துரைப்பராம்
தீரமுடன் கூவலூ ராள் செம்பொன்முடி மன்னவரே
  சினத்தரசி கப்பமில்லை யென்னவே
  திட்டென வுரைத்தனுப்பி னாளென்று

(298—305) கோன்—அரசன். பேதகம்—வேறுபாடு, புந்தி—புத்தி. விசாரம்—கவலை. நார்மார்—பெண்கள், புகன்ற மொழி—கூறிய மொழி. சொர்ணமுடி—பொன்னால் செய்யப்பட்ட முடி. கப்பம்—திறை:

1. செம்பன்

(செம்பொன்முடி மன்னன் போர் செய்ய முடிவெடுத்தல்)

கூறிடவே கூவர்நக ராஜனுஞ்செம்பொன் முடிராஜன்
கோபத்தாற் கனிட்டனுடன் பேசியே
கோதையர்கள் தன்னைவெல்ல எண்ணினான் 310
எண்ணிப்படை போகவென்ன எண்ணராலோ சனைபோலே
ஏத்தபடை தன்னைச் சேர்க்க வெண்ணியே
இராஜன்செம்பொன் முடிகூறி விட்டனர்

(அரசிக்குத் தன் போர் முடிவை மன்னர் தெரிவித்தல்)

**விருத்தம்**

கூறினார் படைக்குப் போக குஞ்சரத் தோடே மாவும்
வேறிடத் துள்ள தாக விரைவினிற் [1]கொண்டு வாருங்கோ
மாறியே காலாள் தேரும் மகிழ்ச்சியாய் வருக வென்று
தேறிய வார்த்தை தன்னைத் தெரிவித்தார் அரசிக் கேதான் 315

(நகர் அலங்காரம்)

**வேறு**

அரசியதைக் கேட்டு — நாமள்
ஆளும் நகரலங்காரஞ் செய்ய
ஆரை யனுப்பிடுவோம் — சிற்ப
ஆதிநூல் கற்றவரை அழைத்து
வரவேண்டுமே தோழி — என்ன
வாணுமாலைத் தோழி யானவளும்
வளமா யருகிருக்கும் — பெண்ணை
வாவெனக் கூப்பிட்டு செய்திசொல்லி
அனுப்ப அவரோடிச் — சென்று
அங்கொரு சிற்பியைக் கூட்டிவந்து
அரசிமுன் விட்டிடவே — அவள்
அங்கு நடப்புகள் தானுரைக்க

(கோட்டை அலங்காரம்)

கனிவாய் சுவர்பூசி — வெள்ளை
கட்டி அரசியின் கோட்டைதனில்
கட்டழகா கவேதான் — சிற்பி
கையினால் சித்திரந் தானெழுதி

(306 — 315) பின்னையும் — பின்பும். எரியென — தீப்பிழம்பென. தெரிவை — எழு வகை பருவ மகளிர்களுள் ஆறாம் பருவப்பெண். கனிட்டன் — தம்பி. குஞ்சரம் — யானை. மா — குதிரை. காலாள் — காலாள்படை. தேர் — தேர்ப்படை.

1. கொடு

வர்ணம் பலகொடுத்து — மாலை
வாங்கி அணியணியாய்ச் சாற்றி
வாகாய்ச் சுவர்தனிலே — பல
வர்ணக் கண்ணாடிகள் தான்னுக்கி 320
அரிதான மிகுதியுள்ள — தம்பம்
அத்தனையும் ஆசை பச்சையாலே
அலங்காரஞ் செய்தவரும் — நின்று
ஆசார மாகவே பக்கமதிலே
பாகாம் மொழிமடவார் — நின்று
பையப்பைய ஜோலிதான் முடித்து
பணியை முடித்தவர்க்கு - திதி
பாங்குட னீந்து அனுப்பியபின்
பிழையேதும் வாராமல் — நடு
பின்னும் முன்னுந்திருப் பெண்கொடிமார்
மழையே சொரிந்தபடி — நீரை
வாரிச் சிதறித் தெளித்திடுவார்
தெளிப்பார் தெருவட்டங்கள் — சேரச்
[1]சேயிழை மார்கள் திரண்டல்லோ
குளிப்பார் குறியிடுவார் — ஒரு
குற்றமு மிங்கில்லை யென்றிடுவார்
செழிப்பா யிதுக்குசரி — ஒரு
தேசத்திலும் நாங்கள் கண்டதில்லை
களிப்பா யிருக்குதென — எண்ணி
கன்னியர் சேரவே கண்ணியந்தான் 325
எனவே பெண்களுரைக்க — கேட்டு
[2]ஏந்திழை யாள்புரு ஷாதேவி
வனமா னெனவிருக்க — வழி
பார்த்தங் கிருந்ததோர் மாற்றலரும்

**(தூதனை கப்பம் வாங்கிவர மீண்டும் புருஷோதேவியிடம் செம்பன் அனுப்புகை)**

கனமாய்ப் படைகூட்டி — வந்து
காரிகையாள் கோட்டை பக்கலிலே
மனம்போ லரசிருந்து — வந்த
மன்னவனோர் தூதனை யனுப்பி

(316 — 321) நாமள் — நாம் என்பதின் பேச்சு வடிவம். சுவர்பூசி — கோட்டைச் சுவரை அலங்கரித்து. சித்திரம் — ஓவியம். தம்பம் — தூண். பச்சை — பசுமை நிறம்.
(322 — 327) பாகாம் மொழி மடவார் — சர்க்கரைப்பாகு போன்ற இனிய மொழி மடவார். ஜோலி — வேலை. தெருவட்டம் — தெருவில் இடப்பட்ட கோலம். சேயிழை — ஆபரணம் அணிந்த மகளிர். களிப்பாய் — மகிழ்ச்சியாய். வனமான் — காட்டிலுள்ள மான். மாற்றலர் — பகைவர். கனமாய் — அதிகமாய்.

1. செய்யிளை 2. ஏந்திளை

புருஷா தேவியிடத்தில் — சென்று
பேசியே கப்பம்நீ வாங்கிவாடா
புருஷோத்த மாவெனவே — தூதன்
புகழுடனேநடந் திட்டனனே

நடந்திடுந் தூதன் றானும் நாடியே வேக மாக
கடந்தவர் தனையே போற்றும் காரிகை புருஷாதேவி 330
இடந்தனில் வந்து நின்று எழில்வினை யுரைப்போர் தாமும்
தடபுட லாகப் பொண்ணாள் தன்னிடம் உரைக்க லுற்றாள்

## (தூதன் புருஷாதேவியிடம் கப்பம் கேட்டலும் அவள் மறுப்புரையும்)

**வேறு**

கன்னியே புருஷாதேவி கட்டுடன்நான் சொல்லுவதைக்
காதுகொடுத்தே கேட்டுக் களித்துப் பதிலுரைப்பாய்
என்னலும் புருஷாதேவி எழில்பண் புரைப்பவரை
ஏறிட்டுப்பார்த் தெந்தவூரு யென்னதொழில் சொல்லுமென
வீரமுடன் கேட்டிடவே வேந்தன்றூத னேதுசொல்வான்
வெற்றியுடன் கூவலூராள் செம்பன்முடி மன்னவரும் 335
காரமுட னுன்னிடத்தில் கப்பம்வாங்க விட்டிடவே
காதலுடன் சொல்லிக் கப்பம்வாங்கிப் போகவந்தவன்தான்
என்றிடப் புருஷாதேவி எரியெனக் கண்சிவந்து
எங்கேயடா கப்பம்வாங்க எழிலுடன் நீயும்வந்தாய்
பண்டுவுல காண்டசேர [1]சோழனுடன் பாண்டியனும்
பாங்குடனே எங்களிடம் கப்பம்கேட்க வில்லையென
தொடுத்த பூங்குழலழகி தோகைபுரு ஷாதேவி
திடுக்குடனே உடனுடன் சொல்லுவாள் அந்நேரமதில்
துட்டன் செம்பன்முடியானும் தோகையர் கோட்டையினூடு
செல்லவென்று மனமுண்டால் செய்தியொன்று
சொல்லக்கேளு 340
எடுத்தபல ஆயுதங்கள் எல்லையில்லாச் சேனையையும்
இத்னையும் வைத்துப்போட்டு ஏகாந்தமாய்க் கோட்டைவழி
வருத்தமொன்று மில்லாமல் வடகாசி தன்னிற்சென்று
வாக்குடன்நீ ராடிப்போக வசனிப்பீ ரென்றுரைத்தார்

(328 — 339) புருஷோத்தமன் — செம்பர்முடிமன்னனின் தூதன் பெயர். காரிகை — பெண். களித்து — மகிழ்ந்து. எழில் — அழகு. காரமுடன் — கோபத்துடன். காதல் — அன்பு. எரியென — தீப்பிழம்பென. பூங்குழலழகி — பூக்களைக் கூந்தலில் சூடிய அழகி; புருஷா தேவி. திடுக்குடனே — திடீரென அதிர்ச்சி அடைந்து.

1. சோஉனுடன்

### (புருஷாதேவியின் மறுப்புரை கேட்ட மன்னன் சினம்)

அந்தவார்த்தை கேட்டுஒட்டன் அடைவுடனே தான்நடந்து
ஆனசெம்பன் முடியார்க்கு ஆதரவாய்ச் சொல்லுவானாம்
சொன்னவார்த்தை கேட்டபோது தீத்திரள்போல் கண்ணெரிந்து
சொலித்திடவே கோபமுடன் சொல்லுவானாம் கொற்றவனும்
என்னைக்கெணி யாதுபடை தன்னைவிட்டுப் போவெனவே
எதிராளி யாகவந்து ஏந்திழையுங் கூறினாளோ 345
எந்தவிதத் தாலுமவள் பெண்ணரசி தானேஇப்போ
எப்படிக்கு இந்தவார்த்தை ஏடாகூட மாகச்சொன்னாள்
ஆகையினால் பெண்ணரசி புருஷாதேவி தனையும்
அவள்படை தன்னுடனே அல்லவரையும் வதைத்து
போடுவேனெனச் சினந்து புகழ்செம்பன் முடியாரும்
போருக்குப் படையெடுத்த பெற்றியை யறிந்தவுடன்
பெண்ணரசுடன் புருஷா தேவியும் மிகச் சினத்து
பெலமாய்ப் படையெடுத்துப் பெண்டுகள் கூடியிருந்தார்

### (இருசாராரும் படை திரட்டிப் போரிடுதல்)

**விருத்தம்**

படைகள்தான் [1]பரந்த தென்று பைந்தொடி மார்கள் சொல்ல 350
வடமயில் புருஷா தேவி வயிரமாய்ப் பெண்ணரசின்
படைவர வேண்டுமென்ன பரிகரி யதனைக் கூட்டி
திடமதாய்ப் படைக ளெல்லாம் சிக்கெனப் பரந்த தன்றே

### (போர்க்களத்திற்குப் படைகள் வரும் காட்சி)

**வேறு**

படைகள் பரந்தது கொடிகள் நிறைந்தது
பகலவனுட கதிர்கள் — மறைய
பலபல பணிகளும் இடையிடை வரவே
பாரப் பருதியென — புரவிகள் 355
துலங்குஞ் சரமது யிலங்கு கவரிகள்
துஜங்கள் ஒலித்திடவே — படையினில்
தொல்லுலகிலே நல்ல பச்சைக் குடையும்
சூரியவட்டக் குடையும் — தொகுதிகள்

(340 — 353) துட்டன் — துஷ்டன். சேனை — படை. ஏகாந்தமாய் — தனிமையாய். வடகாசி — காசி; வடகாசி போல தெற்கிலம் தென்காசி என்கிற சிவத்தலம் ஒன்றுள்ளது. வசனிப்பீர் — கூறுவீர். ஒட்டன் — ஒற்றன். தீத்திரள் — தீயின் திரட்சி. சொலித்திடவே — ஒளிவீசிடவே. கொற்றவன் — மன்னவன். கெணியாது — மதிக்காது. எதிராளி — பகையாளி. ஏடாகூடமாக — முறைக்கு மாறுபாடாக. அல்லவர் — பகைவர். வதைத்து — அழித்து. பெற்றியை — முறையை. பெலமாய் — 'பலமாய்' என்பதின் பேச்சு வழக்குச் சொல். பரி — குதிரை. கரி — யானை. சிக்கென — விரைவாக.

1. பரந்துதென்று

சுற்றி யடிக்கவே போற்றும் மதகரி
துரிசம் கலகலென — வாசிகள்
தூரத் திசையுள்ள வீரப் பரிகளும்
ஊரைத் திசைகொள்ளுமே — வீரர்கள்
தாமச மின்றி வரும்படை தாமசம்
ஏதெனப் பேசிடுவரர் — அவரவர்
தக்கவர் மிக்கவர் [1]சமரில் பொரவே 360
சடுதியில் படைவரவே — கற்றவர்
பரிசைத் திரளதில் வரிசைப் பலர்களும்
துரிசத்துடன் வரவே — மிகுதியும்
பாரப் புரவிகள் வீர ருடன்கரி
வீரர்கள் கைவாளும் — ஏந்தியே
கரியை விட்டவர் பரிசைத் திரளுடன்
கருதின சிறுவர்களும் — [2]கலீரென
கலீர்கலீ ரெனவே வெட்டுகள் தட்டுகள்
கருதின தலையீடு — செம்புகள் 365
வீரர்கள் யிடைக்கிடை யீட்டிகள் நீட்டியே
விசையுடன் மணியசைய — நாகங்கள்
வீரத்துடன் வளைதடிகள் எடுத்துடன்
வேகத்துடன் வரவே — சாடுவார்
பிடித்த கொடிகுடை எடுத்த மேளமும்
பெரும்பறையின் தொனியே — தொனியென
பேசியே வீரர்கள் கூடிய எழுகடல்
போலவே கரிவரவே — மன்னவர்

### (செம்பன்முடி மன்னர் போர்க்களத்திற்கு வருதல்)

மன்னவர்க் கிளையதோர் மந்திரி மார்களும்
வரும்படைதனில் வரவே — மிகுதிகள் 370
மகிழ்ந்திடு மரசியும் மிகுந்திடும் கிரிகளும்
மலையது போல்வரவே — உலகாளும்
செம்பன் முடியார் படைகளும் வரவே
தெரிவையர் அரசாளும் — விளித்து
சினந்து விழிகளால் நோக்கிடப் படையை
சேகரஞ் செய்யலுற்றார் — சடுதியில்

(354 — 366) பகலவன் — சூரியன். பருதி — சூரியன். துலங்கும் — விளங்கும். சரம் — அம்பு. கூவரி — தேர். துஜம் — கொடி. மதகரி — மதங்கொண்ட யானை. துரிசம் — துரிதம்; வேகம். வாசி — அம்பு. வீரபரி — வீரங்கொண்ட குதிரை. சமர் — போர். பொரவே — போர் செய்யவே. சடுதியில் — விரைவில். திரள் — கூட்டம். கலீர் கலீரென — காலணி ஓசையைக் குறிக்கும் ஒலிக் குறிப்புச் சொல். ஈட்டி — படைக்கருவிகளுள் ஒன்று. நாகம் — யானை.

---

1. சமரலில்ப் 2. கலிரென

### (புருஷாதேவி குதிரை கேட்டலும் தோழியர் வருவித்தலும்)

வேறு

விளிகொண்டு அன்றுபடை கொண்டு வாறதோர்வேளை
வேகமாய்ப் பெண்ணரசி புருஷாதேவி வில்வாள்
விள்ளுவா ளொள்ளிய வேகத் திலொத்தபுரவி
வெவ்வாறே [1]வர்ணத்தில் ஈராயிரம் வேண்டுமென்றாள் 375
என்ற பொழுதிலே பெண்களோடு கோடிகூடி
ஏகாந்தமாகப் புரவிகள் நிற்குந் தலத்தில்
தலத்தில் புரவிகள்தையலர்க் கேற்கும் விதமாய்
தான்கொடுவந்து அரசிக் கறிக்கை யிட்டாரே
அறிக்கை யறிந்து புருஷாதேவி யம்மைதானும்
அசுவங்கள் காணும்நீர் அத்திகொடு வாருமென்ன
தோழிமா ரோடியே காணும்படியாய் கரிகள்
திட்டெனக் கொண்டு புருஷாதேவி யிடம்சேர்த்தார்

### (புருஷாதேவி யானை மீதேறி போர் புரிதல்)

சேர்த்திடப் பெண்ணரசாளும் யானை மீதேறிச்
சித்திரமாகிய வாளுங் கேடயமும் கொண்டாள்
புருஷாதேவி யம்மைதானும் புரவியி லேறி
பொன்னாலுறை யுள்ளவாளும் கெதையு மெடுத்தாள் 380

### (தோழியர்கள் போர்புரியும் காட்சி)

உறவாடி நிற்கின்ற வாணுமாலைத் தோழிதானும்
உற்ற புரவியி லேறிஉடை வாளெடுத்தாள்
மற்றத் தோழிமாரும் மாவினி லேறியிருந்து
மாற்றானை வெட்டவே வல்லயமும் கையிலேந்தி
தாரணியுங் குழல்மாதர்கள் தன்படை யோடே
சந்தோஷ மாகவேதன் கோட்டைவிட்டு வெளியில்
லொளிதிகழ் கோடிக் குடைகள் தான்வந்தே
விஸ்தார மாகவே மேளதாள மொலிசெய்ய
அங்கங்கே பெண்ணா ரடர்ந்துகுரவை யொலிக்க
[2]ஆராவாரச் சத்தமிட்டு மேபெண்ணர சாளும் 385
அஞ்சாம லெங்கள் அரணையழிக் கவேவந்த
அரசனை வெட்டிவதைப் போம்அவ னெங்கேயென்றார்

(367 — 378) சாடுவார் — குதிப்பார். தொனி — ஓசை. எழுகடல் — உப்புக்கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், கட்கடல், நெய்க்கடல், தயிர்க்கடல், பாற்கடல், நன்னீர்க்கடல் என்னும் ஏழு கடல்கள். கரி — யானை. கிரி — மலை விளித்து — அழைத்து. சேகரம் — கூட்டம். சடுதியில் — விரைவில். விள்வார் — விள்ளுவாள்; சொல்லுவாள். வர்ணம் — நிறம். ஈராயிரம் — இரண்டாயிரம். ஏகாந்தமாய் — தன்மையாய். அசுவம் — குதிரை. அத்தி — யானை.

---

1. வர்னத்தில் 2. ஆரபார

## (செம்பன்முடி மன்னன் படையைத் திருப்புதல்)

**விருத்தம்**

என்றதோர் மொழியைக் கேட்டு இணங்குபொன் முடியார் தாமும்
நன்றினிப் படைக ளெல்லாம் நடத்துங்கோ வென்று சொல்லி
அன்றுவெங் கரியின் மீது அரசனு மேறக் கண்டு
நன்றென இளைய வேந்தன் நடத்தினார் வாசி தானே 390
வாசிதான் வாற தூசி வனிதையர்க் கரசி கண்டு
பேசினார் மூன்று கையால் பேதையர் திரிக்க வென்று
காசியில் [1]போற தற்குக் கருதினார் புருஷா தேவி
வாசமாய் அரசி தோழி வகுத்தனர் [2]இரண்டு கையால்

## (செம்பன்முடி படைகள் சிதறிப் போதல்)

**வேறு**

கைதலித்தார் கள்படை காவலன் செம்பன்முடி
கருதினார் பெண்ணரசு கைக்குளே
கண்கொள்ளாப் படையது அங்குமிங்கு மோடி
கலந்தங் கொருப்போல் விழிக்கவே 395
வையகத் தூராரும் வாணிநா ராயணனும்
மன்றாடும் படையென வருகவே
வாசிக்கு வாசிவிட்டே சிக்கலா டியதோர்
வானிலொளி மின்னலது போலவே
பொய்ய கத்தில்லாத பெண்ணரசு தங்கள்படை
போருக்கு வந்தவரைக் கண்டுதான்
போகாதே நில்லென்று போரில் கரிபரியும்
புத்தியி னுறைந்துகொள் ளென்னவே
பையர வணிந்த பரமீசுரா சரணென்று
பைந்தொடிமாரும் பணிந்து நின்றவர்
பதறாத செம்பன்முடிமன்னர் படிவிளி கொண்டு
படைக்கு வாவென்று விளிகொள்ளவே'
விளிகொண்ட படையது அங்குமிங்கும் நிற்க
வேல்நோக்க முடைபுருஷா தேவியும்

(379 — 390) சித்திரமாகிய — சிறப்பாகிய. புரவி — குதிரை. கெதை — கதை; ஓராயுதம். மா — குதிரை. மாற்றான் — பகைவன். வல்லய்ம் — ஒரு வகை ஈட்டி. தார் — மாலை. மேளதாளம் — ஒரு தோலிசைக் கருவியிலொன்று. அரன் — தலைவன். வெங்கரி — வெம்மை-கரி; மிகுந்த சினங்கொண்ட யானை. வாசி — குதிரை.

1. போறதற்கு 2. ரண்டு

## (காசிநகர் போகும் வழியைத் தடுத்தல்)

வேகமுடனே காசிநகர்க் கேகும் வழியினை
மெல்லியர் தடுத்தங்கே நிற்கவே
களிகொண்ட செம்பன்முடி மன்னர னுஜன்கண்டு
கருதினார் பெண்ணரசு கைக்குள்ளே
கடல்நிகரான படையுடன் பொருவ தாரெனவே
கன்னிபுருஷா தேவி யெண்ணியே 400

## (செம்பன்முடி பெரும்படையுடன் போருக்கு ஆயுத்தமாதல்)

ஒளியுள்ள குடைகொடிகள் வெளிநின்று ஆலிக்க
உடனே இடக்கை யமாடவே
ஊதினார் சங்கொலி மேளதா ளங்களும்
உடன்பே ரிகைதான் அதிரவே
வெளிகொண்ட சூரியப் பிரகாச மென்னவே
மேவினார் பட்டாணி மார்களும்
வேகப்பரி பலதும் ஒக்கவே கரிகாலாள்
விட்டார்கள் ராவுத்தன் மார்களும்
மாவுத்தன்மார் வரவுமிரா வுத்தன்மார் வரவும்
மகிழ்வோடு வாள்வீரர் கூடவும்
மனங்குளிந்தே நின்றபுரு ஷாதேவி கண்டு
மலையாமலே யங்கு நிற்கவே
நிற்கவே செம்பன்முடி மன்னரனுஜன் கண்டு
நேரிட்டு வருகிறதைக் கண்டுதான்
நின்றபுரு ஷாதேவி தோழியது கண்டுடன்
நில்லடா நில்லென்று சொல்லியே
சொல்லினார் வல்லியர்கள் தோற்றி டாதபடி
சொல்படா திப்படை பொருதவே
சொக்கர் துணியில்லாது மிக்கொருவ ரில்லையென
சொல்லு வார்கள்நல் லோர்களும் 405
நல்லவர் சொல்லவே யல்லாது இல்லையென
நலமென மன்மதன் உன்னியே
நன்னிது படைகளைக் கணக்கொள்வோ மென்ன
நாரிமா ரெழுவரும் நிற்கவே

(391 — 399) தூசி — மண் துகள். கைதலித்தார் — வருந்தினார். வாணி — சரஸ்வதி. நாராயணன் — திருமால். அரவணிந்த பரமீசுரா — பாம்பை இடையில் அணிந்த பரமேஸ்வரனே; சிவனே. பைந்தொடிமார் — பசுமை — தொடிமார்; அழகிய வளையல்கள் அணிந்த அரசியின் தோழியர். ஏகும் வழி — செல்லும் வழி. மெல்லியர் — பெண் படைவீரர்.

(400 — 406) களி — மகிழ்ச்சி. பொருவது — போரிடுவது. ஆலிக்க — ஒலிக்க. சங்கு, மேளதாளம், பேரிகை — சில இசைக்கருவிகளின் பெயர்கள். பட்டாணி — உருது மொழி பேசும் முகம்மதியருள் ஒரு பிரிவினர். ராவுத்தன்மார் — குதிரைவீரர்கள். மாவுத்தன் மார் — யானைப்பாகன்.

### (அரசியைச் செம்பன்முடி போருக்கு அழைத்தல்)

நிற்கவே செம்பன்முடி மன்னர்படை விளிகொண்டு
நேரிட்டு ஒருப்போல கூடியே
நிகரான கப்பமது தரமாட்டே னென்றிட்ட
நேரிழைக் கரசியு மெங்கேயோ
எங்கேயோ காசிக்கு ஏகவழி யிலையென்று
இருந்த பெண்ணரசியு மெங்கேயோ
இணங்கின்ற செம்பன்முடி மன்னர்விடுந் தூதனை
ஏராத பெண்ணரசு மெங்கேயோ
எங்கேயோ கோட்டை மூன்றிட்ட புருஷாதேவி
இயலான பெண்ணரசு மெங்கேயோ
இப்புவியி லாரு மெதிரில்லையென வாழ்ந்த
ஏந்திழை யருக்கரசு மெங்கேயோ
அரசிபுரு ஷாதேவி அல்லாமல் இல்லையெனும்
அரசிவள் தானுமில்லோ தெங்கேயோ
ஆகின்ற தோழியாம் வாணுமாலை பெண்ணாள்
அமுதகுண முடையாளு மெங்கேயோ 410

### (போரில் புருஷாதேவி செம்பன்முடியை எதிர்கொள்ளுதல்)

என்றார்கள் மன்னவர் தோழிமார் பெண்களும்
எங்கேபடை பொரநாம் வருகிறோம்
ஏற்ற சமர்த்தனெனவே எங்களைச் சொல்லுவார்
இப்புவியி லெல்லோருஞ் சொல்லுவார்
சொல்கின்ற மொழிதனைக் கேட்டந்தப் பெண்களும்
சேனையைத் துரிதமாய் நடத்தினார்
சுற்றியதில் நல்லதோர் யானைக ளாயிரம்
துரகதங் கழுத்திலே சங்கிலி
துடரிஇரும் பாற்செய்த உலக்கையும் கொடுத்துமே
தொடுத்தாரே தோகைமார் கூடியே
தோய்கின்ற வாசிகளை மாய்கின்ற கன்னியர்கள்
[1]தொலையாம லேயிரு பக்கமும்
பண்பான பெண்களுக் கன்பான பேர்களும்
பாருபா ரென்ன வுரைசெப்பியே
புரிவிட்டு தரிவிட்டு சரியிட்ட வேல்குந்தம்
படிமீதில் நின்றுஎறிந் தார்களாம்

(407 — 412) கப்பம் — திறை. ஏராத — ஏற்காத. புவி — உலகம். எதிரில்லை — நிகரில்லை. பொர — போர் செய்ய. சமர்த்தன் — திறமைசாலி. சேனை — படை. துரகதம் — குதிரை.

1. துலையாமலே

## (போர்க்களக் காட்சி)

எறிந்ததோர் வேல்களும் இரைந்துவர வேகண்டு
ஏகிமறு வல்லய மெறிந்தனர்
இடையில் தடுத்து இரண்டொரு கூறதாகவே
இங்கு மங்கும் படைசினத்துதே 415
சினமதால் மாகுத்தன் மாருந் தேவருமென
திடமதாய் தன்கரி நடத்தியே
திடமென உலக்கையுடன் தடிகொண்டு படையினில்
தெருதேரென வாறதோர் கரிகளும்
மறுகரி களிறுக் கியத்துடன் வாறபரிகளும்
மதங்கொண்ட பட்டாணி மார்களும்
மட்டியவே கண்டு சாகாத 'பட்டாணிமார்
மாவேறி நின்றுபடை வெட்டவே
மங்கையர்கள் பரிவிட்டு வழுகாமல் வெட்டவே
மறுபடைக ளானது மடியவே
மாறாமல் குருதிதான் ஆறாக வோடுவதை
மன்செம்பன் முடியாருங் கண்டுமே
மன்னர்படை யுங்கூட்டிப் பெண்ணரசி யோடுபொர
வருகின்ற வேளையது தன்னிலே
மங்கைபுரு ஷாதேவி படைகளொடு ஒருபனைபோலே
மாறாதேநில் லென்றுசொல்லி யேபரிவிட்டு

## (போரில் எதிரிகளோடு புருஷாதேவி அவளின் தோழிமாரும் அஞ்சாமலே போர் செய்து கொண்டிருந்தனர்)

**விருத்தம்**

அம்மைதன் வார்த்தை கேட்டு அடங்கலும் ஒருகை யாக 420
நம்மைசேர் படைக்கும் போக வேண்டும்நல் தவங்க ளெல்லாம்
நன்மைசேர் புருஷா தேவி நலமதாய் தாயார் வார்த்தை
இம்மையும் மறுமை நன்றாய் ஏதுமே குறைவா ராது

(413 — 418) துடரி — மலை; இங்கு வலிமையையும் பருமையையும் குறிக்க வந்தது. உலக்கை — ஓர் ஆயுதம். வாசி — குதிரை. புரி விட்டு — முறுக்கு விட்டு. தரிவிட்டு — இருப்பு விட்டு. வேல், குந்தம் — சில போர்க்கருவிகள். இரைந்துவர — வேகமாகவர. ஏகி — சென்று. வல்லயம் — ஒருவகை ஈட்டியின் பெயர். மாகுத்தன் — மாவுத்தன்; யானைப்பாகன். கரி — யானை. தடி — ஒரு படைக்கருவி. வழுகாமல் — குறி தவறாமல்.

(மறுநாள் போருக்கு செம்பன்முடி படைகளைத் தயார்ப்படுத்தல்)

என்றவர் விடியும் முன்னே ஏத்தபொன் முடியார் மன்னன்
நன்றியாய் தம்பி கேளாய் நலம்பெறு மந்திரீ கேளாய் 425
இன்றுநல் படைக ளோடே எதிர்த்துநாம் பொரவே வேண்டும்
என்றுதான் விடிந்த போது எதிர்க்கபபோ ரணியிட் டாரே

(மறுநாள் போருக்குப் புருஷாதேவி படைகளைத் தயார்ப்படுத்தல்)

அணிகள்தா னிட்டா ரென்று அன்றுபெண் ணரசி கேட்டு
துணிவர்தம் புரவி யானைதோழிய ரோடுங் கூட்டி
பணிகள்தான் மிகுதி யுள்ள பரிகரி மீதி லேறி 430
மணிகள்தா னசைய வூன்றி மாதர்போ ரணியிட் டாரே

(நால்வகைப் படைகளும் போர்க்களம் வருதல்)

வேறு

பணிபட்டய மாய்ப்பகல் வந்திடவே
பகவதி போல்பரி வுற்றனராம்
ஆனைதுதிக்கை கொண்டே யடிக்க
அலறிக் கொடுத்தனர் அலறிக்கரியென
வாசி நெருங்கிட வரும் பட் டாணிகள்
வடுகர் சிங்களர் முகிலர் தன்படை
முகிலர் படையுடன் பலபல படையும்
முத்தப் படையென முடுகிப் பொரவே 435
வில்லில் நல்லதோர் மிகுந்த சிங்காடி
வீர னானவர் வினாவி லெடுத்தே
பாவங்கள் பார படைகள் பரந்தது
பார்முடி மன்னர் படையினி வரவே
வளைந்ததோர் பார வளைதடி வளையம்
மற்பிடி மன்னர் படையினில் வரவே
கனத்த செம்பன் முடியார் படையும்
கண்கொள் ளாப்படை தானும் வரவே
பார்நிக ரில்லா படைகள் பரக்க
பார்முடி மன்னர் படையினில் வரவே 440
வரவே இளமன் மந்திரி மார்கள்
வாய்த்த தேசத் தரசரும் வரவே.

(419-434) மாறாதே—அசையாமல் அப்படியே. பரி—குதிரை. அம்மை—புருஷா தேவியின் தாய். மந்திரீ—மந்திரி விளிப்பெயர் நிலையில். பொரவே—போர்ச் செய்யவே. புரவி, பரி—குதிரை, கரி—யானை. பகவதி—கன்னியாகுமரியில் உள்ள பார்வதி தெய்வத்தின் பெயர். பட்டாணிகள், வடுகர், சிங்களர், முகிலர்—செம்பன்முடி மன்னனுக்கு துணையாக வந்த சில பிற நாட்டு மன்னர்கள்.

### (போர் முரசங்கள் ஒலித்தல்)

வந்திடும் பேருக் கருவாய் நின்று
    வரிசை [1]மத்தளம் [2]நாத சுரங்கள்
நாக சரமொடு வீணை யொலிக்க
    நல்ல பேரிகை நடுங்கிட வேதான்
துந்துபி சின்னம் பலதும் முழங்க
    சொல்லத் துலையா துரைபடை யென்றார்

### (புருஷாதேவி படைக் களத்திற்கு வருதல்)

**வேறு**

படை யொருப்போல் வரவே — புருஷாதேவி
    படை யொருப்போல் வரவே 445
படையொருப் போல்வர பற்றார்கள் கொடியற
    பாரக்கரியின் மீதேவீரப் பெண்ணர சாரும்
புடவையுடு தோழிபுருஷா தேவி யம்மையும்
    போற்றும் பரிகரியைப் புகழ அலங்கரித்து (படை)
தோற்றும் புரவிமீதில் தோழியேழு பேரில்
    சொல்லில் மிக்கவாணு மாலைத் தோழியேறி
மாற்றமாக வந்த மாற்றனெங்கெ யென்று
    மங்கையர் கூடியே வாளுங் கையிற்கொண்டு (படை)

### (தோழியர்கள் அரசியோடு வருதல்)

ஒளித்துப் போகாததோர் உண்மைத் தோழிகளும்
    உரத்துப் தபாரவந்த மாற்றா னெங்கேயென்று 450
களிகள் மிகுதியுள்ள [1]யானை குதிரையேறி
    கலிரெனவே வெட்ட வாளுங் கையிலெடுத்து (படை)
எடுத்தார் படையில்மின்னார் இணங்கு மாயுதங்கள்
    எழுந்த புரவிமீதில் யானை மீதில்வர
தொடுத்த படையெங்கே யெங்கே யென்றுசொல்லி
    தோகை புருஷாதேவி சேர்த்த பெண்கள்கூட (படை)
படைகள் மிகநெருங்க பாரக்கொடி யிலங்க
    பைம்பொன்னாலே சமைத்த பாரக்குஞ்ச மிலங்க

(435 — 446) முத்தப்படை — முத்துப் போன்ற சிறப்பு வாய்ந்த படை. முடுகி — விரைந்து. பொரவே — போர்ச் செய்யவே. சிங்காடி — உண்டை வைத்து அடிக்கும் ஒரு வகை வில். வினாவில் — கேட்டதின் பெயரில். பாவங்கள் — அபிநயங்கள். மற்பிடி மன்னர் — மற்போர் மன்னர். கண்கொள்ளா — கண் பார்வைக்கு அடங்காத; மிகப் பெரிய. பரக்க — விரிந்து பரவ. மத்தளம், நாதசுரம், நாகசுரம், வீணை, பேரிகை, துந்துபி — சில இசைக்கருவிகளின் பெயர்கள். நடுங்கிட — ஒலித்திட. துலையா — தொலையாத; கூறி முடியாத. பற்றார்கள் — எதிரிகள். கொடியற — எதிரிகளின் கொடிகள் அற்று விழ.

1. ஆணை

துடிசே ரிடையழகி தோகைபு ருஷாதேவி
 தோற்றும் பக்கமதில் வாளு மிலங்கிடவே (படை) 455
இலங்கும் மத்தளங்கள் தித்திதோ மென்னவே
 ஏத்த நாகசுரம் மகுடமொழி முழங்க
பலவகை வாத்தியம் பம்பம் பென்றார்த்திட
 பாவை புருஷாதேவி தோழி எழுவரோடே (படை)

### (யானை மீது அரசி இருந்து போர் புரிதல்)

எறிந்த யானைமீது இருந்தபெண் ணரசியாரும்
 எங்கே செம்பன்முடி ஏந்தலெங்கே யென்று
அறிந்து எங்கள்கூட [1]ஆரவாரங் கொண்டு
 அமர்செய்ய வந்ததோ ரரசனெங் கேயென்று (படை)
எங்கே யென்றபோது யானை தனைநடத்தி
 இணங்குஞ் செம்பன்முடி மன்னனுட னேபொரவே 460
மங்கை பெண்ணரசி வரிசை [2]மகிழ்தாக
 வந்த புருஷாதேவி வாசி நடத்திடவே (படை)

### (படையின் முன்வரிசைக்குத் தோழியர்கள் வருதல்)

நடத்திப் படையின்மீதில் தோழி யேழுபேரில்
 நல்ல வாணுமாலைத் தோழி புரவிவிட்டு
தொடுத்தார் தோழிகூடும் தோகை ஆறுபேரும்
 தோற்றும் படைக்குமுன்னே செல்ல புரவிவிட்டு (படை)
விடுவார்கள் வேல்குந்தம் மிகுந்த புருஷாதேவி
 மேவுஞ் செம்பன்முடி மன்னரிரு புறமும்
தொடுவார் வேலொடு நல்சக்கரமும் விட்டு
 தோழி யேழுபேரும் கூடிக் குரவையிட (படை) 465

### (தோழியர்கள் எதிரிகளோடு போரிடுதல்)

வாணுமாலைத் தோழி மற்றுமொரு பேரும்
 வாளுங் கையிலெடுத்து வன்பரியி லேறி
ஊனமவருத்த முடிமன் னர்க்கிளை யவரை
 ஓடிக் கூவ்லூரில் நாடிப்போ மென்னவே (படை)

(447 — 459) மாற்றன் — பகைவன். ஒளித்து — மறைத்து. உரத்து — வேகமாய். பொரவே — போர் செய்யவே. களி — யானை மதம். மின்னார் — மின் போன்ற இடையுள்ள பெண்கள்; இங்கு தோழியர் எழுவரைக் குறித்தது. தோகை — மயிலன்ன சாயலுடைய பெண்; புருஷாதேவி. மத்தளம் — நாகசரம் இசைக்கருவி வகைகள். தித்திதோம், பம்பம் — ஒலிக் குறிப்புச் சொற்கள். பாவை — பெண். ஏந்தல் — அரசன். அமர் — போர்.

1. ஆரபாரங் 2. மகிழதாக

### (படைக்கு முன்வரிசைக்கு செம்பன்முடி வருதல்)

கூவலூராள் செம்பன்முடி யாரது கேட்டு
கொடிதுதம்பி நில்லு முன்னே நான்சொல்லட்டு
ஆவல்தீரப் பொருதவரை ஓட்ட வேண்டும்
ஆனதால் நீங்கள் பின்னாலே வாருமென்ன (படை)
புரவிகரிக ளெல்லாம் பொங்கிச் சினத்து கொண்டு
பூண்ட சங்கிலியொடு பெரியஇரும் புலக்கை 470
உரமெடுத் தடிக்கவே உடனே புரவிதலை
ஊக்குடன் விட்டது கண்டுடன் வரவிட்டு (படை)

### (போரில் செம்பன்முடி மன்னன் படைகள் பின்வாங்குதல்)

வாவென்று செம்பன்முடி மன்னர்படை யெல்லாம்
மருண்டுவிழுந் திடவேவரும் வெடிதனைக் கண்டு
தாய்விட்டு தமர்விட்டு தங்களு ருவமிட்டு
தாண்டிப் பொருதபடை சத்தங் குமுறிடவே (படை)
முறித்த படைகளெல்லாம் முகம்மாறு வாரென்று
முடிமன்னர் படையின்று முடியும்முடியு மென்று
செறிந்த படைகளெல்லாம் சினத்து அவர்கள் நிற்க
சேரப்பரி கரிகள் கோபத்துடன் நடத்தி (படை) 475
நின்ற வாணுமாலை தோழி முதலாக
நிற்க யெல்லோரும் நிமிர்ந்த குதிரைவிட்டு
அன்று விரட்டிவிட்ட ஆனை குதிரைகளை
ஆதார மாகக் கொண்ட அரசர் தனைவெருட்ட (படை)

### (செம்பன்முடி படையில் மந்திரி இறத்தல்)

நின்ற கூவலூ ராள் மன்னர்படை களெல்லாம்
நிமிஷம் பாடெடுக்க நின்ற மந்திரியையும்
கொன்று விட்டாள் கண்டபுருஷா தேவியென்ன
கூவலூ ராள் மன்னர் தம்பி படையெடுக்க (படை)
போகட்டு மென்றுசொல்லி புத்திமிகத் தெளிந்து
புருஷாதேவி யரும்புகழ் தோழி எழுவரும் 480
[1] ஆகட்டு மென்றுசொல்லி அணங்கி னுக்கரசியும்
அறிந்து பாடெடுக்க அருளிச்செய்தே யம்மை (படை)

(460 — 471) வாசி — குதிரை. தோற்றும் — தோன்றும். வேல், குந்தம், நல்சக்கரம் — சில படைக்கருவிகள். குரவை — பெண்கள் விசேஷ காலங்களில் நாவால் குழறி எழுப்பும் மகிழ்ச்சியொலி. வார் — தோல் வார். வன்ன பரி — அழகிய நிறமுடைய குதிரை. ஊனம் — உடம்பு செல்லட்டு — 'நான் செல்வேன்' என்னும் பொருளிலமைந்த குமரி மாவட்ட பேச்சு வழக்குச் சொல். ஊக்கு — மண்டையோட்டு பொருத்து.

1. ஆகட்டென்று

அறிந்த போதிலந்த அம்மைபெண் ணரசியும்
அறிந்த பாடுகளும் அவர்கள் முறிவதும்
தெரிந்த படைகளையும் சேரவெடுத்துக் கொண்டு
சேர்ந்த பெண்ணரசி தன்நாட்டில் வந்திட (படை)

**விருத்தம்**

நாட்டினில் புருஷாதேவி நல்லபெண்ணரசு மாக
தாட்டிமை வாணு மாலைத் தையலும் படையைக் கூட்டி 485
கூட்டிய தோழி யேழு பேர்களும் குணமாய்ப் போகி
சூட்டிய சிவனே யென்று சொல்பெற கலகஞ் செய்தாள்

**(தோல்வி கண்டு செம்பன்முடி நாணுதல்)**

வாழ்ந்தவ ரிருக்கும் நாளில் மறுபடை கூவலூரில்
சேர்ந்தபொன் முடியார் மன்னன் செப்புதல் தம்பி கேளாய்
சூழ்ந்தநல் மந்திரி மார்கள் தோன்றும்நல் படைக்கு வாங்கி 490
போந்தலி லிங்கு வந்தால் புவியுளோர் நகைப்பா ரன்றே

**(செம்பன்முடி காடத்தி தேசத்தாரிடம் படைதுணை கேட்கத் தீர்மானித்தல்)**

என்று காடத்தி தேசம் இணங்குநல் மன்னர் முன்போய்
குன்றெனும் ஸ்தனத்தா ரோடே கொடும்படை தோற்ற செய்தி
இன்றுதான் நீங்கள் சென்று இயல்வதாய்ச் சொல்வீ ராகில்
அன்றுதன் படையுங் கூட்டி அடங்கலும் வருவார் நன்றே 495

**(மந்திரிகள் காடத்தி தேசம் போய்ப் படையுடன் வருதல்)**

நன்றென விடையுங் கொண்டு நடந்து மந்திரிகள் தானும்
சென்று காடத்தி தேச தலைவனைத் துதித்து நின்று
பொன்று தல்வந்த தெல்லாம் பொருந்தவே யவர்க்குச் சொல்ல
நன்றெனப் படையுங் கொண்டு நாடியே வந்து சேர்ந்தார்

**(செம்பன்முடி மீண்டும் போரிட வருதல்)**

வந்ததோர் நாளில் செம்பன் முடிமன்னர் மகிழ்ந்து கொண்டு 500
நொந்ததோர் மனசைத் தேற்றி நொடிக்கும் முன்படையைக் கூட்டி
வந்திடக் கண்டு தோழி வரும்படை யதற்கு நேராய்
தம்முடப் படையைக் கூட்டி தான்பொர வெளியில் வந்தாள்

(472 — 483) மருண்டு — மயக்கம் கொண்டு. தமர் — சுற்றத்தார். குமுறிட — அதிரொலி செய்திட. முகம் மாறுவார் — தோல்வியினால் முகத்தில் சாட்டம் கொள்வார். முடி மன்னர் — செம்பன்முடி மன்னர். செறிந்த — ஒன்று சேர்ந்த. சினத்துகோபம் கொண்டு. வெருட்ட — அச்சம் உண்டாக்க. பாடெடுக்க — செயல்படுத்த. அணங்கு — அழகிய பெண்; புருஷாதேவி. முறிவதும் — போரில் தோல்வி அடையவும்.

## (போர் ஆரம்பமாதல்)

வேறு

படையிற் கலங்கா முடிதேவி யரரசுடனே
பாரமத யானைசேனை படையில் நடத்திடவே
நடத்திப் புருஷாதேவி நல்லவாசி மீதிலேறி
நளினத்துடன் வரவே நல்லதோழி ஏழுபேரில் 505
போரில்மிக்க தானவாணு மாலைத்தோழி ஏதுசொல்வாள்
புறத்துப்பொரவே பெண்களாறு பேரும் நாமுமாக்
நாரமென்ற நம்புரவி நளினத் துடன்நடத்தி
நலமாய் நடுங்கயுத்தம் தொடங்கஅவ் வேளையிலே

## (இருவர் படைகளும் பொருதல்)

கொடுகொடென சரங்கள் கொண்டுபடை மீதினிலே
கொடியிடை மார்கள் கொடிபடிமீ திலங்கிடவே
படிமீதிலங் கிடவே துடிசேரிடை மடவார்
பாரப்படை வீரத்துடன் சேரக்[1] கட லாரவார
ஆடலுடன் செம்பன்முடி மன்னவர்கள் தன்படையும்
அத்தியுடன் காடத்திவாழ் மன்னருட தன்படையும் 510
படையினில் பைந்தொடிமார் பாராமற் சென்றபின்பு
பாய்ந்தவர்க ளோடிவந்து படையைச்சென் றேவளைத்தார்

## (பட்டாணிமார்கள் போரிடுதல்)

படைகள் பரந்திடவே பயந்து அவர்கள்நிற்க
பாரவீர யானைகொண்டு படையில் நடத்திடவே
நடத்திப் புரவிதன்னை நலமென் றவர்விடவே
நல்ல பட்டாணி மாரெங்கும் நளினப் புரவிதட்டி
தட்டியே கொடிகளெங்கும் கெட்டியே இணங்கிடவே
சந்திரவட்டம் சூரியவட்டம் தையலர் படையுடனே
தட்டில்லாப் படைகளெல்லாம் நட்டமில்லா மலிருக்க
தக்கயானை மிக்கமிகொண்டு தகுதி நடத்திடவே 515
நடத்திப் படைகளெல்லாம் நளினத் துடன்வரவே
நாரிமார் வெடியதிர நடத்தங் கொருப்போலே
நடந்து படைசேரும் நள்ளார்கள் வெடியதிர
நாலுதிக்க மொருப்போலே நடத்திச்சென்றே வளைந்தார்

(484 — 503) தாட்டிமை — தைரியம் வாய்த்த. தையல் — பெண். கலகம் — போர். போந்தலில் — (தோற்றுப்போய்) வருவதால். ஸ்தனத்தார் — மார்பகத்தார். கொடும் படை — பெரும்படை — காடத்தி தேசத் தலைவன் — செம்பன்முடி மன்னன். துதித்து — வணங்கி. பொன்னுதல் — அழிதல். நொடிக்கும் முன் — 'மிக விரைவாக' என்னும் பொருளில். பொர — போர் செய்ய.

1. கடலாரபார

### (தோழியர் படை முன்னேற்றிச் செல்லுதல்)

வளைந்தா ரமரில்வந்து வாணுமாலைத் தோழிசொல்வாள்
வன்நெஞ்சர் படையையிப்போ வளைந்து பொருவோமென்ன
ஏழுதோழி மார்களுந்தான் எதிர்த்துப் படைபொருது
ஏத்தபுரவிகள் தன்னை தோற்றும்படி யாய்நடத்தி

### (கடும்போர் நடக்கும் காட்சி)

நடத்திப் புருஷாதேவி நளினப் புரவிவிட்டு
நம்முடனே திர்க்கவந்த நள்ளாரெங்கே யென்றுசொல்லி 520
தொடுத்த படைகளங்கு சுற்றிவந்து நாலுதிக்கும்
தொத்தும் முடிமன்னவரைத் துரத்திப் படைநெருங்க
நெருங்கும் மாற்றலர் படைமிகுந்த கடலெனவே
நேரிட்டு மறுபடையில் தானாகப்பரி நடத்தி கூறிட்டுப்
பெருத்த கும்பஸ்தனத்தார் பொறுத்த படையில்புக்க
பெட்டியும் முட்டியுமாக வெட்டியே கொல்லுவார்சிலர்
அருங்கொம்பி லுற்றகனி யானபுருஷா தேவி
அன்று செம்பன்முடி மன்னர்க்கடுத்து முடுகிடவே
கரும்பில்மி குந்தசொல் லாள்காரிகை பெண்ணரசாரும்
கருதிமுடி மன்னனை கலந்துவெட்டு வாளெங்கே 525
வெட்டிடவே கைகளற்று விழுவார் படைநடுவே
வெவ்வேற தாகவுடல் விழுந்து மிகத்துடிக்க
கோட்டையது தோறும்புலி வேட்டையாடுந் தன்மைபோல
குஞ்சரங்களின் தலைகால் குறைத்துப் பொருதிடவே
ஆனைத்தலை களின்மீதே ஞானப் புலிகளெனவே
அம்புதர மோடிச்சென்று கொம்புகட் கிடையில்தைக்க
வந்திட்ட காரிக்குதிரை பந்தித்துட னுள்ளேவைத்து
வாட்டியே குதிரைதன்னை கோட்டுக்குள் ளாகமறித்து

(504 — 515) முடிதேவி — புருஷாதேவியின் தாய்; அரசி. ஏது — காரணம் புறத்துப பொரவே — நாட்டுக்குப் புறத்து போர் செய்யவே. நாரம் — வாணுமாலையின் குதிரை யின் பெயர். கொடுகொடென — ஒலிக்குறிப்புச் சொல். சரம் — அம்பு. கொடியிடை மார் — கொடியிடை போன்ற பெண்கள்; அரசியின் தோழியர் எழுவர். புரவி தட்டி — குதிரையை விரட்டி, கெட்டியே — கட்டியே. சந்திர வட்டம்; சூரிய வட்டம் — அரசாங்க சின்னங்களில் ஒன்றாய வெண்கொற்றக்குடைகள். நட்டமில்லாமலிருக்க — சேதம் இல்லாமல் இருக்க.

(516 — 527) நளினத்துடன் — அழகுடன். நாரிமார் — பெண்கள். நள்ளார் — பகைவர். அமர் — போர். நாலு திக்கு — நான்கு திசைகளான வடக்கு, மேற்கு, தெற்கு, கிழக்கு ஆகிய திசைகள். தொத்தும் — அடைக்கலம் புகும். மாற்றலர் — பகைவர். கும்பஸ்தனத் தார் — கும்பம் போன்ற மார்பகத்தார். பெட்டியும் முட்டியுமாக — ‘படைகளில் அது இது என்று பாராது அனைத்தையும் என்கிற பொருளில் அமைந்த சொற்றொடர். குஞ்சரங் கள் — யானைகள்.

## (காடத்தி மன்னன் படையில் தோழி வாணுமாலை புகுதல்)

தாங்காமலே வெட்டுப்பட்டு தலைகளுந் தானுமற்று
தாளுங்கரங் களுமற்று தோளோடு செவியும் 530
மங்கைவாணு மாலைத்தோழி தங்கியே குதிரைவிட்டு
மாறியே காடத்தி மன்னன்தேறிய படையிற்புக்கி
வெட்டவே தட்டினாரங்கே வீரத்துடன் கேடயத்தில்
மீட்டுமொரு வேலெடுத்து மிகவே அசைத்திறுக்கி
துட்டரொடு சாடிடவே துரிசங்கரி விழுந்து
[1]தோய்கின்ற வாசிதனை தொலைக்கரியு மிட்டு
கட்டமாகச் செம்பன்முடி காவலன் தம்பியுமாய்
காவலாய்க் கரியதனைக் கோபத்துடனே நடத்தி
விட்டதோழி ஏழுபேரும் வேகமாய்ப் பரிநடத்தி
வெட்டவந்த இளமன்னர் சட்டமாகப் பெண்ணைக்கண்டு 535

## புருஷாதேவியும் செம்பன்முடியும் நேருக்கு நேர் போர்புரிதல்)

விட்டாரங்கே யானைதன்னை கட்டுடன் வழிமறிக்க
மெய்ப்பானதோர் தேவியரும் தப்பாமலே தான்பொருது
விளிகள் மிகுந்திடவே வெகுண்டு பெண்களுங்கேட்டு
மிஞ்சும்படை கோட்டைஎங்கும் அஞ்சாமலெ தீர்த்திடவே
இறங்கும் படைகளெல்லாம் [2]இனித்தொடரா தெனவே
எதிர்த்து வெட்டுவாரங்கே எதிரேயணுகி நின்றோர்
நின்றதோர் படைகளெல்லாம் பார்க்கும் பொழுதரிய
குதிரைத் திரளுகளும் குஞ்சரத் திரளுகளும்
குமிர்தத் துடன்படைகள் குரவை விளியெறிய
இன்சொலுடை பெண்ணரசாள் வன்சொல்லாக வேவெகுண்டு 540
ஏத்தசெம்பன் முடியானை எப்படியுங் கொல்வனென
..... ..... ..... ..... ..... ..... ..... .......
விரையத் துணைக்கெழுந்த வேந்தனாங் காடத்தியையும்
வீடுடனே கொல்லவென்று வெகுண்டங்கே தானடைந்தார்

(528 — 539) ஞானப்புலி — அறிவுடைய புலி. தூரம் — பல தடவை. கொட்பு — யானைக் கொம்பு. காரிக்குதிரை — கரிய குதிரை. பந்தி — குதிரைக்கூட்டம். கோட்டுக்குள் — எல்லைக்குள். புக்கி — புகுந்து. கேடயம் — படை கருவிகளின் தாக்குதலிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளப் பயன்படுத்தும் ஆயுதம். மீட்டும் — மீண்டும். துட்டர் — துஷ்டர்; பகைவர். துரிசங்கரி — தோழியர் எழுவருள் ஒருவர் பெயர். வாசி — குதிரை. மெய்ப்பான தோர் — புகழ் உடையதோர். விளி — கண். குஞ்சரம் — யானை.

---

1. தோய்யுகின்ற 2. இனித்துடரா

**விருத்தம்**

நடந்தவர் சென்ற போது நலமுட னேதா சொல்வார்
கடந்தவ ரில்லா நேரம் கருதியே அறியா வண்ணம்
தொடர்ந்தனன் மறவ ரைத்தான் சொல்லியே அல்லால் கோட்டை
இடந்தனைப் பிடித்தா ரென்று எண்ணியே அமரில் வந்தார் 545

## (எல்லா எதிரி படைகளும் புருஷாதேவி படையை வளைத்தல்)

**வேறு**

அமரில் புருஷா தேவியர் படையும்
அன்று முடிமன் படையை வளைந்தார்
சமரில் பொரவே யிளமன் படையும்
தக்கதோர் மந்திரி மார்களும் வரவே
வரவே காடத்தி மன்ன வருடனே
வந்ததோர் படையும் சந்தோஷ மாக
பொரவே பொன்முடி மன்னவர் சேனை
புக்கவர் மந்திரி மார்களும் படையும் 550

## (அம்புகள் கொடுத்து புருஷாதேவி படையினர் எதிரிகளை வாட்டுதல்)

படையில் புருஷா தேவியர் சேனை
பாரக் குரவை முழக்கத் துடனே
விடைவா கனமுடை வீரா சரணம்
வித்தகனே யாம்பொரும் படை தன்னில்
மலையென வந்த பெரும்படை தன்னை
மாதீர்கள் கூடி வீரத் துடனே
கொலைசெய் தவர்கள் குழாத்தினை வெல்ல
குன்ற வில்லிநீ துணையென வேதான்
தீர்ண்டிப் பொரவே சரமது கொண்டே
தாங்களு மவரவர் கூடிப் பொரவே 555
தூண்டியே வேகமாய் சரமது விடவே
சொற்பெறு சேனைகள் பட்டு மடிய

(540 — 552) குமிர்தத்துடன் — குவிந்து உடன். குரவை — பெண்கள் நாவால் குழறி எழுப்பும் மங்கல ஒலி. அமரில், சமரில் — போரில். பாரக் குரவை — கனத்தக் குரவை. விடை வாகனமுடை வீரா — காளை வாகனத்தை உடைய வீரனே; சிவனே. வித்தகனே — பேரறிவாளனே; சிவனே.

(பல எதிரி நாட்டு மன்னவர்கள் இறத்தல்)

மடிந்த படைஉடன் கடிந்து விழவே
மங்கை யர்வாள் வெட்டாலே மடிய
மடிந்திடும் நேரம் கடிந்த தேவர்வீரர்
மனமது நொந்திட மன்னவர் பட்டார்
படையில் புருஷா தேவி யருடனே
பைந்தொடி வாணு மாலை யவளும்
இடையில் தோழி [1]அனைவ ருமாக
எதிர்த்தினம் மன்னரை வெட்டுவா ரங்கே 560

(போரிற் குதிரையை முன்னேற்றிப் புருஷாதேவி நடத்துதல்)

வெட்டவே புருஷா தேவியர் அரசி
வீரமாய்க் குதிரையி லேறியே வெட்டி
தட்டவே மன்னர் தலையிலே கொண்டு
தக்கவ ராம்இள மன்னவர் பட்டார்
மடியவே செம்பன் முடியார் கண்டே
மகிழ்ந்து படையுடன் புகழ்ந்து வரவே
கொடியன் காடத்தி வாழ்மன் னவரும்
கோபத் துடனே மேவச் சமரில்

(தோழியர்கள் அறுவர் மாண்டு படுதல்)

மேவிய படையில் தோழிய ரேழும்
மிஞ்சியே வரும்படை யுடனே பொரவே 565
தாவிக் களமிடை வளைத்துமே படைகள்
சமர்செய் திடவே காடத்தி மன்னன்
மன்னவர் கூடிய சேனை யுடனே
மங்கை யரோடே எதிர்த்திடும் நேரம்
சின்னம் படவே வெட்டுகள் கொண்டு
தெரிவையின் தோழியர் அறுவரும் பட்டார்

(பேரரசி தன்னைத் தானே மாய்த்தல்)

பட்டது கண்டு கலங்கர முடியார்
பாவைய ரிடத்தில் பரியை நடத்தி
விட்டது கண்டு வேல்நுத லாளும்
வெட்டு வானரச னென்னவே தோழி 570
காவின் கிளிமொழி வாணு மாலை
கட்டுடன் பக்கந் தனிலே வரனே

(553 — 564) குழாம் — கூட்டம். குன்றவில்லி — மேருமலையை வில்லாகக் கொண்டவன்; சிவன். சரம் — அம்பு. சேனைகள் — படைகள். பட்டு — இறந்து. கொடியன் — கொடியவன். மேவ — பொருந்த. சமர் — போர்.

1. அனுவருமாக

சாவில் ஜெயமினி நமக்கு வருமோ
தையலே என்னவே பெண்ண ரசாரும்
அன்றுடை வாளும் கரத்தி லெடுத்து
அன்புடன் வயிறது பிளந்தவள் பட்டாள்

**(வாணுமாலை தன்னைத்தானே மாய்த்தல்)**

நன்றென வாணு மாலைத் தோழி
நலமுடன் பெண்ணர சாளின் வலது
பக்கம தாகவே நின்றுடை வாளை
பரிவுடனே எடுத்த மரிலே நின்று 575
துர்க்கை யெனவே வயற்றைப் பிளந்து
சுறுக்கு டனேகுடல் மாலைய தாக்கி

**(புருஷாதேவி தன்னைத்தானே மாய்த்தல்)**

கருத்தாய் வாணு மாலை யிறக்க
கண்டதோர் பெண்ணர சாளின் புதல்வி
வரத்தில் மிக்கவள் புருஷா தேவி
வளமுடை தன்படை மடிந்தது கண்டு
கண்டு தாயார் மடிந்த விதமும்
காரிகை தோழிய ரிறந்த விதமும்
மிண்டென் தன்னுட மனதில் நினைந்து
மிகுதியு மிறுதிப் படுத்துவ ரெனவே 580
நானென் றறியவே வலது கரத்தில்
நடுங்கவே மங்கைதான் சூல மெடுத்து
ஊன மில்லாமலே வயற்று ளிருந்த
ஒன்பது [1]மாதச் சிசுவை யெடுத்து
மாவுங் கொடியுடன் படையிலே வந்த
மன்னவன் முன்பி லெறிந்து யிர்விட்டு
காவுக் குயில்மொழி மடிந்தது கண்டு
கட்டுட் னேது உரைக்கிறான் மன்னன்

**(செம்பன்முடியின் இரக்கம்)**

காசினி தனிலே இவருக் கிணையாய்
கற்புறு பெண்களைக் கண்டது மில்லை 585
மாசில் லாஇப் பெண்மணி தானும்
மடிந்தா ளெனவே ஏங்கி மனதானும்

(565 — 576) பொரவே — போர் செய்யவே. சின்னம் படவே — சிதைந்து போகவே. தெரிவை — எழுநிலை மகளிருள் ஆறாம் நிலையிலுள்ள பெண். அறுவர் — அரசியின் தோழியர் எழுவருள் வாணுமாலை நீங்கலான அறுவர். பாவை — பெண். வேல்நுதலாள் — வேல் போன்ற விழியாள்; அரசி. கா — மரச் சோலை. கட்டு — காவல், ஜெயம் — வெற்றி. பட்டாள் — இறந்தாள். அமரிலே — போரிலே. துர்க்கை — காளி. சுறுக்குடன் — விரையுடன்.

1. மாச

(செம்பன்முடி உயிர் துறந்த விதம்)

சென்றே உடைவாள் தன்னை நிறுத்தி
தீரமாய் நின்று சூர்தன்னை தொழுது
வந்து உடைவாள் முனையிலே சாடி
வளர்பொன் முடியார் பட்டன ரப்போ

(காடத்தி மன்னன் உயிர் துறத்தல்)

பட்டது கண்டு காடத்தி மன்னர்
பாரக் களமதி லேறிப் படவே
கட்டத்து டனுயிர் விட்டவர் கூடி
கயிலை யரன்தீ முன்பிலே வந்தார் 590

(மாண்டுபட்டோர் தேவலோகம் அடைதல்)

சரவில் வன்கொலை யாக இறந்தோர்
சங்கர னாருட மூன்பிலே வந்தர்ர்
வரவே புருஷா தேவி யென்னம்மை
வாம தேவனுட முன்பிலே வந்தாள்
மங்கையர் பரிசை வாளுட னேதான்
மகா தேவருட முன்பிலே வந்து
என்கோன் சிவன்மு தலாரே யெனவே
ஏறிட் டுடனே ஏதுரை சொல்வார்
வந்தீர் வன்கொலை யாகவே பட்டு
வடிவன் பொன்முடி ராஜ னுடனே 595
இங்கே வந்தீர் திருவேள் வியிலே
யாவருஞ் சென்று முங்கிடு வீரே
மங்கையர்க் கரசே யென்னவே யீசன்
மகிழ்ந்து உரைக்கவே கிங்கிலி யர்தான்

(வேள்வித்தீ வளர்க்கப்படுதல்)

கயிலைப் பாங்கில் அரனரு ளாலே
கட்டுடன் சென்றே வேள்வி வளர்த்தார்
தயிலம் போன்ற தங்கத் தாலே
தறையை மெழுகியே வேள்வி வளர்த்தார்

(577 — 588) வளமுடை — செழுமையான. காரிகை — பெண். ஊனமில்லாமல் — குறைபாடு இல்லாமல். சிசு — பச்சிளங் குழந்தை. மா — குதிரை. குயில்மொழி — குயில் போன்ற மொழியை உடையவள்; புருஷாதேவி. ஏது — என்ன. காசினி — உலகம். மாசில்லா — குற்றமில்லா. தீரமாய் — துணிவாய். சூர் — வீர தெய்வமாகிய துர்க்கை.

(589 — 599) பட்டது — இறந்தது. பாரக்களம் — கனத்த படைக்களம். கட்டத்துடன் — கஷ்டத்துடன். சரவில் — போரில். சங்கரன் — சிவன். வாமதேவன் — சிவன். வேள்வித் தீ. முங்கிடுவீர் — மூழ்கி எழுந்திடுவீர். கிங்கிலியர் — சிவனின் ஏவலாளர். தயிலம் — எண்ணெய். தங்கம் — தங்கக் குழம்பு; உயர்வு நவிற்சியில் கூறப்பட்டது.

### (வேள்வித் தீயில் அனைவரும் மூழ்கி எழுதல்)

வளர்த்த வேள்வியி லுறப்ப தாக
　வானந் தன்னில் புகையது ஓட 600
களந்தனில் தெய்வார் குரவை யொலிக்க
　காரிகை யாள்திரு வேள்வியில் முங்க
முங்கவே செம்பன் முடியரும் முங்க
　முடுகவே வேள்விக் குழியது தனிலே
வந்து காடத்தி யிளம்மன் னவரும்
　வனிதை பெண்ணரசி தோழி களேழும்
அந்த வேள்வியில் முங்கி யிளகி
　அரனா ருடதிரு முன்பிலே வந்தார்
வந்த வரைத்தான் கண்டு மகிழ்ந்து
　வளமுள்ள ஆட்டுக் கார யியக்கி 605

### (மூழ்கி எழுந்தவருக்கு திருநாமம் சூட்டுதல்)

ஆட்டுக் கார இயக்கி தானென்றே
　அரனா ருந்திருப் பேருங் கொடுத்தார்
செம்பொன் முடியார் மன்னவு னுக்குத்
　தீரன் செங்கிடாய்க் கார னெனவும்
காடத்தி வாழ்மன் னவருக்கு
　கழுக்கா ரனென்னப் பேருங் கொடுத்தார்
மற்றுந் தோழியர் தங்களுக் கெல்லாம்
　மகாதே வர்திருப் பேருங் கொடுத்தார்

### (அணிகளை இறைவன் வழங்குதல்)

இப்படி யேபல பேருங் கொடுத்து
　ஈஸ்பர னாரும் இயக்கி யம்மைக்கு 610
நாடியே கொடுத்த ஆபர ணங்கள்
　நலமுடன் காலிற் சிலம்புடன் தண்டை
தண்டைகள் பாடகம் நெற்றிப் பிறையும்
　தன்னுட கைதனி லுடைவாள் பரிசை
மண்டலம் புகழ்இ யக்கியென் னம்மை
　மன்னவன் செங்கிடாய்க் காரனு மாகி

(560 — 611) உறப்பதாக — அடர்த்தியாக. தெய்வார் — தெய்வ கணத்தார். முடுகவே — விரைவாகவே. தீரன் — வீரமுடையவன். மகாதேவர் — சிவன். சிலம்பு, தண்டை — சில காலணிகள்.

### (இயக்கியாகிய புருஷாதேவியைத் தென்காசி செல்ல சிவன் பணித்தல்)

இப்படிப் பேரும் விளம்பின போது
　[1]ஈஸ்வரரே வரந்தா ருமென் றாரே
என்றவர் சொல்லக் கண்ட ரனாரும்
　ஏந்திழை யாட்டுக் கார யியக்கி　　615
உந்த னக்குவரம் வேண்டுமே யானால்
　உத்த தென்காசி யூரதி லேபோய்
சித்தி ரமாகிய பொன்னிறத் தாளை
　சென்றே[2]பலிநீ யுண்டே வருவாய்
வருவாய் பலிகொண் டொருநா ளையிலே
　வந்தால் வரமது தருவே னெனவே
தருவே னெனவே அரனார் சொல்ல
　சடுதி யுடன்வழி நடந்தார் தானே

### (புருஷாதேவியின் பிண்டக் குழந்தை காட்டில் வளருதல்)

**வேறு**

இப்படியே வழியனுப்பி ஈஸ்பரருந் தேவருமாய்　　620
சொல்பெரிய கயிலையிலே சுடரொளிபோ லினிதிருக்க
காட்டகத்தில் படைபொருது காரிகை[3]யா ளிற்குமன்னாள்
நாட்டமுட னவள்புருஷா நன்னுதலாள் வயிற்றிலுற்று
ஏழுடனே [4]இரண்டுமதி இருந்தபிண்டந் தன்னையன்று
பாழாக மன்னருட பாங்கதிலே எறிந்தபிள்ளை　　625
வாட்டமின்னி முக்காட்டில் வளருதல்லோ அரனருளால்
தேட்டமுடன் பெண்பிள்ளைதான் தேகவடி வுள்ளதெல்லாம்
காலுரண்டும் ரத்தாறாய்க் கதித்தவுடல் வுதிரமுமாய்
பாலுண்ணும் உதடுரண்டும் பார்த்தால்செந் நீர்நிறமாய்
இப்படியே தேகமெல்லாம் இரத்தநிற மாய்மினுங்க　　630
தப்பில்லா துயிர்பிரிந்த தனிஇடத்தி லேஅக்குழந்தை
ஊரருகே முக்காட்டில் [5]ஒருத்தர்வர வில்லாமல்
ஆருமில்லா தேதனியே ஆளுருவாய் வளர்த்தனனே
பண்டிபிளந் தெறிந்தபிள்ளை பட்டுயிர்தான் போகாமல்

(612 — 627) தண்டை, ப ாடகம், நெற்றிப்பிறை — சில அணிகலன்கள். மண்டலம் — உலகம். இயக்கி — ஒரு பெண் சிறு தெய்வம்; செங்கிடாய்க்காரன் — ஒரு ஆண் சிறு தெய்வத்தின் பெயர். தென்காசி — நெல்லை கட்டப்பொம்மன் மாவட்டத்திலுள்ள ஓர் ஊர். சித்திரமாகிய பொன்னிறத்தாள் — அழகிய வடிவமுடைய பொன்னிறத்தாள் என்ற பெண். சடுதியுடன் — விரைவுடன். மதி — மாதம். பிண்டம் — உருவமற்ற கரு. பாங்கதிலே — பக்கத்திலே. முக்காடு — ஓர் இடம். தேட்டமுடன் — விருப்பத்துடன். தேகவடிவு — உடல் வடிவு.

1. ஈஸ்பரரே 2. பெலி 3. யாளிற்க்கு 4. ரண்டு 5. ஒரு;

வண்ணமுடன் சோதனைக்காய் வளருதல்லோ முக்காட்டில் 635
மாதாவின் பால்குடித்து மகிழ்ச்சியுட னிருக்காமல்
ஏதானும் நாளாக இவள்வளர்த்துக் காட்டில்நிற்க
பாரிலுள்ளோர் அவ்வழிக்கே பதறிப்போ காதிருக்க
பாரதிநா தனருளால் பாவையரி னழகுதனை
ஆகாசந் தனிலிருந்து அமரர்கண்டு மனம்மகிழ்ந்து 640
ஈசான விடமதிலே இமையவர்க ளுரைக்கலுற்றார்

### (சிவன் அக்குழந்தையை வரவழைத்தல்)

அன்றுசிவன் மனமிளகி அவளையிங்கே அழையுமென்றார்
என்றபோது தெய்வார்கள் ஏகியந்த முக்காட்டில்
இன்பமுட னே வளர்த்த ஏந்திழையைத் தானழைத்து
குன்றவில்லி இடமதிலே கொண்டுவிட்டார் தெய்வார்கள் 645

### (இறைவன் குழந்தையிடம் தீட்டை நீக்க வேண்டுதல்)

கயிலையாளி முன்னர்வந்த கன்னியரைத் தான்பார்த்து
ஒயிலான வடிவழகி உன்தீட்டை நீக்கெனவே

### (குழந்தையின் மறுமொழி)

அன்புடனே ஈஸ்வரர்க்கு ஆயிழையும் சொல்லுகிறாள்
என்பேரிற் குற்றமில்லை ஈஸ்வரரே சொல்லுகிறேன்
பிறந்தாக்கால் தீட்டுமுண்டு பெரியவரே என்தாயார் 650
இறந்தஅன்றே உருவாகி ஈஸ்வரரே வந்தேனென்றாள்

### (தீட்டு கழிய குழந்தையை வேள்வித்தீயில் தள்ளுதல்)

**வேறு**

வந்தேன் கெவுரிபங்கா கயிலையில் வாழும்மறைமுதலி
வரமதுதாரு மெனவுரைத்தம்மை வணங்கிட ஈஸ்வரரும்
சங்கையுடனே வந்துளமதிடம் சறுக்கா துரைத்தவளை
சற்றுமிரக்க மின்றிபிடித்துத்தீ தன்னிலே தள்ளுமென்றார்

(628 — 651) கதித்த — பருத்த. உதிரமுமாய் — இரத்தமுமாய். மினுங்க — ஒளியைச் சிதறவிட. ஆருமில்லாதே — யாரும் இல்லாமல்; அநாதையாய். பண்டி — வயிறு. பட்டு — இறந்து. வண்ணமுடன் — அழகுடன். பாரதி — பைரவி. நாதன் — இறைவன். ஈசான்ன் — வடகிழக்கில் உறைபவன்; சிவன். இமையவர் — தேவர். குன்றவில்லி — மேருமலையாம் குன்றை வில்லாகக் கொண்டவன்; சிவன். தெய்வார் — தேவர். கயிலையாளி — கயிலை மலையை ஆள்கின்றவன்; சிவன்.

தள்ளுமென வுரைக்கப் பெண்ணவள் தானுரைகூறிடுவாள்
தள்ளின் ரானாலும் என்வடிவு தவறாதொருநாளும்
பிள்ளைநான் சொல்லுகிற வாய்மொழி பிரியமுடன்கேட்டு
கள்ளமொன் றில்லாதீயினில் கட்டித்தள் ளென்னஅரன் 655
வம்புகள்பேசு கிறாள்சிறுபிள்ளை போலவே வந்தவள்தான்
வார்த்தைக் கிரங்காதுஎரியினில் வடிவுடன் தள்ளுமென்றார்
மண்பொதுத் தந்தைசெய்த வுடலெங்கும் மாறாவுதிரமுடன்
மாதேவனென் றெண்ணியே எனைச்சற்றும்
மதிக்காமொழியுரைக்கும்
பெண்ணாளிவள் தனையும் தீயினில் பிடித்துத் தள்ளுமெனவே
பின்னமுடனுரைக்க வேள்வியில் பெண்மணிதான் வெகுண்டு
தன்னுடதாய்ச் சாடிஉயிர் விட்டதடத்தில் விழுந்திடவே
தாக்குடன் கிங்கிலியர்ஓடி வந்துசட்டென மூடிவிட்டார்
மூடின வேள்விக்குள்ளே முந்நான்கு வருடம்
மோசமொன் றில்லாமல் கழித்து வேள்விக்குள்
மூங்கியிருந்ததற்பின் 660

(பன்னிரெண்டு வருடம் தீயிலிருந்து குழந்தை வெளிவருதல்).

சாடின பெண்மணிதான் பனிரண்டு சம்வத்சரங்கழிய
தானேவேள்வி வெடித்துப்பிளந்திட வதயல் வெளியில்வந்தாள்

(சிவன் கோபம் தணிந்து குழந்தையை அழைத்தல்)

சந்துருவையிட கேட்டந்த வானவர்கள் மகிழ்ந்து
வனிதையின் செய்கைகளை விவரமாய்வாம தேவர்க்குரைக்க
அந்திவண்ணன் கோபம்மாறியே ஆயிழையாள் தனையே
அழையுமென வுரைக்கப் பண்ணவர் அழைத்தரன் முன்பில்
விட்டார்
விடடுவனை யரனார்பார்க்கிற வேளையது தனிலே
வித்தாரம் பேசுசிறவாயிலும் கையிலும் வாகுவிலுத்
சட்டியமையாகியதோ ரொக்கலையிலும் கரையெனவே துலங்கி
காசினியோர் புகழஏழுபிள்ளை [1]கிழவி எதிரேநின்றாள் 663

(652 — 663) கெவுரிபங்கா — உமையை தன் இடது பாகத்தில் அங்கமாய்க் கொண்டவன்; சிவன். மறைமுதலி — வேதங்களுக்கு முதல்வனானவன்; சிவன். சங்கை — அச்சம். சறுக்காது — சாக்கு போக்கு சொல்லாது. மண்பொதுத்தந்தை — இப்பூமியின் தந்தை; பிரமன். மாதேவன் — சிவன். சிங்கிலியர் — சிவனின் ஏவலாளர். மோசம் — அழிவு. சம்வத்சரம் — ஆண்டு. தையல் — பெண் குழந்தையாக வேள்வியில் சென்றவள். வாமதேவர் — சிவன். அந்தி வண்ணன் — அந்தி காலத்து சிவந்த மேனியன். சிவன்.

1. கிளவி

## (குழந்தைக்குச் சின்னயியக்கி எனப் பெயர் சூட்டல்)

**வேறு**

நின்றா ளரனுட திருமுன் பதிலே
நெய்த்தோர் போல நிறமாகவே பெண்ணாள்
கண்டோர்க் கதிசயந் தோணும் படியாய்
கனல்போ லேழு சிறார்களு மேந்தி
நிற்கக் கண்டு முக்கண்ணன் மகிழ்ந்து
நிச்சய மாய்வரம் ஈயவே எண்ண
கற்பந் தனிலுள்ள பெண்டுகள் கூடி
கலகல கலென குரவை யொலிக்க
சின்ன யியக்கி யம்மை யெனவே
சிவனா ருந்திரு நாமமு மிட்டு 670
அந்திர யியக்கி கொக்கோட்டு யியக்கி
ஆயிழை மேலாங் கோட்டு யியக்கி
பச்சைக் குடையவள் நிச்சயக் காரி
பாவை சின்ன யியக்கி யென்னம்மை

## (இயக்கியின் கோலம்)

செக்கர் நிறமுடை ஆடையுங் கச்சும்
சேரபணிந்து இயக்கி யென்னம்மை
இருண்ட தலைமுடி சேரவே பின்னி
இருகண் ணுமெரி யென்னவே மின்ன
மருண்ட விழியுடன் வலுதுகை தனிலே
மங்கை யெடுத்தாள் மாவுங் கொடியும் 675

நல்லது போலவே கையி லெடுத்து
நலமுடன் சின்ன யியக்கியும் வந்தாள்
பல்லையும் நாக்கையும் கண்டவர் பதற
பளபள பளென மேனி யிலங்க
பாலைப் பழித்த மொழியா ளியக்கி
பாங்குடனே செவி மூக்கி லணியும்
காலில் தண்டை சிலம்பு புலம்ப
கட்டுடன் மஞ்சணை வாடை மணக்க

(664 — 675) வித்தாரம் — விரிவாய் பேசும் முறை. வாகு — தோள். கட்டியமையாகிய தோரொக்கலை — புனைந்துரைக்கின்ற கலை. துலங்கி — விளங்கி. கிழவி — கிழவியைப் போல. நெய்த்தோர் — இரத்தம். கனல் — தீக்கனல். சிறார் — சிறுவர். முக்கண்ணன் — மூன்று கண்களை உடையவன்; சிவன். கற்பகம் — கேட்டதையும், நினைத்ததையும் தரும் மரம். கலகலகல — ஒலிக் குறிப்புச் சொல். அந்திரியியக்கி, கொக்கோட்டு யியக்கி, மேலாங்கோட்டு யியக்கி — சின்னயியக்கியின் வேறு பெயர்கள்.

## (இறைவன் இயக்கிக்கு வரங் கொடுத்தல்)

வந்தவரைக் கண்ட ரனார்ம கிழ்ந்து
வாணுதல் மேலாங் கோட்டு யியக்கி 680
சந்தமுடன் வரந்தா ரேனு னக்கு
சதிருடன் கேளுநீ கொக்கோட் டியக்கி
பழிப்பா யுரைக்கும் வையகத் தோரை
பத்திப் பிடித்துத் தெருட்ட வரங்கள்
சறுக்காறு தரத்துற் றிடுங் கருவை
தன்னை யறியா தழிக்க வரங்கள்
மரம்போ லுணத்தி அழிக்க வரங்கள்
மங்கையர் தம்மைப் பிரிக்க வரங்கள் 685
கருத்தா யிளஞ்சூ லழிக்க வரங்கள்
காட்டிலோ நின்று பிடிக்க வரங்கள்
பிள்ளை யில்லாம [1]லுணர்த்த வரங்கள்
பிறப்பிலே சென்று மறிக்க வரங்கள்
கள்ள மில்லாது மறுக்களைப் பற்றி
கஞ்சி குடியா திடவே வரங்கள்
ஆறு மாச மானதோர் கருவை
அல்லா மலாக்கி டவேவ ரங்கள்
ஊரு வழியாய் திரிகிற பேரை
உடனே சென்று பிடிக்க வரங்கள் 690
மாறி மொழிகள் பேசிடும் பேரை
மண்டை யிடியால் வதைக்க வரங்கள்
பேறு மாறி இருக்க வரங்கள்
பெண்டு களோடு பின்பற்ற வரங்கள்
சின்ன யியக்கி அம்மா வெனவே
திடமுடன் வந்து தொழுதுடு மன்பர்
தன்னுட பிணியைத் திருநீற் றாலே
தானே நீக்கி விடவே வரங்கள்
குறும்புகள் பேசிக்கு மண்டை யிட்டோரை
கொன்று களமாக் கிடவும் வரங்கள் 695
சறுக்கா தோலைத் தோடு மணிந்து
சங்கையால் வலது கையது தனிலே

(676 — 688) பளபளபள — ஒலிக்குறிப்புச் சொல். பாலை பழித்த மொழியாள் — பாலினும் இனிமையாக மொழி பேசுபவள். சின்ன இயக்கி. மஞ்சணை — சிறு தெய்வங்களின் உடம்பில் பூசப்படும் எண்ணெய்க் குங்குமம். மேலாங்கோடு. குமரி மாவட்டத்தில் இயக்கி உறையும் ஓர் ஊர். சதிர் — அழகு. பத்தி — பற்றி தெருட்ட — அச்சமூட்ட. ஈடேற்ற — நற்கதி அடையச் செய்ய. சறுக்காது — வழுவாது. உணத்தி — காய வைத்து உலர்த்தி. சூல் — கருப்பம். மறுக்கள் — தீமைகள்.

1. உணத்த

மாவுங் கொடியு மெடுத்துடன் வந்து
மலுங்கு மடியார் துயரத்தை நீக்கு
காவுக் குயில்மொழி மேலாங் கோட்டாள்
காரிகை கொக்கோட் டியக்கி யெனவே

### (இசக்கி தனக்குத் துணை வேண்டல்)

ஈச னுரைத்திட இயக்கி யம்மையும்
இறைத்து அடிபணிந் தேதுரை 'சொல்வாள்
பாசமாய் எங்களுக் குற்ற துணையாய்
பண்புரைப் போரை படைத்தருளு மென்றார் 700

### (இசக்கி சேவகரை ஈசுவரரிடம் மீட்டுக் கேட்டல்)

வேறு

செப்பமுடன் வரங்கள்தந்தீர் சிவன்முதலே எங்களுக்கு
ஒப்பமுள்ள வினையாளாய் ஒன்னார்க ளிடத்தனுப்ப
பீடுடனே சேவகரைப் பிறவிசெய்து தாருமையா
காடுற்றையுங் கரித்தோலைக் கலிங்கமெனப் போர்த்தவரே
என்றியக்கி யம்மைசொல்ல ஈஸ்பரனார் நன்றெனவே 705
அண்டர்களைத் தானழைத்து ஆதரவா யேதுரைப்பார்

### (ஈசனார் ஆணையும் வேள்வியில் சேவகர் தோற்றமும்)

முன்வளர்த்த வேள்வியிலே முளரிதனை மூட்டுமென்றார்
நன்றியுடன் வேள்விதனை நடத்துமெனத் தெய்வவர்கள்
விந்தையுட னேவளர்க்க விமலருட அருளாலே
சந்தமுட னுருவாகித் தான்வளர்ந்து முற்றுபெற 710
வேள்விக்குள் ளேதான்கிடந்து விழியெறிந்து திடுதிடெனத் யறிந்து

(689—700) மாறி மொழிகள் — முறையற்ற பேச்சுகள். மண்டையிடி — தலைவலி. பேறு — வரம். குறும்புகள் பேசு — குறும்புகளைப் பேசுகின்றவர். ஏதுரை — என்ன பதில்.

(701—706) செப்பம் — திருப்தி; மனநிறைவு. சிவன் முதலே — மும்மூர்த்திகளில் (சிவன், பிரம்மா, விஷ்ணு) முதல்வனானவனே. ஒப்பமுள்ள — தகுதிவாய்ந்த, தனித் தன்மையுள்ள. வினையாளன் — ஏவலாளன். ஒன்னார் — பகைவர், பீடு — வலிமை, பெருமை. சேவகர் — ஏவலர். கரித்தோல் — யானைத்தோல்; கலிங்கம் — ஆடை. போர்த்த வர் — அணிந்தவர். ஈஸ்பரனார் — ஈசுபரர் — சிவபிரான். அண்டர் — தேவர். ஆதரவாய் — பரிவுடன்.

தாழ்வில்லாக் குருதியென்னச் சரீரமெல்லாம் மினுமினுக்க
இரத்தவர்ண மந்திரமூர்த்தி இரண்டுவிழி தானெறிய
அறுத்தசா முண்டிமூர்த்தி அதிஉரத்த மூர்த்தியும்
கலிபேசும் மூர்த்தியுடன் காளிசா முண்டிமூர்த்தி 715
வலிவுடைய மூர்த்திகளும் வளர்வேள்விக் குள்ளிருந்து

## (சேவகர் வரம் வேண்டுதல்)

சகடபந்தங் கையிலேந்தி சல்லடமும் கச்சைகட்டி
விகடமுடன் ஆடுவதை விண்ணோர்க ளரறகுரைத்தார்
உரைத்திடவே அரன்மகிழ்ந்து உடனேவந்து மூர்த்திகளைக்
கரையேறி வாருமெனக் கறைகண்டரொ டுரைக்கலுற்றார் 720
நாக்குவெட்டிப் பெலிகொடுத்தால் நாயகரே பரமசிவா
தாக்கலுடன் வெளிவருவோம் சறுக்காம லெனவுரைக்க

## (ஈசனார் விடையும் பலி தந்த முறையும்)

அந்திவாணன் விடைகொடுக்க அண்டர்மகிழ்ந் தேநடந்து
சந்தமுடன் முப்படைப்பு தானியற்றி அதன்மேலே
பொரியுடனே பூவுமிட்டு பொங்கமுட னலங்கரித்து 725
தரியலர்போல் வந்தசெந்நீர் சரீரமுடை மூர்த்திகட்டு
தலைவாழை யிலைபரத்தி சங்கையுடன் நாக்கறுத்து
இரத்தமதைக் கண்டபோது இசக்கியம்மை தான்மகிழ்ந்து
உரத்தவரைக் கூப்பிடவே உடன் வேள்வி விட்டிடவே

(707 — 716) முன்னவளர்த்த வேள்வி — முன்னர் தொடங்கிய யாகம். முளரி — தீ விந்தை — அழகுடன். விமலர் — பரிசுத்தமான தன்மை பொருந்திய சிவபெருமான் சந்தமுடன் — அழகுடன் (வேள்வியில் உயர்ந்து எழும் தீயாக). முற்றுப்பெற — நிறைவு அடைய வேள்விக்குள்ளே — அக்கினிக் குண்டத்திற்குள்ளே; விழியெறிந்து — கண்சிவந்து, திடுதிடென — குதித்து ஆரவாரம் செய்தல். தாழ்வில்லாக்குருதி — கெட்டுப்போகாத உதிரம், சரீரம் — உடம்பு. மினுமினுக்க — ஒளிவிட, இரத்தவர்ண மந்திர மூர்த்தி — இரத்தம் போன்ற நிறத்தையுடைய சிறுதெய்வம். அறுத்த சாமூண்டி — எதையும் இல்லாமற் செய்யும் சக்தி; நீள நாக்கு, நீள் மயிர், நீண்ட மூக்கு, வளைந்த கோரைப்பற்கள், தலைமாலை, மாமிசம் நிறைந்த கபாலம் சூலம் போன்றவற்றுடன் காட்சி தரும் சக்தியின் அம்சம். அதி உரத்த மூர்த்தி — உருத்திரன். கலி பேசும் மூர்த்தி — தீமையையே பேசும் சிறு தெய்வம். காளி — தாருகனை அழித்தவள்; கரிய நிறம் உடைய ஓர் பெண் தெய்வம். வலிவுடைய மூர்த்திகள் — மற்றும் பலம் பொருந்திய சிறுதெய்வங்கள். வளர் வேள்வி — நடைபெற்றுக்கொண்டிருக்கும் யாகம். (வினைத்தொகை).

(717 — 722) சகட பந்தம் — தீப்பந்தம். சல்லடம் — இடுப்பிலிருந்து அடித்தொடைவரை அணியும் காற்சட்டை. கச்சை — கவசம். விகடமுடன் — அச்சம் தரும்படியாக. விண்ணோர்கள் — தேவர்கள், அரர் — சிவன். மூர்த்திகள் — துடியான சிறு தெய்வங்கள். கரையேறி வாரும் — தீக்குண்டத்தை விட்டு வெளியே வாருங்கள். கறைகண்டர் — கழுத்தில் நீலநிறத்தைப் பெற்ற நீலகண்டன் என்ற பெயரை உடைய சிவபிரான், நாக்கு அறுத்து — மனித உறுப்புக்களில் ஒன்றாகிய நாக்கினை அறுத்து. பெலி — பலி, தெய்வத்திற்கு அளிக்கும் உணவு. நாயகர் — பூத கணங்களின் தலைவர். பரமசிவா — சிவபெருமானே. தாக்கலுடன் — பாய்ந்து மோதிக்கொண்டு. சறுக்காமல் — நிச்சியமாய்.

(இசக்கி ஈசுவரன் அருகே வந்து ஆசி பெறுதல்)

பந்தமுட னிசக்கியம்மை பாங்ரிலே வந்தபோது 730
நம்பனிடத் தேபணிந்து நல்வரங்க ளும்வேண்டி
மேலாங்கோட் டிசக்கியுடன் மெல்லிஅந் திரயியக்கி
கோலாட்டஞ் செய்யுமந்த கொக்கோட்டு இயக்கியுடன்
சின்னஇசக் கியுடனே சேர்ந்திவர்கள் காட்டில்நிற்க
முன்னேதென் காசிசென்ற மூவர்கதை யுரைக்கலுற்றேன் 735
சங்கையா யரனார்சொன்ன சரிதையைக் கேட்டபோது
இங்கிதம் மிகவுண்டாகி எழில்மறிக் காரநீலி
பங்குறவுரை காத்தோனும் பரநரிக் கழுக்காரனும்
விந்தைதென் காசிசென்ற விபரத்தை விளம்புவேனே

(சின்ன இசக்கி தென்காசி செல்லும் கதை)

(பாண்டி நாட்டு வரலாறு)

வேறு

வையகந் தன்னிலே பாண்டியெனும் நகர்தன்னை
வரதகுண மன்னனாண்டங் கிருக்கிற நாளில் 740
மையெழும்பி மதியொன்றுக்குள் மூன்று தப்பாது
மாரி பொழிந்து செழித்து முப்போகம் விளைய
ஆறிலொரு கடமை கொண்டு தர்மங் குன்றாது
அண்ணல் அரசுபுரியும் நாட்டெல்லை யினுள்ளே
மாறாமல் முப்பத்து ரண்டறங் குன்றாதிருக்கும்
மண்டல மென்னும் தென்காசியில் வாழ்நரார் தம்மில்

(723 — 729) அந்திவாணன் — மாலையில் காணும் செந்நிறம் போன்ற நிறத்தைவுடைய சிவபிரான். விடை கொடுக்க — உத்தரவு வழங்க. முப்படைப்பு — மூன்று பிண்டங்கள். இயற்றி — உண்டாக்கி. பொங்கமுடன் — ஆர்வத்துடன். தரியலர் — பகைவர்; செந்நீர் சரீரமுடைய மூர்த்தி — இரத்தப் பிண்டமாய் — இரத்தமும் சதையுமாக அமைந்த உடலமைப்பு கொண்ட வுருவம்; தலை வாழையிலை — நுனிப்பகுதி யிருக்குமாறு நறுக்கப் பட்ட இலை. பரத்தி — பரப்பி, சங்கையுடன் — அளவுடன். உரத்து — மிகுந்த ஒலியோடு.

(730 — 739) பந்தமுடன் — பற்றுதலுடன். பாங்கர் — அருகே. நம்பன் — கடவுள், சிவன். மேலாங்கோட்டு இசக்கி — மேலாங்கோடு என்னுமிடத்தில் கோயில் கொண்டவள்; சின்னயிசக்கியின் தாய். அந்தரயிசக்கி, கொக்கோட்டியக்கி, சின்னயியக்கி — மேலாங்கோட்டு இயக்கியின் பரிவார இயக்கியர். தென்காசி — பொதிகை என்னும் குற்றால மலைக்கு அடுத்துள்ள ஒரு சிவத்தலம், சங்கையாய் — சிறப்பாய். சரிதை — வரலாறு, இங்கிதம் — மனத்திருப்தி. மறிக்காரநீலி — ஆட்டைப்போன்ற உடலமைப்பு கொண்ட நீலி பங்குற — சார்பாய். நீலியின் சார்பாய் விளங்கும் பரநரி கழுக்காரன் — இசக்கி பரிவாரத்தில் ஒன்று;

(744 — 749) வடுகர் — தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டவர் வதுகை — திருமணம். சுடரெனத் தேகம் — ஒளிபொருந்திய தேகம். துலங்கவே — விளங்கவே; பெண் கொண்டாலென்ன — திருமணம் செய்தால் துன்பம் வரும் என்று; போதம் — அறவுரை, நாயுடு — வடுக நாயக்கச் சாதியாரின் குலப்பெயர், கட்டியவள் — மாங்கலியம் கட்டிக் கொண்டவள், மனைவி.

### (கிருஷ்ணன் லக்ஷ்மியை மணத்தல்)

வடுகர் குலத்தி லுதித்துக் கிருட்டிண னென்ன
வாழ்ந்து பருவமடைந்தும் வதுவை செய்யாது
சுடரெனத் தேகம் துலங்கவே கிருட்டிணனென்போன்
துன்பம் பலவரும் பெண்கொண்டா லென்ன விருக்க 745
தந்தை மகனுக்குப் பற்பல போத முரைத்து
தாயுடன் கூடப்பிறந்த அம்மான் மகளிரின்
பண்புடை லக்ஷ்மி யென்பவளை மணஞ்செய்து
பன்னிரு மாதமதாகச் சுகமா யிருக்க
கிருட்டிணன் நாயுடுவின் தந்தைதாயு மிறக்க
கட்டியவளான லஷ்மி யோடே இனிதாய்
இன்ன லொன்றின்றி நாலைந்து வருடமதாக

### (லக்ஷ்மி குழந்தையின்றி வருந்துதலும் ஈசனார் குழந்தைவரம் நல்குதலும்)

இன்ப முற்றும் பிள்ளையின்றி வருத்தத்துடனே
அன்னையிலு மெண்மடங்குடை லக்ஷ்மி யோடே
ஆலோசனை செய்து கிட்டிண நாயுடு வென்போன் 750
அதிதிகட் கன்னம் தவறாதளித்து வரவே
அரனார் மிகிழ்ந்து அவர்களுக்குச் சிசு ஈய
மதியுடை லஷ்மி ஈரைந்து மாதமுஞ் சென்று
மகிழ்ச்சியுட னொரு பாலகன் றன்னையு மீன்றாள்

### (லக்ஷ்மி பெண் குழந்தை வேண்டுதல்)

ஈன்றபின்னீ ராண்டுசென்றோர் மகவையும் பெற்று
இன்பமுடனே பெண்வேண்டுமெனவே லக்ஷமி
ஆண்டவன்ற் னைத்துதித்து வருகிற வேளை
ஆயிழை லக்ஷமிதானுமோர் பெண்பிள்ளை யீன்றாள்

### (குழந்தைக்குப் பொன்னிறத்தாள் எனப் பெயரிட்டு வளர்த்து வரல்)

பெற்ற மகவுக்குப் பொன்னிறத்தா ளென்ற நாமம்
பெருமையுட னிட்டு காத்து வருகிற நாளில் 755
பற்பல வித்தையுங் கற்றுத் தெளியும் பருவம்
பைந்தொடி பொன்னிறம் புஷ்பவதி யாகிடவே

(740 — 743) பாண்டியெனும் நகர் — மதுரை நகர்; வரதகுண மன்னன் — வரகுண பாண்டியன். மதுரை மன்னன், மை — கருமேகம். எழும்பி — திரண்டு. மதியொன்றுக்குள் — மாதம் ஒன்றுக்குள். மூன்று தப்பாது — மழை மூன்று தவறாது. முப்போகம் — மூன்று அறுவடை (ஓர் ஆண்டிற்கு மூன்று முறை செய்யும் அறுவடை). ஆறிலொரு கடமை — அரசுக்கு வரியாய்ச் செலுத்த வேண்டிய விளைபொருளில் ஆறில் ஒரு பங்கு அண்ணல் — அரசன். முப்பத்திரண்டறங்கள் — முப்பத்திரண்டு வகையான தருமங்கள் மண்டலம் — பகுதி.

### (பொன்னிறத்தாளுக்கு மணம் செய்வித்தல்)

தந்தையுந் தாயும் மகிழ்ந்து தன்சொந்த மருமகன்
தரியலர் களரியான் ரணசூ ரனுக்கு
எங்கெங்கும் கீர்த்தியுடன் மணப்பேரிகை சாற்றி
எழிலுடைப் பெண்ணை வதுவைசெய்து கொடுத்தாரே
கொடுத்து இனத்தோர்கள் சந்தோஷ மாகயிருக்க

### (தவத்தரிடம் பொன்னிறத்தாள் குழந்தை வரம் வேண்டுதல்)

கோதையு மீராறு ஆண்டதாய்ப் பிள்ளையில்லாமல்
திடுக்கிட்டு நெஞ்சங்கலங்கி யிருக்கிற நாளில்
சிவன்செய லாலொரு தெய்வ வழிபாடுடைய 760
தவத்தர் வரவும் ரணசூரன் பொன்னிறத்தாளும்
சந்ததி யில்லாத சங்கிடமான துரைக்க
தவத்தர் மகிழ்ந்துங்களுக்குப் பிள்ளை வேண்டுமானால்

### (தவத்தர் கூறியவழி)

சதிருடன் வாலியான் குன்றின் வழகிழக்காக
இருக்குஞ்சுனையில் குளித்துக் கௌரியின் நோன்பை
இங்கிதமாக இருவருஞ் செய்து முடித்தால்
உருக்கமுடனே சிவனா ருருள்கொண்டு பிள்ளை
உற்பவிக்கு மென்றுசொல்லித் தவத்தரும் போனார்

### (இரணசூரன் மனைவியுடன் நீராடச் செல்லுதல்)

மகத்துவமான முனிவர் இருஷிகள் மற்றும்
மாதவத்தோர் களும்வந்து குளித்து மகிழ்ந்து 765
போன பொழுதுரண சூரன்றன் மனையோடே
புரட்டாசி மாதந்துடங்கியே நோன்பி லிருந்தார்
கானகந் தன்னிலிவர்க ளிருக்கிற நாளில்
கயத்தா றென்னும்நகர் தன்னையும் நீதிகுன்றாது
வடுகர்குலத் திலுதித்த வெங்கல வன்றானும்
வாய்மையுட னரசாண்டு இருக்கிற வேளை

(750 — 758) அதிதி — பற்றற்றவர். அன்னம் — உணவு; சிசு — குழந்தை; ஈரைந்து மாதம் — பத்துமாதம்; பாலகன் — ஆண் மகவு; பின்னீராண்டு — இரண்டு ஆண்டு இடைவெளி. மகவு — குழந்தை; பைந்தொடி — பொன் வளையல். புஷ்பவதி — பூப்பெய்திய பருவப்பெண்; களரியான — பகைவர்களைப் போரில் வெல்பவன். பேரிகை — முரசு.

(759 — 764) ஈராறு ஆண்டாய் — பன்னிரு வருடமாக. ஒரு மாமாங்கமாக. நெஞ்சங் கலங்கி — மனங்கலங்கி. தவத்தர் — தெய்வ வழிபாடுடையவர். சந்ததி — வாரிசு. சதிருடன் — விரைவாக. சுனை — மலைப்பகுதியில் காணும் நீர்நிலை. கௌரியின் நோன்பு — பார்வதியை நினைத்து செய்யப்படும் விரதம். இங்கிதமாக — கணவன் மனைவி கருத்தொருமையுடன். உற்பவிக்கும் — கருத்தரிக்கும்;

படுக்கையில் காம்பரிந்த மலர்தன்னை யும்தூவி
பார்த்திவன் வெங்கலவன் றானும்நித் திரைசெய்ய
நித்திரை யாக இருக்கிற வேளைதனிலே
நிருபன் கனாக்கண்டு மந்திரிமார்க் குரைப்பாராம் 770

### (வெங்கலவன் கனவு உரைத்தல்)

பற்றார்கள் கூடிப் படையுடன் வந்துஎதிர்க்க
பரியுடன் நானும் பொருதுஎன் சேனையுடனே
தோற்றுடன் தெஷ்ணமா மலைமீதி னில்சென்று

சொகுசுடனே மூன்று கோட்டையு மிட்டுஇருக்க
மாற்றத்துடனோ ரிருள்வந்து சூழவு மெந்தன்
மனைவி யுடன்மூன்று மக்களுஞ் சுற்றமுமற்று
விழவே கனவு கண்டேன் மந்திரரே

### (மன்னன் தீக்கனவு கண்டு கலங்குதல்)

விஸ்தார மாகவே மற்றோர்மொழி யுரைப்பாராய்
சலமே வருமிந்த சொப்பனத்தால் மன்னர்யென்ன
சஞ்சலமாக இறைவனி ருக்கிற நாளில் 775
மருவலர்தன் படைவந்து வளையப் பொருது
மன்னவன் தோற்றும் மனைவிமக்க ளையுங்கட்டி

### (மன்னன் கடையநகர் விட்டுத் தெட்சணமலை சேர்தல்)

அருள்பெறு கின்ற கடையநகரது மிட்டு
ஆனதென்காசிக்குத் தெற்குள்ள தெக்ஷ்ணக் குன்றில்
பொன்மணி யென்னும் மனைவியுடனே யிருக்க
புகழுடன் தோழிமார்தன்னுடன் பொன்மணி தானும்
அன்னமென வேநடந்து பந்து விளையாடி
ஆயிழை மார்கள் யிருக்க வந்து கேடு சொல்வேன்

(765 — 770) இருஷி — முனிவர்; மாதவத்தோர் — சான்றோர்கள்: நீதி குன்றாது — நியாயம் வழுவாது; வடுகர் — தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டவர்; காம்பரிந்த மலர்கள் — மலரின் காம்பு நீக்கப்பட்ட மலர்கள்; (காம்பு இருந்தால் உறங்கும் போது உறுத்தும் என்பதால் காம்பு நீக்கப்பட்டது) நித்திரை — உறக்கம்; நிருபன் — அரசன்.

(771 — 772) பற்றார் — பகைவர்; பரி — குதிரை. பொருது — போர் செய்து; சேனை. படை. தெக்ஷ்ணமாமலை — தென்மலை என்னும் பொதிகை மலை;

(773 — 774) சொகுசு — வசதி. கோட்டை — பாதுகாப்பு அரண்; மதிலரண். விழவே — இறந்துபடவே.

(774 — 776) விஸ்தாரமாக — விரிவாக; சலமே — வீணாக; நடுக்கத்தோடு. சொப்பனம் — கனவு சஞ்சலமாக — நிலையின்மை. இறைவன் — அரசன். மருவலர் — பகைவர். வளையப் பொருது — வளைத்துப் போரிடும் போது.

### (ஆயர்கள் பசுக்களுடன் தெட்சணமலை நோக்கி வரல்)

கொங்கு தேசத்தில் மழையின்றி ஆயர்கள் கூடி
    கேர்டானு கோடியாம் கோக்களைப் பற்றியே தெற்கே 780

### (பகைவர் வருவதாக பொன்மணி கூறுதல்)

சங்கையுடன் காணும் தெக்ஷ்ண மாமலைக்கே
    சதிருடன் வாறதைக் கண்டு பொன்மணி யவளும்
தெக்ஷ்ண மாமலை மீதினில் நின்றபடியே
    தெரிவை வரும் விதிதன்னை யறியாது மன்னன்
பக்கத்தில் வந்து வணங்கி யரசே யிப்போது
    படையுடன் வாரார் பகைவரென்றே யுரைத்தாளே

### (மன்னன் வாவியில் குளிக்க ஏகல்)

**விருத்தம்**

உரைத்திட மன்னன் கேட்டு உத்தர திசையைப் பார்க்க
நரைத்தவெண் தூசைக் கண்டு நண்பிலர் வாரா னென்ன 785
அரைத்தனந் தன்னை வீட்டில் துணையுடன் மகவுங் கூட்டி
வரைத்தடங் கடக்கும் நீண்ட வாவியற் குளிக்கப் போரார்

### (வெங்கலவன் குடும்பத்துடன் சுனையில் மூழ்கி உயிர் விடுதல்)

**வேறு**

மாடுபற்றி வாறசேதி மன்னவ னறியாது
    மாற்றான்படை வருகு திங்கே
நாடுவிட்டு ஓட்டவென்றால் நம்மிடத்தில் வீரரில்லை
    நாயகியுடன்சிசுவும் நாமும்
பாரதனை யாள்வதும் திறனிலை யெனநினைந்து
    பாரில்தனக் கேதுமொழி சொல்வான் 790
நாரியே சுனைநீராடி நாள்மிகுதி யானதினால்
    நாமள்சுனை யாடிவரு வோமா
என்னவே மனைவிமக்கள் எல்லோருஞ் சென்றிடவே
    ஏந்தல்மனை மக்களையுந் தள்ளிடு
வன்னஉடை வாளெடுத்து வடதிசையிற் சென்றிடவே
    வந்ததான திரளெனவே கண்டு

(777 — 787) தெக்ஷ்ணக்குன்று — தெற்குமலை எனப்படும் பொதிகை. கொங்கு தேசம் — கோயம்புத்தூர், சேலம் மாவட்டங்களுடன் மைசூர் மாநிலத்தின் தென் பகுதியில் ஒரு பகுதியும் இணைந்து அமைந்த பரப்பு. ஆயர்கள் — இடையர். கோ — பசு. சங்கை — ஐயம். தெரிவை — இளம்பெண். உத்தரதிசை — வடதிசை. நரைத்த வெண்தூசு — வெண்மையான பஞ்சு போன்ற தூசியைக் கிளப்பிக் கொண்டு வரும் முன்னணிப் படை. நண்பிலர் — பகைவர். வாவி — நீர்நிலை.

மன்னவன் விசாரமுற்று மனங்கலங்கி வீடுவந்து
மாநிதிகள் தன்னைமண்ணில் தாக்கிடு
இன்னிலத்தில்யான் புதைத்த சொன்னம் உலகானதிலே
எவருங்காணக் கூடாதெனச் சொல்லிடு 795
சாபமிட்டு வெங்கலவன் தாரமும் மக்களுஞ் செத்த
தண்சுனையிற் சாடியுயிர் விட்டான்
தாபந்தமாய்ப் பெந்துக்களுஞ் சாடிவுயிர் நீத்தார்கள்
தனம்புதைத்து வைத்தயிடந் தன்னில்

## (புதைத்த சொர்ணம் எடுக்கத் துணிந்தோர்)

முன்னம்வேள்வி யிற்பிறந்து மொய்குழல்பொன் னிறத்தாளை
முழுப்பூசை கொள்ளவந்தோர் தாமும்
நன்னயமாய்க் காவல்செய்து நளின முடனிருக்க
நடந்தகதை மேலுரைக்கக் கேளும்
தென்காசி நன்நகரில் தீவளர்ப்பவர் குலத்தில்
செனித்தராம சுவாமிஐய னென்போன் 800
தன்னிகரில் லாதுபல சாஸ்திரமுங் கறறுணர்ந்து
தனங்கள்பல உண்டுலகி லென்ன
எண்ணியோர் பிராமணனும் எட்டுப்புலை யன்மாரும்
ஏரின்வாழ்நர் ஆறுபே ருடனே
நிண்ணயமாய் ஆறுபேர் துலுக்கருடன் தானுமாக
நேர்ந்தஇரு பத்திரண்டு பேரும்
மாரணமை யுண்டுபண்ணி மகிழ்ச்சியுட னேநடந்து
மையோட்டந் தானறிந் தெல்லோரும்

(788 — 797) மாடு — பசுமாடுகள். சேதி — செய்தி. தகவல். மாற்றான்படை — எதிரிப் படை. ஓட்டவென்றால் — புறமுதுகிட்டு ஓடச்செய்ய. சிசு — குழந்தை. நாயகி — மனைவி. நாரி — பெண். சுனை — மலையில் காணும் நீர்நிலை. நாமன் — நாம். ஏந்தல் — மன்னன். விசாரம் — கவலை. மாநிதி — செல்வம். மண்ணில் தாக்கிடு — மண்ணில் புதைக்க. சொன்மை — சொர்ணம்; தங்கம். வெங்கலவன் தாரம் — வெங்கலவனின் மனைவி; தண்சுனை — குளிர்ந்த நீர்நிலை. சாபமிட்டு — மந்திரக்கட்டிட்டு. சாடி — குதித்து. தாபந்தமாய் — சங்கடமாய் தனம் — செல்வம்.

(798 — 807) முன்னம் வேள்வி — முன்னர் செய்த யாகம். மொய்குழல் — வண்டு மொய்க்கும் மணமுள்ள கூந்தல். இங்குப் பெண்ணுக்கு ஆகி வந்தது. முழுப்பூசை — பலி கொள்ள. உயிர்வதை செய்ய. தீ வளர்ப்பவர் குலம் — வேதியர் குலம். செனித்த — பிறந்த. பிராமணன் — வேதியன். எட்டுப்புலையன் — எட்டு நாவிதர்கள். ஏரின் வாழ்நர் ஆறு பேர் — ஏர்த்தொழில் செய்வோர் அறுவர்; நிண்ணயமாய் — தீர்க்கமாய். துணிகரச் செயல் செய்யக்கூடிய ஆறுபேர் துலுக்கர் — ஆறு துருக்கர். மாரணமை — அஷ்ட கருமத்துள் ஒருவனை மந்திரத்தால் இறக்கச் செய்யும் வித்தைக்கு உதவும் மை. மையோட்டம் — உள்ளங்கையில் மைதடவிப் புதைபொருள் முதலியவற்றைக் கண்டு பிடிக்கும் வித்தை. தோரணமலை — குரங்குகள் நிறைந்த மலை; பொதிகை மலை. சொர்ணம் — தங்கம். சூலாடு — கருவுற்றிருக்கும் ஆடு. சூலுப்பன்றி — கருவுற்றிருக்கும் பன்றி. தலைச்சூல் ஆயிழை — முதன் முதற் கருவுற்றிருக்கும் பெண்; ஆர்கொடு வருவர் — யார் கொண்டு வருவார்; காவுதொரும் — காடுதொரும். கௌரி நோன்பு — ஐப்பசி திங்களில் கௌரி என்னும் பார்வதியை நோக்கிப் புரியும் நோன்பு.

### (சொர்ணம் எடுக்கப் பூசைப் பொருள் கூறல்)

தோரண மலையிற்சென்று சொர்ணமதைத் தானெடுக்க
சூலாடு சூலுப்பன்றி வேண்டும் 805
ஆவலுடன் தலைச் சூலாயிளையுந் தான்வேண்டும்
ஆர்கொடு வருவரெண யெண்ணி
காவுதொறுஞ் சுற்றியிவர் கஷ்ட்டத்துட னேயிருக்க
கௌரியெனும் நோன்புசெய் திருந்த

### (பொன்னிறத்தாள் கனவு)

பொன்னிறத்தம் மன்மகர மாசத்தில்கெற்பந் தோன்றி
புகழுடன் வளர்ந்திந்து ஆறாக
வன்னமுடன் நித்திரையில் வாணுதல் கனவுகண்டு
வழுத்துவாள்தன் மன்னவனா ரோடே
மன்னவனே பாதகர் பொருளெடுக்க வேண்டுமென்று
மங்கையெனைத் தான்பிடுத்துக் கொண்டு 810
நன்னயமாய் வெட்டிடவே நான்கனவு கண்டேனென
நாயகன் மறுமொழி யுரைப்பார்

### (பொன்னிறத்தாள் கணவன் மறுமொழி கூறல்)

இன்னிலின்றிப் பொன்னெடுக்க ஏந்திழையே கண்டதுண்டால்
எடுப்பவரு முண்டோயிப் புவியில்
திண்ணமுடன் கண்டகனா சேயிழையே பற்றாரென
தேற்றியவர் வாழுகின்ற நாளில்

### (பொன்னிறத்தாள் மனக்கலக்கம் தீர்ந்து மகிழ்வுடன் இருத்தல்)

மங்கை பொன்னிறத்தாளுக்கு மாசமொன்ப தாகிடவே
மகிழ்ச்சியுடன் யாவரு மிருக்க
சங்கையுடன் கன்னிமாச மானதில் தோழியுடனே
சகலமணி யுமணிந்து கூடி 815
வாலியான் பாறைக்கடுத்த வடகிழக்குள்ள சுனையில்
வந்துநீ ராடியிருக்கும் வேளை

(808 — 815) மகர மாசம் — தைமாதம். இந்து ஆறாக — மதி ஆறாக; ஆறுதிங்கள். நித்திரை — உறக்கம். வாணுதல் — ஒளிபொருந்திய நெற்றியை உடைய பெண். வழுத்துவாள் — துதிப்பாள். மன்னவனே — கணவனே. பாதகர் — பெரும் பாவம் செய்வோர். பொருள் — புதையல். கன்னிமாசம் — புரட்டாசி மாதம்.

### (பொன்னிறத்தாள் தன் அறுந்துபோன மாலையைத் தேடல்)

மாலைப்பொழு தாகிடவே மங்கைபொன் னிறத்தவளின்
　　மாலையொன்று அற்றுவிட வேதான்
தோழியுடன் தானுமாகத் தேடியுங்காணாது நிற்க
　　தோகைக்கு விதியடுத்த தாலே

### (பொன்னிறத்தாள் கலக்கமுறல்)

நாழிகையாகு தெனவே நங்கையர்கள் தான் நடந்தார்
　　நாயகிபொன் னிறத்தவள் தானும்
குழிபோட்டுக் குழிபோட்டுக் கோதையரும் முத்தெடுக்கக்
　　குரைகடல்சென் றொழித்தான்மார்த் தாண்டன் 820
வழிதெரியா திருள்மூட வனிதையரும் முத்தெடுத்து
　　வடிவுடன் கரையில்வந்து நின்றாள்

**விருத்தம்**

நின்றபொன் னிறத்தாள் தானும் நிலையில்லாக் கொடிபோ லாகி
கன்றியே கடத்தைத் தேய்த்துக் கட்டுடன் மறுதூ சிட்டு
மன்றினில் நடந்து வார மார்க்கத்தில் ஆலின் கீழே
நின்றதோர் கள்வர் கண்டு நேசமா யருகில் வந்தார் 825

### (பொன்னிறத்தாளைக் கள்வர் வழிமறித்தல்)

**வேறு**

வந்துநின்று ஆனந்தமாய் வழியில்நின் றோர்தாமும்
　　வனிதையரே எந்தவூரு வந்தவழி சொல்லு
என்றிடவே பொன்னிறத்தாள் செய்தியெல்லாம் சொல்ல
　　எண்ணமிட்டுத் தேடிநின்றோர் திண்ணமுடன் கண்டு
நன்றுநன்று வெகுநாளாய் நாட்டிலெங்குந் தேடி
　　நாடிநின்ற பொருளதுவும் தேடிடாது கண்டோம்

(816 — 835) விதியடுத்ததாலே — ஊழ்வினை காரணமாக. இறைநியதி (அல்) கால நியதி வந்ததாலே

நாழிகை — நேரம். குழிபோட்டு குழிபோட்டு — முக்குளித்துமுக்குளித்து — மூழ்கி மூழ்கி. குரை கடல் — சத்தம் இடும் கடல்; அலைகடல். மார்த்தாண்டன் — சூரியன்; வனிதை — பெண்; நிலையில்லாக்கொடி — காற்றில் அலையு கொடிபோல உடல் குளிரால் நடுங்க. கன்றியே — வருந்தியே. கடம் — கடகம். கைவளை அல்லது கங்கணம்; மாறுதூசு இட்டு — வேறு உடுப்பு உடுத்தி. மன்றினில் நடந்து வார மார்க்கத்தில் — சுனைக்கு வரும் பாதையில் நடந்து வரும் போது. சூஷமுடை — தந்திரமுடைய. தலை மலையார் ஐயன் கோயில் — ஐயனார் அல்லது சாஸ்தா கோயில். கோதை கலியாணி

### (கள்வர் பொன்னிறத்தாளை அழைத்துச் சென்று பலியிடக் கருதுதல்)

என்றுசந் தோஷமுடனே ஏந்திழையைக் கூட்டி
இடையன்குளம் ஆறுடனே இடிகரையு மிட்டு
வரும்வழியில் புதுக்குடையத் தூரதிலே வாழும்
வன்நெஞ்சன் மங்காவடிக்குச் சாபமிட்டுப் பின்னே 830
மருமமுடன் சூட்டுமலை மணலோடை கடந்து
மங்கையரைத் தான்நடத்தி ஒற்றைப்புளி முட்டில்
சூக்ஷமுடை தலைமலையார் ஐயன்கோயி லருகே
தோகைகலி யாணி அம்மை சந்திக்கும் நேரே
தாக்கலுடன் பீடமிட்டு அக்ஷரமு மெழுதி
சங்கையுடன் பொங்கி வெங்கலவனுக்குப் படைத்து
கெற்பமுற்ற மங்கைதனை வற்புறுத்தி நடத்தி
கிட்டவைத்துப் பிராமணர்கள் நட்புடனே யிருந்து
ஒப்புரவாய் மந்திரத்தை ஓதுகிற போது
ஒக்கவந்தோர் சூல்பன்றி சூலாட்டி னையுமறுத்தார் 835

### (பொன்னிறத்தாள் உயிருக்கு மன்றாடுதல்)

அறுத்திடவே மங்கையவள் ஆக மதுகலங்கி
அண்ணர்களே என்னை யவக்கேடு செய்ய வேண்டாம்
பொறுத்திடுங்கோ வென்றுரைத்தும் பொல்லாதார் வந்து
பிடித்திடவே பொன்னிறத்தாள் பெருங்கோபத்தோடு

### (பொன்னிறத்தாள் சாபமும் மரணமும்)

பாதகரே என்னைக் கொன்றால் பைம்பொன் பெறமாட்டீர்
பாழாவீர் இவ்வனம்வாழ் வேங்கையின் வாய்ப்பட்டு
காதகரே யென்று கலியாணி அம்மைதன்னை
கட்டுட னேதான் தொழுதுநிற்கும் வேளைதன்னில்
மின்னெனத் துலங்குகின்ற பொன்னிறத் தாள்தன்னை
மிடுக்கமுட னோடிய வளங்க மதைப்பிளந்தான் 840
அன்னேரம் வஞ்சகரின் கண்ணிரண்டும் போட்ட
அடுத்துநின்றோர் தாமும்வந்து அங்கமதைப் பிளந்தார்

அம்மை சந்நதி — நீண்ட கூந்தலைப் பெற்ற கலியாணி அம்மை சந்நிதி. தாக்கலுடன் பீடமிட்டு — பலி செய்வதற்கு ஏற்ற வகையில் கல்லால் அமைக்கப்பட்ட உயர் மேடையிட்டு. அக்ஷரம் — மந்திர எழுத்துக்கள். சங்கையுடன் — பக்தியுடன். பொங்கி — பொங்கல் செய்த படைத்து. ஒப்புரவாய் — பரிவுடனே. ஒக்க வந்தோர் — கூடவந்தோர்.

(836 — 841) ஆகமது கலங்கி — மனமது கலங்கி. அவகேடு — பெருந்தீங்கு. பொறுத்திடுங்கோ — காப்பாற்றுங்கள். பொல்லாதார் — கொடியவர். பெருங்கோபத்துடன் — உயிரைப் பாதுகாக்க ஏற்படும் தீவிரமான முயற்சி. பைம்பொன் — தங்கம். பாழாவீர் — வீணாவீர். வனம் வாழ்வேங்கை — இந்தக் கானகத்தில் வாழும் புலி. வாய்பட்டு — புலி கடித்து. அங்கம் — உடம்பு. பிளந்தார் — வெட்டினார்.

### (கள்வர்கள் கண் இருண்டு போதல்)

பிளந்தவர்க ளெல்லோரும் கண்ணிருண்டு விழவே
பெண்கொடியாள் விதோரண மலையில் மேவ
களந்தனிலே உருண்டகள்வர் கடவுள்தனைத் தொழுதும்
கன்னியிட்ட சாபத்தால் கானகம் வாழ்வேங்கை
வந்தவரைப் பிளந்துகொல்ல வனிதைய ரின்பெற்றோர்
வரனுடனே கூடி வையமெங்குந் தேடியோடி
கந்தமுறும் தோரண மலையில் வந்துகண்டு
காரிகையாள் படுகளத்தில் எல்லோரும் பட்டார் 845
அண்ணர் தேடிவந்து அனல் மூட்டிச் சடங்கறுத்து
அந்த இடந்தனிலவரும் ஆயுதத்தால் மாண்டார்

### (பொன்னிறத்தாள் திருக்குற்றால நாதரை வேண்டி நிற்றல்)

திண்ணமுடன் மாண்டபின்பு சேயிழை பொன்னிறமும்
திருக்குற்றால நாதருட திருப்பேரை யோதி
தந்திமுகன் கந்தனையும் விந்தை யுடன்பெற்ற
தற்பரனே யிப்போது அற்புத மாயெனையும்
சந்ததமுந்துதிக் குமன்பர் சங்கடத்தை நீக்கி
தற்காத்து அருள்புரிய சங்கர ரேவரமும்
விந்தையுடன் எனைவதைத்த வம்பர் குலமறுக்க
வீரமுடன் தோழியென் ஏழு பேருமருளி 850
எந்தன்கதை தனைப்படிக்கும் இன்னிலத் தோர்தம்மை
ஈடேற்றும் படிவரமு மீய வேண்டுமென்ன

(842 — 846) பிளந்தவர் — வெட்டியவர். கண்ணிருண்டு — கண்கள் இருள் சூழ. கண் தெரியாமல் போக. பெண்கொடியாளாவி. கொடி போன்ற இடையினை உடைய பெண்ணின் ஆவி. மலையில் மேவ — மலையில் தங்க. கன்னியிட்ட சாபம் — தவப்பெண் ஆகிய பொன்னிறத்தாள். வனிதையரின் பெற்றோர் — பொன்னிறத்தாளின் தாய் தந்தையர். கந்தமுறும் தோரணமலை — ஏலம், கற்பூரம், சாதிக்காய், தக்கோலம் போன்ற நறுமணப்பொருள்கள் விளையும் தோரணமலை. காரிகையாள் படுகளம் — பொன்னிறத்தாள் வெட்டுண்ட இடம். சடங்கறுத்து — சாதிமுறைப்படியுள்ள சட்ட திட்டப்படி காரியங்கள் ஆற்றி. அந்த இடந்தனில் அவரும் — அந்த இடத்தில் சகோதரரும். ஆயுதத்தால் மாண்டார் — ஆயுதத்தால் தன்னை அழித்துக் கொண்டு பொன்னிறத்தாளின் அண்ணனும் இறந்தார்.

(847 — 851) திருக்குற்றால நாதர் — திருக்குற்றாலம் என்ற தலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான். தந்தி முகன் — வினாயகன். கந்தன் — முருகன். தற்பரன் — சிவபெருமான். சந்ததமுந்துதிக்கும் — எப்போதும் துதி செய்யும். சங்கரரே — சிவபெருமானே. விந்தையுடன் — காலவித்தை. வதைத்த — கொன்ற. வம்பர் குலம் — துஷ்டர் குலம். ஈடேற்றும்படி — வணங்குவோர் எண்ணம் நினைத்தபடி பூர்த்தி அடைய.

(குற்றாலநாதர் வேண்டும் வரம் நல்கல்)

அப்படியே குற்றாலர் அரிய வரங்கொடுக்க
அகமகிழ்ந்து பொன்னிறத்தை கொல்லவந்த மூவர்

(பொன்னிறத்தாளைக் கொல்லவந்த மூவர் குற்றால நாதரிடம் தஞ்சம் புகுதல்)

அப்படியே நாம்நினைந்த முறைமுடிந்து தென்ன
முடுகியோர் கடுநடையாய்ச் சிவனிடத்தில் வந்து

(குற்றால நாதர் வரம் தந்து கூறியது)

இறையவரைத் தெண்டனிட்டு இவர்கள்நிற்கும் வேளை
இன்பமுடன் மனமிரங்கி ஏதுசொல் வாராம்
தரைதனிலே நீங்கள்சென்று தரணிமனு வோர்கள்
திரும்பூசை தன்னையுண்டு சஞ்சல மில்லாமல் 855
சிறியோர்கள் வறியோர்கள் செய்த பிழைபொறுத்து
தேசத்துக்கு உபகாரம் செய்திருப் பீர்நீங்கள்
மரியாதை யில்லாத மண்டர்களை முடித்து
மகிட்சையுட னினிதாக பூசையுண் டிருந்து
வாழுமெனச் சிவனுரைக்க வணங்கியிவ ரெல்லாம்
வனமதிலே நின்றதொரு வாதையுடன் வந்து

(வனம் விட்டு வாதை எல்லாம் மதுரை அடைதல்)

நாளும்நாளும் கீர்த்திகொண்ட வடநாடு விட்டு
நலமுடனே மதுரைநகர் தன்னில்வந்து சேர்ந்தார்
சேர்ந்துவளம் பார்த்திருந்தார்கள் தெருத்தோ றுஞ்சென்று 860
திடமுடனே அங்குமிங்கு ஓடிஓடிப் பார்த்து
கூர்ந்துமது ரைப்பதியில பூசையுண்ண வென்று
கொக்கரித்து வீதிதோறுந் குதிபோட்டு நின்றார்

(852 — 858) தெண்டனட்டு — வணங்கி. தரைதனிலே — பூமியிலே. தரணி — பூமி. மனுவோர் — மநுநீதிப்படி நடப்பவர். பூசை — பலிகள். சஞ்சலம் — கவலை. சிறியோர் — வயதில் குறைந்தவர் — பொறுப்பு வரப்பெறாதவர்; வறியோர் — வறுமையின் காரணமாக துன்பப்படுவோர். பிழை பொறுத்து — அறியாமல் செய்யும் குற்றத்தை மன்னித்து. தேசத்துக்கு — நாட்டுக்கு. உபகாரம் — உதவியாக. மரியாதையில்லா மண்டர் — பக்தியில்லாத மூடர்கள். மகிட்சை — மகிழ்ச்சி.

(859 — 865) கீர்த்தி — புகழ். மதுரை — ஓர் ஊர். பாண்டி நாட்டு தலைநகர். எதிர்த்தாரை — எதிர்ப்பவர்களை. எனக்குனக்கென — எனக்கு — உனக்கு — என. எடுக்குது — பங்கிட்டுக் கொள்கிறது. சதியடி — தீ உண்டாக்கும் கருவியால் அடித்தல். மலைபோல் — குன்றுபோல. விழுகுது — குவியிது. சணத்தில் மடிய — உடனே இறந்துபட. அதட்டி அதட்டி — அதிகாரமாக உரத்த குரலில் பணித்தல். முறிக்குது — ஒடித்தல். தரையில் அடித்து — பூமியில் உதைத்து. சடுதியிலே — விரைவிலே. உயிர் வாங்குது — கொல்கிறது.

### (மதுரை நகரில் வாதைகளின் களிப்புறு வலம்)

வேறு

குதித்தார் மதுரை வடக்குத் தெருவில்
    குடமொடு தண்ணீர் எடுத்தவர்க முன்னே
எதிர்த்தா ரைச்சென் றிடுப்பி லடித்து
    எனக்கு னக்கென எடுக்குது பாராய்
சதியடி மண்டை யடியது கொள்ள
    தயங்கி மலைபோல் விழுகுது பாராய்
எதிாத்து வருவார் சணத்தில் மடிய
    இன்னம் ஜனங்க ளுண்டோ வெனவே 865
அறைக்குள் சென்று இருக்கிற பேரை
    அதட்டி யதட்டி முறிக்குது பாராய்
தரையி லடித்துச் சிலசில பேரைச்
    சடுதியி லேஉயிர் வாங்குது பாராய்
அந்திர யிசக்கி யம்மை புகுந்து
    அறையி லிருக்கிற பேரை முறிக்க
சுந்தர மாகிய பெண்டுகள் தம்மை
    சுறுக்குடன் பிள்ளை நோக்கா டதுபோல்
நடுக்க தாகவே தரிப்பு மெடுத்து
    நாக்குக் குழறி விழுகுது பாராய் 870
அடுத்த வீட்டிலே ஒருத்தி பயந்து
    ஆவ லாகிகேட் டவளும் வரவே
வந்தவ ளைத்தான் வயிற்றிலே குத்தி
    வடிவன் செங்கிடாய்க் கார சுவாமி
முந்தவே மந்திர மூர்த்தியு மாக
    முழங்கு கின்றதென் காசி மடத்தில்
ஓட்ட மாகவே ஓடின பேரை
    உடனே புலிபோல் பாய்ந்து முறிக்க
வீட்டைச் சாத்தி இருக்கிற பேரை

***(866—875)*** **அந்தரயிசக்கி**—இசக்கியின் பரிவாரங்களில் ஒன்று. **அறையிலிருக்கிற பேர்**—அச்சத்தின் காரணமாக வீட்டின் உட்பக்கம் உள்ள அறையில் பதுங்கியுள்ளோர். **சுந்தரமாகிய**—அழகிய. **பெண்டுகள்**—பெண்கள். **சுறுக்குடன்**—அதிவிரைவில். **பிள்ளை—நோக்காடது போல்**—குழந்தைகளை தொற்றிக் கொள்ளும் நோய் போல. **நடுக்கதாகவே**—உடம்பு நடுங்கி. **தரிப்பு மெடுத்து**—மனம் அச்சத்தால் நிலை கொள்ளாது. **நாக்குக் குழறி**—வாய் குழறி; பேச்சு வராது. வார்த்தைகள் தடுமாறி. **ஆவலாதி**—சத்தம். **வயிற்றிலே குத்தி**—வயிற்றில் கையாள் குத்துவான். **வடிவன்**—எழில் வடிவம் உடையவன் **செங்கிடாய்க் காரன்**—இசக்கி பரிவாரத்தில் ஒரு தெய்வம். **மந்திர மூர்த்தி**, இசக்கியின் பரிவாரத்தில் ஒன்று. **ஓட்டமாக ஓடினபேர்**—உயிரைக் காப்பாற்றிக் கொள்ள விரைந்து ஓடியவர். **புலிபோல் பாய்ந்து முறிக்க**—புலிபோல வேகமாகப் பாய்ந்து தடுக்க. **வீட்டை சாற்றி**—வீட்டின் கதவை அடைத்து. **இருக்கிற பேர்**—உள்ளே உள்ளவர்கள். **விரைவுடனே உள்ளே புகுந்து**—விரைவாக உள்ளே நுழைந்து. **சாடி**—குதித்து. **வல்லியம்**—வல்லயம்; ஓர் ஈட்டி வகை.

875

விரைவுட னுள்ளே புகுந்தவர் சாடி
சாடியே வல்லயங் கொண்டுமே குத்தி
சந்துகள் பிச்சி யெறியுது பாராய்
ஓடியே ஆச்சி மடத்துள் புகுந்து
உள்ளவரைச் சென்றிழுக்குது பாராய்
தாதி வீட்டிலே சென்று புகுந்து
தாயார் சின்ன இசக்கியென் னம்மை
பாதி மதியணி அரனைத் தொழுது
படியி லுதிரம் கக்க வடித்து
மந்திர மூர்த்தி தந்திர மாக
மனைதோறுஞ் சென்றவர்களைக் குத்த 880
அஞ்சிமாசச் சூலிகள் தங்கள்
அறையில் சீலை நனையுது பாராய்
ஞாலந்தன்னில் மதுரையி லுள்ளோர்
நடுங்கிச் சென்று ஒளித்து யிருக்க
பால்குடிப் பிள்ளைக் கீறென்றழவே
பட்டப் பகலே சிலரை வதைக்க
தெக்குத் தெருவில் சென்று புகுந்து
சேயிழை மேலாங் கோட்டு யியக்கி
பக்குவமாக அங்கே யிருக்கும்
பலபல பேரைக் கொல்லுது பாராய் 885
மேலத் தெருவிலே சென்று புகுந்து
மெல்லி யலார்கள் விரைவி னுடனே
கோலஞ் செய்து அடித்து வைத்து
குணமுடன் கீழத் தெருவிலே வந்தார்
கீழத் தெருவிலே வந்து புகுந்து
கிளிமொழியாள் அந்திர யிசக்கி

(877 — 896) சந்துகள் — உடற் பொருத்துகள். பிச்சி — பிய்த்து. ஆச்சி மடம் — 'ஆச்சி மடம்' என்ற இடம். உள்ளவரை — அங்கே யிருப்பவர்களை. சென்று இழுக்குது — சென்று பற்றி யிழுத்தல். தாதி வீடு — கணிகை வீடு. தாயார் சின்னயிசக்கி — இசக்கியின் பரிவார்த்தில் ஒரு தெய்வம். பாதிமதியணி அரன் — தலையில் சந்திரனைச் சூடிய சிவ பெருமான். உதிரம்கக்க — இரத்த வாந்தி எடுக்கும் படியாக. மந்திரமூர்த்தி — இசக்கியின் பரிவாரத்தில் ஒன்று. தந்திரமாக — சாமர்த்தியமாக. அஞ்சிமாசச் சூலிகள் — ஐந்து மாதக் கர்ப்பிணிகள். அறையில் சீலை நனையுது — கருச்சிதைவு ஏற்பட்டு உள் உறுப்புகள் உதிரத்தால் நனைய. ஞாலந்தன்னில் — உலகத்தில். ஒழித்து இருக்க — உயிருக்காகப் பதுங்கியிருக்க. கீறென்றழ — வீறிட்டு அழ. சேய்யிழை — அழகிய பெண். மேலாங்கோட்டு யிசக்கி — இசக்கி பரிவாரங்களில் ஒன்று. இது மேலாங்கோட்டூர் என்னும் இடத்தில் உள்ள தெய்வம். கிளிமொழியாள் — கிளிபோன்ற மொழியுடையவள். அந்தரஇசக்கி வாளாதொழித்து — வாள் கொண்டு வெட்டி. **தொட்டிலுப்பிள்ளை — தொட்டியில்** உறங்கும் வயதுடைய பிள்ளை. கெட்டியெடுத்து — கட்டி எடுத்து. பழவினை — முன் வினை. செப்பிடுவித்தை — தந்திரவித்தை. படைவீடு — **இராசதானி; தலைநகர். ஆனை —** பட்டத்து யானை. பட்டுப்போச்சு — மடிந்து விட்டது. எண்மர் — எண்பேராயம்; மந்திரிக் குழு.

வாளா தொழித்து யிருக்கிற பேரை
வல்லயங் கொண்டு குத்தி மடித்தார்
தொட்டிலுப் பிள்ளையைக் கெட்டியெடுத்து
துடிக்கத் துடிக்கத் தலையைத் திருக 890
பட்டினி யாகவே் மதுரைப் பதியார்
பழவினை யோவென் றழுதவர் நிற்க
செப்பிடு வித்தை பலபல செய்து
திடமுடன் மதுரை ஊரை முடிக்க
நட்புடன் ஊரார் நடந்து விரைவாய்
நாடாள் பாண்டியன் முன்பிலே வந்தார்

**(ஊர்மக்கள் மன்னனைச் சந்தித்துத் தம்குறை கூறல்)**

**வேறு**

பாண்டியனே பாண்டியனே படைவீடு அழிந்துதையா
ஆண்டவனே உன்னுடைய ஆணை பட்டு போச்சிதுகாண் 895
என்றுரைக்க பாண்டியனும் எண்மர்தனைப் பார்த்துரைப்பான்
இன்னேரங் கணியானை இயல்புடனே கூட்டி வாரும்

**(பாண்டியன் கணியானை அழைத்தலும் கணியான் மறுமொழியும்)**

என்றிடவே மந்திரிமார் ஏவலாள் தனைவிடுத்து
தென்னவன்முன் சோதிடனைத் திட்டமுடன் கூட்டிவந்தார்
வந்திடவே பாண்டியனும் வழுத்தலுற்றான் சோதிடற்கு 900
சொந்தமுடன் நானாண்ட சுந்தரஞ்சேர் தேசமதில்
இந்தஅவக் கேடுவந்த எதார்த்தமுறை யென்றிடவே
நன்றெனவே சோதினும் நாள்பார்த்து வீடமைத்து
கிரகமதைத் தான்நிறுத்தி கெணிதமுடை கணியானும்
பரல் பரத்திப் பாண்டியன் பலனேதோ சொல்லலுற்றான் 905

(897 — 917) கணியான் — குறிகூறுபவன். தென்னவன் — பாண்டியன். வழுத்தலுற்றான் — வணங்கலுற்றான். ஏவலாள் — வேலைக்காரன். சுந்தரஞ்சேர் தேசம் — அழகான தேசம். அவக்கேடு — பாதகம். எதார்த்தம் — காரணம். நாள்பார்த்து — வாதைகளைக் கட்டுவதற்கான நாள் பார்த்து. வீடு அமைத்து — நவக்கிரகப் பலன் பார்ப்பதற்கான கட்டம் அமைத்து (நவக்கிரகங்களாவன சூரியன், சந்திரன், குரு, சனி, புதன், சுக்கிரன், செவ்வாய், ராகு, கேது) கணிதமுடை கணியான் — சோதிடத்தின் கணிப்பதில் வல்லவன். பரல் பரத்தி — முத்துப்பரத்தி (சோளிகள் 11-ஐக் கொண்டு சொல்லப்படும் ஆரூடம்) கூடல் நகர் — மதுரை. கொற்றவன் — அரசன். கிரகம் — கோள். கறைகண்டர் — கழுத்தில் நீல நிறத்தை உடையவன் — நீலகண்டர்; சிவபெருமான். தட்சணம் — தெற்கு. வாதை — துர்தெய்வம். பழிக்கஞ்சா மூர்த்தி — துஷ்ட தெய்வம். துய்யபுகழ் — பரிசுத்தமான புகழினை யுடையவர். மீனவன் — மீன்கொடியை உடையவன். பாண்டிய மன்னன்.

### (கணியான் பலன் பார்த்துக் கூறல்)

கூடல்நக ராளுகின்ற கொற்றவனே நீர்கேளும்
கேடுபல துண்டாகும் கிரகமதின் பலன்பார்த்தால்
கூவலூர் நகராண்ட கோன்செம்பன் முடியாரும்
ஆவலுடனே பொருது ஆயுதத்தி னால்மடிந்து
கைலாச மானதிலே கரைக் கண்டனா ரிடத்திற்சென்று 910
தைரியமாய் வரம் வாங்கித் தக்ஷணத்தில் வந்தவர்கள்
அழியாத வரங்கள் பெற்ற ஆண்மையுடை வாதைகளும்
பழிக்கஞ்சா மூர்த்திகளும் பாங்குடனே இங்கே வந்து
தொந்தரவு செய்கிறது துய்யபுகழ் பாண்டியனே
மந்திரங்கள் படித்தவரால் மாற்றிடுங்கோ வென்றுரைத்தார் 915
என்றுரைத்த சோதிடற்கு இயன்றபரிசளித்து விட்டு
முன்னோரைத் தானழைத்து மீனவனு மேதுரைப்பான்

### (மன்னவன் மந்திரிக்குக் கூறல்)

மந்திரியே வாதைகளை மாற்றவென்றால் மாமலைவாழ்
மந்திரவே லன்றனையும் மகிழ்ச்சியுட னழைக்கவேணும்
என்றிடவே மந்திரிகள் எல்லையொத்த அறிவுடைய 920
பண்புரைப் போரைஅழைத்துப் பகர்ந்திடவே கடிதாக
வாதமென வழிநடந்து வரைபலதுந் தாண்கடந்து
தூதனெனப் போனவர்கள் சுறுக்குடனே ஒருமுகமாய்
தந்திரத்துள் அடங்காத சண்டிக்காரன் மாடனுண்டு
அஞ்செழுத்தை யுச்சரித்து அடைக்கிடுவேன் வாதைகளை 925
வஞ்சியரே யெனவுரைக்க வனிதையவ ளேதுரைப்பாள்
ஆகம மெய்த்து ஏழுகாணி அசலமதில் தங்குகின்ற
நாகவள்ளி குறத்திமகள் நல்லமந்திர வேலனிடம்

### (தூதுவர் நல்ல மந்திர வேலனைச் சந்தித்தல்)

ஆடலுடன் பாடலுமாய் அங்குசென்று ஏதுரைப்பார்
கூடல்நக ராழுகின்ற கொற்றவனாம் பாண்டியனும் 930
மலையிலுள்ள வாதைவந்து மதுரைதனை யிழித்தினால்
தலைநகர் தன்னில்வந்து தந்திரத்தால் வாதைகளை
குடந்தனிலே பிடித்தடைக்கக் கூட்டிவரச் சொன்னார்காண்
தடந்தனில்வாழ் வேலாநீ தாமசங்கள் செய்யாது
வாவெனவே சொன்னசொல்லை வரைவேலன் றான்கேட்டு 935

(918 — 935) மந்திரவேலன் — மந்திரங்களைச் செய்யும் வேலன் என்பவன். வாதமென — காற்றென. வரை — மலை. சுறுக்குடனே — விரைவாக. ஐஞ்செழுத்து — ஐந்தெழுத்து மந்திரம் ஆகிய 'நமசிவாய' ஏழுகாணி — ஓர் ஊர். அசலம் — மலை. தாமசங்கள் — காலதாமதம். வரைவேலன் — மலையில் வாழ்கின்ற வேலன்.

### (மந்திரவேலன் தோழர்களை அழைத்தல்)

காவினில்வாழ் வேலனைத்தான் கட்டுடனே தானடைத்து
ஆத்துக்குள்ளே மூத்தரசன் அனுஜன்வேலா யுதமுடனே
மாற்றமில்லா இருபத்தொரு மலைவேலன் மார்களையும்
ஆசையுடன் கூட்டிவைத்து அவனேதோ செய்யலுற்றான்
பூசைப்பெட்டி பொற்பலகை பிடித்தடைக்க குடமெடுத்தான்
சற்குணவான் மலைவேலன் சரவணப் பெட்டிகளும்
கொம்புடனே பேய்ப்பறையும் கூடவேபேய்ப் பறைசேர்த்தான்
நம்பியவன் தன்னுடைய நாக்குவெட்டக் கருவிகளும்
நாக்குவெட்டக் கருவிகளும் நலமுடனே மலைவேலன் 945
வாக்குடைய சாமான்கள் வகைவகையாய்த் தீரனெடுத்து
மந்திரவே லனவனும் மனைவியற்கு ஏதுரைப்பான்
தந்திரமாய் மதுரையிலே தான்வாதை பிடிப்பதற்கு
போரேனா னெனவுரைக்கப் பெண்கொடியா ளேதுரைப்பாள்

### (மந்திரவேலன் மனைவி மறுத்துக் கூறல்)

மீறாதே மன்னவனே மீனவன்றன் நாடு சென்று 950
மந்திரங்கள் பார்த்வர்கள் மறுத்துவரப் போறதில்லை
தந்திரத்தி லடங்காத தாஷ்டீக வாதையுண்டு
வல்லாத வாதையுண்டு வலுவுடைய மூர்த்தியுண்டு
பொல்லாத குணக்காரி பொன்னிசக்கி யம்மையுண்டு
மந்திரத்துக் கடங்காது மரித்தாலுங் கேளாது 955
தந்திரத்து ளடங்காத சண்டித்தன மாடனுண்டு
ஆணையிட்டால் நில்லாது ஆக்கினைக்கும் பதறாது
ஆணழகன் மூர்த்தியுந்தான் அமர்செய்யவும் வல்லவன்காண்
வல்லமையை அறியாமல் வழிபோவீ ராமானால் 960
அல்லல்வரும் என்கணவர் அடியாட்குத் தாலிப்பிச்சை
தூந்திருவு மெனவுரைக்கத் தடம்வாழும் வேலன்சொல்லான்

(936 — 958) கா — சோலை. ஆத்துக்குள்ளே — ஆற்றுக்குள்ளே. அனுஜன் — மலை வேலன்மார். வேலாயுதம் — மலைவேலன்மார். பூசைப்பெட்டி — பூசைச்சாமான்கள் வைக்கும் பெட்டி. பொற்பலகை — தங்கப்பலகை. பிடித்தடைக்க — கட்டுப்படுத்த. குடம் — பேய்களை உள் வாங்கி அடைக்கும் குடம். தென்னம்பாளைக் கூடு — தென்னம் பாளைக் கொண்டு செய்யப்பட்ட கூடு. சரவணப்பெட்டி — நாணல் புல் கொண்டு செய்யப்பட்ட பெட்டி. பேய்பறை — பேயைக் கவரும் பறை. நம்பி — மந்திரவாதிகளின் தலைவனாகிய வேலன். பெண் கொடியாள் — கொடி போன்ற பெண். வேலனின் மனைவி. மீனவன் தன் நாடு — மீன் கொடியைக் கொண்ட பாண்டியனின் நாடு. தாஷ்டீக வாதை — அகம்பாவம் பிடித்த பேய். வல்லாத வாதை — ஊடைப்பேய். பொல்லாத குணக்காரி — தீமை நிறைந்த குணம் கொண்டவள். சண்டித்தனமாடன் — கீழ்ப்படியாத மாடன். ஆக்கினை — ஆணை; மந்திரக்கட்டளை.

(வேலன் மறுத்துக் கூறல்)

மங்கையரே மந்திரத்தின் மதிப்பறிய மாட்டாயோ
தந்திரத்துள் அடங்காத சண்டிக்காரன் மாடனுண்டு
அஞ்செழுத்தை யுச்சரித்து அடைத்திடுவேன் வாதைகளை 965
வஞ்சியரே யெனவுரைக்க வனிதையவ ளேதுரைப்பாள்
அஞ்செழுத்துள் ளடங்காது அனர்த்தம்வரும் மன்னவரே
என்னிடவே வேலன்வன் இருவிழியுங் கனலெழும்ப
நன்றுரைத்தாய் பெண்கொடியே நானுமந்த வாதைகளை
எட்டெழுத்தை யுச்சரித்து இக்ஷணத்தில் கட்டிடுவேன் 970
கிட்ட நின்று பேசாதே கிளிமொழியே போவெனவே
வேலனுட பெண்ணவரும் வேகமுட னேதுரைப்பாள்
காலன் பதிசேர்வதற்குக் கட்டபுத்தி வந்ததுவோ
எட்டெழுத்தி லடங்காது யானுரைத்த வாதைகள் தான்
திட்டமுடன் சிதம்பரத்தைத் தியானமது செய்தாலும் 975
தம்பனத்துள் ளடங்காது தந்திரத்துள் ளடங்காது
வம்பு செய்வாள் மந்திரத்தை வரமாட்டா ளிசக்கியம்மை
எந்திரத்தி லடங்காள் இசக்கியம்மை யானவளும்
சக்கரத்தி லடங்காது தான்மதுரை போகாதே 980
வக்கனைச் சொல்லல்ல விது வடிவழகா வென்கணவா

(வேலன் தோழர்களுடன் மதுரை ஏகல்)

என்றுபல சொன்னபின்பும் இவள்வார்த்தை கேளாமல்
தன்னுடைய மந்திரத்தின் தைரியத்தால் மலைவேலன்
இருபத்தொரு வேலனுடன் இவன்ஒட்ட னுடன்நடந்து
வரும்விதியை அறியாமல் வழிபலதுந் தான்கடந்து 985
முத்தர்வெளி யருகுவந்தார் மூணாற்று முகப்புமிட்டு
கர்த்தாவே துணையெனவே கனமதுரைப் பாண்டியனும்
அரிசிகறி கொடுத்தனுப்ப ஆக்கியுண்டு ஆனந்தமாய்
பரிவுடனே வேலன்மார்கள் பாண்டியன்ஆள் மதுரைவந்தார்

(959 — 1010) பதறாது — அவசரப்படாது. தாலிப்பிசசை — (கணவனுடைய உயிருக்கு ஆபத்து வந்த நிலையில் தன் சுமங்கலித் தன்மை நிலைக்க மனைவி மன்றாடிக் கேட்டுக் கொள்ளுதல்) வஞ்சி — வனிதை: பெண். கனல் — நெருப்பு. எட்டெழுத்து — 'நாராயணாய நமக' என்ற விஷ்ணுவை போற்றும் மந்திரம். காலன் — எமன். எமன் காலன் பதி — எமன் உலகு. தம்பனம் — எமன். சாலவித்தை — அஷ்டகருமத்தில் ஒன்று. சீலம் — ஒழுக்கம்; முறைமை. தையல் — பெண். தையலர் — பெண்கள். அழலாடி — அழல் ஆடி — நெருப்பைக் கையில் கொண்டு ஆடுப வன் — சிவபெருமான். கானவர் — வேடுவர். சடுதி — விரைவு. சூர் — அச்சம் தரும் தெய்வம். பெலி — பலி; இறைவர்க்குச் செய்யப்படும் பூசையில் தருவது.

### (வேலன் மதுரை அடைதலும் தூளுரையும்)

**வேறு**

வேலன் வந்தானே — மதுரையில்
வேலன் வந்தானே 990
வேலன் வரக்கண்டு சீலமுடன் ஊரார்
விரைவாய் வந்து பாண்டி மன்னரைக் கும்பிட்டு
கோலஞ் செய்கின்ற மாய்மால வாதைகளைக்
குடத்தில் பிடித்து அடைக்க வந்தேனென (வேலன்)
முத்தர் வெளியினில் வேலன் மார்கள்வர
முடிதாங்கிய பாண்டி மன்னர் கொடுத்திடும்
உத்தமமா மரிசிகறியைப் பொங்கி
உண்டு களித்து மதுரையார் காணவே (வேலன்)
மதுரைத் தெருவுடன் மலைவேலன் மார்களும்
மகிழ்ந்து தெருவது அதிரும் படியாக 995
சதிருட னேவர சகத்திலுள்ள ராசர்
சங்கையுடன் வந்து கண்டு களிக்கவே (வேலன்)
பாண்டி மன்னர் சாலையோடு வேத்தவையும்
பாங்குடன் கண்டு களித்து வேலன்மார்கள்
தாண்டிப் பலதெரு தானுங் கடந்திட
தையலர் கூடி வளைந்துகண் பார்க்கவே (வேலன்)
எந்தமலைக் காணிவேலன் மார்களென்ன
ஏழுகாணி மலைக்காணி நாங்களென்று
சந்தமுடன் சொல்லி கூடலுராள்கின்ற
தலைவனாம் பாண்டியன் சரணாம் புயந்தொழ 1000
(வேலன்)

### (பாண்டியன் வேலனிடம் இன்னல் பற்றி எடுத்துரைத்தல்)

**வேறு**

தொழுதமலை வேலனோடே சொல்லுவாராம் பாண்டிமன்னர்
அழலாடி யருளாலே கண்டிருந்தேன் மதுரைதன்னை
ஆறிலொரு கடமைகொண்டு அரசுசெய்து இருக்கையிலே
தாறுமா றாகவல்லோ சனங்களையும் தான்வதைத்து
மாறாட்டஞ் செய்துதடா மலையிலுள்ள வாதைவந்து 1005
வாதாட்டஞ் செய்ததொரு வாதைகளைத் தான்பிடிந்து
குடந்தனிலே அடைத்துயிந்த கோட்டைவிட்டுக் கொண்டுபோங்கோ
தடந்தனில்வாழ் கானவரே சடுதியிலே என்றிடவே

(1011 — 1025) சூல் ஆடு — கருவுற்ற ஆடு. சூல் பன்றி — கருவுற்ற பன்றி. மறி — ஆடு. ஈனாத புருவை — குட்டிப் போடாத ஆடு (புணராத ஆடு). ஆனை முட்டை — தேங்காய். குதிரை முட்டை — கோழிமுட்டை. அம்புலிமான் கொம்பு — விளக்கு. உடல் கிடக்கத் தலை — வாழைக்குலை. நிலந் தீண்டா நீர் — பன்னீர்.

### (வேலன் மறுமொழி)

என்றிடவே பாண்டியற்கு ஏதுசொல்வார் வேலன்மார்கள்
நன்றுரைத்தீர் பாண்டியனே நல்சூர்க்கு பெலிகொடுக்க 1010
சூலாடு சூலுப்பின்றி துள்ளுமறி கூடவேணும்
ஈணாத புருவைவேணும் ஏத்தசேவல் கோழிவேணும்
ஆனைமுட்டை நாலுவேணும் அம்புலிமான் கொம்புவேணும்
குதிரைமுட்டை நாலுவேணும் உடல்கிடக்கத் தலைவேணும்
நிலந்தீண்டா நீர்வேணும் நிச்சயமா யித்தனையும் 1015
இத்தனையுந் தாருமென்று இரங்கிநமஸ் காரஞ்செய்தான்
அப்பொழுது பாண்டியனும் அறியாமல் தியங்கிடவே

### (பாண்டியனிடம் பூசைப்பொருள் பற்றிக் கூறுதல்)

நட்புடனே பாண்டியற்கு நவிலுகிறார் வேலன்மார்கள்
ஆனைமுட்டை யானதுதான் அறிவாய்நீ தேங்காயென
குதிரைமுட்டை யானதுதான் கோழிமுட்டை மன்னவனே 1020
உடல்கிடக்கத் தலையதுதான் உத்தரவாழைக் குலையல்லவோ
அம்புலிமான் கொம்பதுதான் ஆனதிரு விளக்கல்லவோ
நிலந்தீண்டா வெள்ளமது நீணிலத்தில் பனிநீர்தான்
இத்தனையுந் தரவேணும் இயல்மதுரைப் பாண்டியனே

### (பாண்டியன் பூசைப்பொருள் கொண்டுதர ஆணையிடுதலும் வேலன் பூசையைத் தொடங்குதலும்)

என்றிடவே பாண்டியனும் எண்ணருடன் தானுரைத்து 1025
பண்டுரைத்த சாமான்கள் பளிச்செனவே தான்கொடுத்தார்
கொடுத்திடவே மூங்கிலதைக் கொண்டுபரண் தான்சமைத்து
விடுத்துப்பரண் பக்கலிலே விரையப்பச் சரிசிதூவி
பூவுடனே பொரிதூவி புகழுடைய வாதைகட்கு
நாவறுத்து உதிரமதை நலமுடனே யருகுவைத்து 1030
மார்பதிலே மஞ்சள்சாத்து மலைவேலன் றான்பூசி
காருரலைக் காரன்மறித்துக் கட்டுடனே அதிலேறி
கையதிலே கயிறுகொண்டு கருத்துடனே கெட்டுவானாம்
காலதிலே கெச்சங்களும் கட்டுடனே கெட்டியல்லோ
பேய்முகத்தைக் கெட்டியவன் பிடித்தடைக்கக் குடமும்வைத்தான் 1035

(1026—1035) பண்டு—முன்பு. புந்தி—புத்தி; அறிவு. பளிச்செனவே—விரைவாகவே. பரண்—காவல் செய்வதற்காக அமைக்கப்படும் மேற்தட்டுத்தளம்; உதிரம்—இரத்தம். மார்பதிலே மஞ்சள் சாத்து—மார்பில் மஞ்சள் பூசிக் கொண்டு. காருரலைக் காரன்—கரிய உரல் போன்ற அமைப்புடைய கோடங்கியைக் கையில் வைத்திருக்கும் வேலன். மறித்து—பேய்களை தடுத்து நிறுத்தும் நோக்குடன். கட்டுடனே அதிலேறி—மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு அதில் ஏறி. குடமும் வைத்தான்—பேயைப் பிடித்து குடத்தில் மூடுவதற்கான நடவடிக்கை.

### (வேலன் பேய்களைக் கட்ட முயற்சிசெய்தல்)

நாக்குவெட்டி வைத்ததொரு நல்லதிரத் தைவாரி
வீசியவன் பீடமதை விரைவுடனே தானமைத்து
பூசைவைக்க வேண்டுமென்று புந்தியிலே நினைத்தவனும்
பச்சரிசி பரப்பரிசி படைத்தவைத்து தீபமிட்டு
செப்புக்குடந் தன்னைவைத்து செபிப்பானாம் மந்திரத்தை 1040

### (வேலன் பலவகை மந்திரங்களைப் பயன்படுத்துதல்)

நஞ்சுண்ட அரனாரை நாடியந்த மலைவேலன்
உஞ்செழுத்தைச் செபிப்பானாம் அரியெழுத்தை உன்னுவானாம்
அட்டதிக்கெல் லாம்புகழ அதிசமுள்ள மந்திரத்தைத்
திட்டெனவே மலைவேலன் செபிப்பானாம் வாதைகள்மேல்
எட்டெழுத்தைச் செபிப்பானாம் ஏகாந்த மாகநின்று 1045
மட்டடங்கா மந்திரத்தை மலைவேலன் றானோத
பிரணவத்தை செபிப்பானாம் வெரியமலை வேலனவன்
கருவியெல்லாந் தான்திரண்டு கருத்துறவே செபித்திடவே
தம்பனத்துள் ளடங்காது தாறுமாறாய் நின்றல்லோ
கெம்பிமலை வேலமுன்னே கெருவமுடன் மூர்த்திவர 1050
கண்டதொரு மலைவேலன் கருக்கழிந்து திடுதிடென
திண்டுமுண்டு செய்யாமல் திடமுடனே் வாதைதனைப்
பூசையில்வா பூசையில்வா பொற்கொடியே பூசையில்வா
ஆசையுட னேதொழுதேன் அம்மாநீ பூசையில்வா
சின்ன இசக்கியம்மா தேன்மொழியே பூசையில்லா 1055
அன்னமென நடையுடைய அந்தர யிசக்கியேவா
மேலாங்கோட் டிசக்கியம்மா மெல்லியரே பூசையில்வா

(1036-1041) நாக்குவெட்டி வைத்ததொரு நல்லுதிரம் — நாக்கைத் துண்டித்ததனால் கொட்டிய இரத்தம். பீடம் — பூசை மற்றும் பலி கொடுப்பதற்காக அமைக்கப்பட்ட பீடம். புந்தியிலே — சிந்தையிலே. பரப்பரசி — பரப்பி வைக்கப்பட்ட அரிசி செப்புக்குடம் — செம்பினால் செய்யப்பட்ட குடம். நஞ்சுண்ட அரனார் — ஆலகாலம் எனப்படும் கொடிய நஞ்சை உண்டவர்; சிவன்.

(1042-1064) அஞ்செழுத்து — சிவமந்திரம் (நமசிவாய) அரியெழுத்து. நாராயண நமக என்னு மந்திரம். உன்னுவான் — சிந்திப்பான். அட்டதிக்கு — எண்திசை. திட்டெனவே — உறுதியுடன். ஏகாந்தமாக — தனிமையாக. மட்டடங்கா — அளவில்லாத. பிரணவம் — ஓம் என்னும் மந்திரம். வெரிய மலை — மணம் மிகுந்த மலை. தம்பனம் — அஷ்ட கருமத்துள் ஒருவனியக்கத்தை மந்திரத்தால் தடுத்துக் கட்டுதல். தாறுமாறாய் நின்றல்லோ — வேலனின் பூசைக்கு முன்னே அவன் வாதைகளைக் கட்டுப்படுத்த பயன்படுத்திய மந்திரக் கருவிகள் அனைத்தும் அவனுக்கு எதிராக அவன் முன் நிற்க. கெம்பு மலை — நீல நிறம் அமைந்த மலை. கெர்வமுடன் — கர்வமுடன். கருக்கழிந்து — நெஞ்சம் பதறி. திண்டு மண்டு — எதிரிடைப் பேச்சு. அக்கணிந்தோன் — உருத்திராட்சம் அணிந்தோன்; சிவன். எரியெனவே — தீயெனவே

கோலமுடன் பூசையில்வா கொக்கோட்டு யிசக்கியம்மா
கொக்கோட்டு யிசக்கியம்மா கொடியிடையே பூசையில்வா
அக்கணிந் தோனருளாலே ஆட்டுக்கார யிசக்கியேவா 1060
மந்திரமூர்த்தி தன்னுடனே மண்காத்த பெருமாளேவா
தந்திரங்கள் செய்யாது சட்டெனவே பூசையில்வா
என்றுசொல்லி மலைவேலன் எரியெனவே கண்சிவந்து
நன்மிறனவே மந்திரத்தை நாடியவ னுருவேற்ற

## (மூர்த்திகளும் வாதைகளும் சினந்து வேலனை மாய்த்தல்)

சங்கையுடன் மூர்த்திகளும் தான்கூடி யேசினத்து 1065
எங்களையும் நீபிடித்து யிப்போது கெட்டுவாயோ
என்றுவலு பேசிநிற்க ஏந்திழை சின்னயிசக்கி
தந்திரமாய்க் கண்காட்ட தலைவன்மந் திரமூர்த்தி
முனைதலுடன் பொந்துதடி முன்கையிலே தானெடுத்து
வினையியற்றும் வேலனைத்தான் விரையவும் தடித்தான் 1070

## (மற்ற வேலன்மார் அதிர்ச்சியுற்று ஓடுதல்)

**விருத்தம்**

நெஞ்சினி லடிகள் கொள்ள நிமிடத்தில் வாதி சாக
அஞ்சியே வேலன் மார்தான் அவர்மனம் உலறி நொந்து
துஞ்சினோன் தன்னைப் போட்டுத் துயருடன் அழுது விண்ணில்
பஞ்சிபோல் பறந்து வேலன் படிதனி லோட லுற்றார்

**வேறு**

ஓடினாரே வேலன்மார்கள் — ஓடினாரே 1075
ஓடினாரே திடமாக வந்த தொரு
ஊக்கமுடைய மலைவேலன் மார்களும்
பாடியே மந்திரம் கூடிச் செபித்திட
பாங்குள்ள மந்திர வேலன் மடிந்திட (ஓடினாரே)

மந்திர மூர்த்தியின் பொந்து தடியினால்
மாமலை வேலன் உயிர்பிரி யக்கண்டு 1080
தந்திரமாக மற்றுள்ள வேலன்மார்கள்
சடுதியிலே கூடல் மாநகரை விட்டு (ஓடினாரே)
அனியாய வாதையால் அனர்த்தம் வருமென

(1065-1074) சினத்து — சினம் கொண்டு. வலுபேசி நிற்க — வீரம்பேசி வாதம் பேசி நிற்க. முனைதலுடன் — கோபத்துடன். பொந்துதடி — ஒரு வகை மரத்தால் ஆன ஆயுதம்.

செஞ்சினில் அடி — மார்பில் அடி. துஞ்சினோன் — இறந்து பட்டவன். விண்ணில் பஞ்சிபோல் பரந்து — விண்ணில் அங்கும் இங்கும் பறந்து திரியும் பஞ்சு போல.

ஆனமலை வேலன் மார்களோடக் கண்டு
தனியாய்க் கழுக்கார னோடி சக்கியம்மை
தாஷ்டீகன் செங்கிடாய்க் காரனும் பின்னுற (ஓடினாரே)
பூசையிட்டு வாதை பிடிக்கவந்த வேலன்
பூப்படைப் போடுதன் பேய்பறையும் போட்டு
நாசம் வந்துதென தெருவி லெறித்திட்டு
நாடித்தன் னூருக்குப் போகும் வழியாக (ஓடினாரே) 1085
ஒன்னுபோ லேவந்து உயிரை யிழக்கவா
ஓடிப் பிழைப்போ மெனவே நடந்திட
சின்ன யிசக்கி யம்மையும் பிறகாலே
சிரித்துச் சிரித்துத் தொடர்ப தறியாது (ஓடினாரே)
வாழும் மதுரைப் படைவீட்டைச் சேதிக்க
வனிதை யிசக்கியாம் யம்மைமனங் கொண்டுடன்
வாளுங் கரத்தினி லேந்தித் தெருதோறும்
வளைந்து வளைந்து சுழன்று திரிந்திட (ஓடினாரே)
ஓடினவேலன்மார் ஏழுகாணிமலை
உத்த சார்வல் போக வேண்டு மென்றெண்ணியே 1090
சாடி வருகையில் மந்திர மூர்த்தியும்
தையலிசக்கியும் பின்னாலோடி வர (ஓடினாரே)
ஓடியே வேலன்மார்கள் ஓங்கலில் வார போது
வாடியே மெய் நடுங்கி வல்லவை மார்கள் தானும்
தேடியே தெருவில் நின்று தியங்கிட குடதிசை தன்னில்
கூடியே வேலன் மார்கள் குணமுடன் வந்தாரென்றே

## (வேலத்தி தன் கணவன் மந்திர வேலன் பற்றி வினாவுதல்)

**வேறு**

வந்திடவே கண்டபோது வரையிலுள்ள வேலத்திகள்
சந்தோஷ மாகநின்று சமாச்சாரம் கேட்கையிலே 1095
நாகவள்ளி குறத்தியுட மைந்தனின் மனைவியவள்
தாகமுட னோடிவந்து சாற்றுவளர் மொருவார்த்தை
ஏழுகாணி மலையைவிட்டு இருபத்தொரு பேர்போனீர்
வாழ்வுபெற இருபதுபேர் வந்தீரே மலைவேலா

(1075-1099) கூடல் மாநகர் — மதுரை. அநியாய வாதை — நீதி நேர்மையற்ற வாதை. அனர்த்தம் — தொல்லை. செங்கிடாய்க்காரன் — இசக்கியின் பரிவாரத்தில் ஒன்று. பின்னுற — பின்னால் வர. பூப்படை — அர்ச்சனைக்கு உரிய மலர்; (பூப்பலி). சிரித்துச் சிரித்து — அச்சம் தரும்படியாக சிரிப்பது போல ஒலியெழுப்பி (பொதுவாகப் பேய்கள் சிரித்தும், அழுதும் பேசாதிருந்தும் தொல்லை தரும் என்பது நம்பிக்கை). மதுரை படை வீடு — பாண்டி நாட்டுத் தலைநகரான மதுரை; சேதிக்க — அழிக்க. ஓங்கல் — மலை. வல்லவைமார்கள் — மலைவேலன்மார்களின் மனைவியர். குடதிசை — மேற்கு நாக வள்ளி — மலைவேலனின் மனைவி. வாழ்வுபெற — உயிரைக் காப்பாற்றிக் கொள்ள.

### (வேலன்மார் மறுமொழி)

என்னுடைய கணவனெங்கே என்றவுடனே வேலன்மார்கள் 1100
கன்றிமனங் கலங்கியவள் காரணங்கள் சொல்லுவாராம்
கூடல்நக ரானதிலே கொற்றவனா ரிடம்போனோம்
ஆடல்பாட லுடனிருந்து அரசனந்த பாண்டியனும்
மந்திரத்தால் வாதைகளை மடக்கியவன் பிடிக்கச்சொன்னான்
தந்திரமாய் செய்தேநாங்கள் தான்பிடிக்கும் வேளையிலே 1105
உன்கணவன் றனையிசக்கி உயிர்வாங்கி னாளனவே
சொன்னவுடன் வேலத்தியும் துயரமுற்று ஏதுசொல்வாள்

### (வேலத்தியின் அவலம்)

மன்னவனே என்கணவர் மதுரைநக ரானதுக்கு
நன்னயமாய் நீங்கள்செல்ல ஞாயமில்லை யென்றானே
மாபாவி சொல்மறுத்து மதுரைநக ரானதிலே 1110
தாயாரும் பெந்துக்களும் தாரமுங் காணாதபடி
வாணாளை விட்டீரே வடிவழகா என்கணவா
சிற்கொடிந்து விட்டேனே தேன்மொழிநா னென்கணவா
இறந்துவிட்டீர் மதுரையிலே எல்லோரும் வந்தாரே
விலகினசொற் கேளாமல் வீணேபோ யிறந்தீரே 1115
வலுமையுட னிசக்கியவள் வதைத்தாளோ என்கணவா
என்றுபல வாயுரைத்து ஏந்திழையுந் தானழுது
இன்றுசென்று என்கணவன் இறந்ததலந் தனைப்பார்த்து

### (வேலத்தி மதுரை செல்லல்)

மந்திரமூர்த்தி தனையும் மகிழ்வுடன் தான்வணங்கி
எங்கணவ னுயிர்மீட்டி இப்பொழுது நான்வருவேன் 1120
என்றுரைத்து வேலப்பெண்ணும் எழிலுடனே தான்நடந்து
சென்றுமது ரைப்பதியில் திட்டமுட னென்கணவன்
பட்டயிடந் தனைத்தேடி பாவையரும் வந்துகண்டு
திட்டமுட னருகிருந்து சேயிழையா ளேதுசெய்தாள்

### (வேலத்தி தாலிப் பிச்சை கேட்டல்)

செங்கிடாய்க் காரனுடனே செல்விசின்ன யிசக்கியையும் 1125
மந்திரத்துள் ளடங்காத மாடனுட னிசக்கியையும்
வேலத்தியுந் தான்தொழுது விழுந்துநமஸ் காரஞ்செய்து
தாலிப்பிச்சை தாருமென தையலருங் கேட்டிடவே

(1100-1107) கன்றி — உணர்வினால் ஏற்படும் எழுச்சி மிகுதி. மனங்கலங்கி — துன்ப மிகுதியால் மனங்கலங்கி. கூடல்நகர் — மதுரையைத் தலைமையிடமாகக் கொண்ட மதுரை. உயிர் வாங்கினாள் — கொன்று விட்டாள்.

### (சின்னயிசக்கி மறுமொழி)

இரங்கிச்சின்ன யிசக்கியம்மை எழிலுடைய வேலத்திமேல்
விரைவுடனே சன்னதமாய் விள்ளுவளா மொருவார்த்தை 1130
உந்தன்மகள் செம்பக்குட்டி ஒண்டொடியாள் தன்னையிப்போ
மந்திரமூர்த்தி யவர்க்கு மாபூசை நீகொடுத்தால்
உள்புருஷன் றன்னையிப்போ உயிரெழுப்பித் தாரோமென
நன்றெனவே வேலத்தியும் நான்தாரே னெனவுரைக்க

### (வேலத்தி ஒப்புதலும் வேலன் உயிர் பெறுதலும்).

சீக்கிரமா யோடிவந்து சின்னயிசக் கிப்பிரியை 1135
ஊக்கமுடன் பன்னீரை ஓதிமுகந் தனிலெறிய
உயிர்பிரிந்து கிடந்தொரு உற்றநல்ல வேலனவன்
தைரியமா யெழுந்திருந்து தாய்சின்ன யிசக்கியைத்தான்
இருகையினாற் றான்தொழுது எழுந்திருந்து வேலவன்
கருமமெல்லாந் தானறிந்து கட்டுடனே ஏதுசொல்வான் 1140

### (வேலன் இசக்கியைக் கூண்டமலைக்கு அழைத்தல்)

கூடல்நகர் தனைக்கடந்து கூண்டமலைக் காவதிலே
நாடிஎங்க ளுடன்நீங்கள் நடந்துவந்தா லென்தாயே
கேட்டதுபோல் பெலிதாரோம் கிளிமொழியே வாருமென
நாட்டமுடன் சொல்லிடவே நன்னுதல் சின்னயிசக்கி
அம்மையுடன் மூர்த்திகளும் அழகன்கழுக் காரனுமாய் 1145
செங்கிடாய்க் காரசுவாமி தீரமுடன் கூடிவர
எல்லோரு மொருப்போலே எழிலுடைய மதுரைவிட்டு
வல்லமையாய் ஏழுகாணி வரைதனிலே வந்தனராம்

### (வேலனும் வேலத்தியும் பலி கொடுக்க ஏற்பாடு செய்தல்)

**வேறு**

வந்திடவே வேலத்தியும் வேலனும் மகிழ்ந்துடனே
வணங்கிநமஸ் காரஞ்செய்த பின்னர்
முன்னுரைத்த சொற்படியே மூர்த்திக்கு பெலிகொடுக்க
முகனையுடனே பரணு மிட்டு 1150

(1108-1163) சொல்மறுத்து — சொன்ன சொல் கேளாமல். தாயர் — அண்ண பெந்துக்கள் — உறவினர். தாரம் — மனைவி. வாணாள் — வாழ் — நாள். உயிர்வாழும் நாட்கள். வதைத்தாள் — கொன்றாள். வடிவழகா — அழகியவனே; வேலனே. சிறகு ஒடிந்து விட்டேனே - இழப்பு ஏற்பட்டு விட்டதே. (பறக்கும் பறவைக்கு ஒரு பக்கச் சிறகு இழந்து போனால் எத்தனை துயரம் பெறுமோ அது போன்ற துயரம்) விலகின சொல் — துன்பத்தைத் தவிர்க்கும் நல்ல வார்த்தைகள். வலிமையுடன் — வேகத்துடன்...இறந்த தலம் —

கீழறையும் மேலறையும் கிருபையுடனே முடித்து
கெற்பமுற்ற செம்பக்குட்டி தன்னை
கீழறைக்குள்ளே நிறுத்தி கெம்பீர மாய்வேலன்
கெட்டிய பரண்மே லறையில்
சூலோடு துள்ளுமறி சூக்ஷமுடனே யறுத்துச்
சோரியை வாழையிலையி லூற்றி

### (இசக்கி வேலத்தி மகளைப் பலி கொள்ளுதல்)

மந்திரமூர்த் தியுடனே மங்கையர் சின்னயிசக்கி
மகிழ்ந்துபரண் மீதிலேறி நின்று
கீழறையில் பார்ப்பளவில் கெம்பீர மாகநின்ற
கிளிமொழியாள் செம்பக்குட்டி தன்னை 1155
கண்டவுடனே மகிழ்ந்து காரிகை சின்னயிசக்கி
கள்ளஞ்செய்தாள் வேலத்திதா னென்ன
என்றுசின்ன யிசக்கியம்மை எண்ண மிட்டு நின்றவளும்
ஏந்திழையாள் செம்பக்குட்டி தன்னை
கொல்லவென இசக்கியம்மை கோபமுடனே துணிந்து
கூண்டநவ மாசமான பெண்ணை
வயிறதிலே தானுதைக்க வனிதையந்த செம்பக்குட்டி
வாய்வழி யுதிரங்கக்கி மாண்டாள்
பூவிலுதி ரம்வழிய பெண்கொடியும் மாண்டிடவே
பூசையுண்டு அவ்விடத்தில் நின்றார் 1160
செங்கிடாய்க் காரனுடனே தீரன்மந்திர மூர்த்தியும்
சின்னயிசக் கியுங்கழுக் காரன்
இத்தனைபேரும் படையோ டேழுகாணி மலையதிலே
எழிலுடனே பூசையுண் டிருக்க
வெண்பட்டு பூசையிட்டு விருப்பமுடனே தொழுது
வேலன்மா ரினிதிருக்கும் வேளை

### (நாஞ்சில் நாட்டிற்கு இசக்கி சென்ற வரலாறு)

### (தாளக்குடி மக்கள் கூத்தாட்டுக்கு ஏற்பாடு செய்தல்)

சந்தமுடனே நாஞ்சிதன் நாட்டில் கீர்த்திபெற்ற
தாளக்குடி யூரிற்கரை யாளர்
கூத்தாட்டு பார்க்கவென்று குதூகலம் மிகவேபொங்கி
கூத்தில்மிக்க வல்லவர்க ளான 1165

இறந்துபட்ட இடம். தாலிப்பிச்சை — சுமங்கலியாய் ஒருத்தி வாழும்படி அவளது கணவனுயிரைப் பாதுகாக்க. பெலிதாரோம் — பலி தருகிறோம். முகனையுடன் — ஆர்வத்துடன். சோகி — இரத்தம். செம்பகக்குட்டி — வேலனின் மகள். கன்னஞ் செய்தாய் — பொய் கூறினாள். நவமாசமான பெண் — ஒன்பது மாத சூல் கொண்ட பெண். பூவில் உதிரம் — அங்குலில் உதிரம் வழிய. பெண் கொடி — செம்பகக்குட்டி. வெண்பட்டு பூசை — வெண் பட்டாடை சலித்தும் பூசை.

மன்னன் மருப்பனெனவே மதிப்புடைய கணியானை
　　மகிழ்ந்தவர்கள் கூட்டிவந்து ஆட்டி
ஒத்தபங்க தாய்ப்பேசி ஊரிலுள்ளோர் பார்த்திருந்து
　　உத்தமன்ன னுக்குப்பரி சீய
கண்டதோர் மருப்பனவன் கண்சிவந்து கோபமுடன்
　　கடிந்துமன்னன் கணிகையானைக் கொல்ல
நினைத்தவனும் ஆட்டுவிட்டு நூற்றெட்டுப் பலனெடுத்து
　　நொடிக்குமுன்னே கால்நடைய தாக
நாலாறு மலைகடந்து நாட்டமுடனே மருப்பன்
　　நலமாயெழு காணிமலை கண்டான் 1170
கண்டுமலை வேலவனைத் தொழுதிடவே வேலனவன்
　　கருத்துடனே ஏதுமொழி சொல்வான்

**(வேலன் காணியானை வினவுதல்)**

எங்கிருந்து இங்குவந்தாய் எவ்வூரு யென்னசெய்தி
　　எனக்கறியச் சொல்லுமென வேதான்
மருப்பனென்ற கணியானும் மனம்மகிழ்ந்து சொல்லலுற்றான்
　　மலைவேலா வந்தசெய்தி சொல்லுவேன்

**(காணியான் தன்வரலாறு சொல்லி மன்னனைக் கொல்ல வழி கேட்டல்)**

தாளக்குடி யூரதிலே தாமசிக்குங் கணியான்நான்
　　சங்கையுட னேமருப்ப னென்பேர்
மன்னன்கணி யானுடனே மகிழ்ந்துநட மாடிடவே
　　மாறாட்டத் தாலெனை நகைத்து 1175
கோலாகல மாகநின்று கேலியுரைத் தானதனால்
　　கொல்லவேணும் மன்னன் கணியானை

(1164-1188) நாஞ்சில் நாடு — தென் திருவிதாங்கூர்ப் பகுதியிலுள்ள ஒரு நாடு. கீர்த்தி — புகழ். கரையாளர் — வேளாளர்களில் ஒரு பிரிவினர். கணியான் — சோதிடன். மருப்பன் — தலைவன். ஏழுகாணி மலை — ஓர் ஊர். தாமசிக்கும் — வசிக்கும். மருப்பன் — தாழக்குடி காரன் பெயர். நகைத்து — ஏளனம் செய்து. கோலகலமாக — ஆரவாரமாக கொல்ல வேணும் — கொலை செய்ய வேண்டும். இரணியம் — பொருள். ஏத்தமலை வேலன் — ஏற்றுக்கொண்ட மலை வேலன். நேசமாய் — அன்பாய். மந்திரஞ் செபிக்க வேண்டாம் — மாந்திரீகம் செய்ய வேண்டாம். ஏவ வேண்டும் — தெய்வங்களைத் தூண்டி விட வேண்டும். தாளக்குடி — நாஞ்சில் நாட்டிலுள்ள ஒரு ஊர். ஊட்டு — படையல். சுந்தர மன்னன் — அழகிய மன்னன். தொலைந்திட — கொலை செய்திட. விடுத்தானன்றே — சென்றான் அன்றே.





புருஷாதேவி கோயிலமைந்த

'தாழாக்குடி ஊரில் குளத்தங்கரையும்
கூட்டமாம் செந்தாழம்மூடும்'

### (வேலன் கணியானுக்குக் கூறியது)

என்றுரைத்துத் தான்கொணர்ந்த இரணியந் தனைக்கொடுக்க
ஏத்தமலை வேலன் சந்தோஷமாய்
நின்றவன் மருப்பனுடன் நேசமாயொரு மொழிதான்
நிச்சயம தாகவே யுரைப்பான்
மன்னன் கணியானைக் கொல்ல மந்திரஞ் செபிக்க வேண்டாம்
மதிப்பிட னெந்தன்னிட மிருக்கும்
செங்கிடாய்க் காரனுடனே சின்னயிசக்கி யம்மையும்
தீரன் மந்திரமூர்த்திக் காரன் 1180
இவர்களைஉன் னூரதிலே இப்போது கூட்டிச் சென்று
ஏவவேண்டும் மன்னன்கணி யான்மேல்
உண்பகைவ னானமன்னன் உயிரிழந்தால் தாளக்குடி
ஊரதிலே கோயில்கட்டி வைத்து
பூசையிட்டு பெலி கொடுப்பாய் புண்ணியனே என்றுரைத்து
புகழுடனே வேலன்வழி விட்டான்

### (கணியான் வாதைகளுடன் தன் நகர் ஏகல்)

வழிவிட மருப்பனவன் வாதைகளைத் தான்கூட்டி
வரைபலதுந் தான்தாண்டி வந்தான்

**விருத்தம்**

வந்ததோர் கணியான் றானும் வாழ்பதி தன்னிற் புக்கி 1185
மந்திர மூர்த்தி யோடு மற்றுள்ள வாதை கட்கும்
தந்திர மாக வூட்டு தான்கொடுத் தேமன்ன ரான
சுந்தர மன்னன் தன்னை தொலைத்திட விடுத்தா னன்றே

### (இசக்கி தாளக்குடியில் செய்த நாசம்)

**வேறு**

அன்றே நாஞ்சி நாட்டில் — அழ
கானதோர் தாளக்குடி யூரை
கண்டே யிசக்கியம்மை — களிப்
பாகவே நின்று மருப்பனிட்ட 1190
ஊட்டுண்டு நால்வருமாய் — உட
னுல்லாச மாய்ச்சென்று மன்னனையும்
நாட்டமு டன்வதைத்து — இவர்
நல்லதோர் தாளக்குடி யூரில்
குளத்தங்கரை யதிலும் — வெகு
கூட்டமாஞ் செந்தாழம் மூடதிலும்
தளியின் முகப்பதிலும் — நல்ல
சக்கரி தூளையின் பக்கலிலும்

நெடுந்தெருவு தனிலும் — நின்று
நேரே சந்திரமுடை யார்கோயில் 1195
அடுத்தாலின் மூடதிலும் அம்மை
அரசின் மடத்தடி தோப்பதிலும்
தினமு மலம்பல் பண்ணி — நின்று
சேரவே மாடு மனிதர்களை
அனர்த்தம் மிக விளைத்து — கொன்று
ஆயிழை சின்ன யிசக்கியம்மை
இனிதாயி ருந்திடவே — மிக்க
தான கரையாளர் தான்கூடி

(கரையாளர் கவலையுடன் சோதிடனை அழைத்துக் குறிபார்த்தல்)

கனிந்து மிகவுருகி — இது
கண்மாய மேதும் அறியலையே 1200
வாதை வலுபேயோ — வல்ல
மூர்த்திகளானது வந்ததுவோ
பாதை யறியவொரு — நல்ல
பாக்கிய சாலியாஞ் சோதிடனைக்
கூட்டிவா வென்றிடவே — ஓடி
குணமுடன் வித்தகரும் நடந்து
கூட்டியே சோதிடனை — இப்பர்
பின்னவர் முன்விடக் காராளர்
விரிவாக வேவுரைக்கக் கண்டு
வித்தார மாகவே சோதிடனும் 1205

(சோதிடன் கட்டம் அடைத்துப் பார்த்தல்)

கரிமுகனை முன்னால் வைத்து
கட்டுட னேதுதி செய்தவனும்
பரிவாகப் பன்னிட்டு — வீடு
பாங்குட னிட்டுக் கிரகங்களைச்
சரியாக வேநிறுத்தி — பலன்
தானே யுரைக்கிறான் சோதிடனும்

(1189-1196) குளத்தங்கரை — குளத்துக்கரை. செந்தாழம்மூடு — செந்நிறம் உள்ள தாழைப்புதர். தளியின் முகப்பு — கோயில் முகப்பு. சக்கிரி சூளை — குயவன் சூளை. சந்திரமுடையார் கோயில் — தலையில் பிறையினைச் சூடித்திகழும் சிவபெருமானின் கோயில். ஆலின் மூடு — ஆலமர மேடு. அரசின் மடத்தடி தோப்பு — அரசமரத்தின் அருகேயிருக்கிற மடத்தினுடைய தோப்பு.

(1197-1205) அலம்பல் — தொந்தரவு. அனர்த்தம் — துன்பம்: கண்மாயம் — கண் கட்டு வித்தை: பாக்கியசாலி — நல்வினை யாளன்: இறையருளால் ஒருவருடைய விதியைக் கூற வல்லவன். சோதிடன் — வருவது கூறுபவன். பாதையறிய — வழியறிய. வித்தகர் — தூதர். வித்தாரமாகவே — விளக்கமாகவே.

### (சோதிடன் கரையாளர்க்குக் கூறல்)

வேளாளரே கேளீர் — இந்த
விதியை யுரைக்கிறே னிப்போது
கோலா கலமாக — வட
குவலையந் தன்னிலே ஆண்டிருந்த 1210
மன்னர்படை பொருது — செத்து
மாதேவன் கிட்ட வரம்வேண்டி
சின்ன யிசக்கி யென்னும் — நல்ல
செல்விஅந்தர யிசக்கி யென்றும்
செங்கிடாய்க் காரனென்றும் — வீர
தீரன் கழுக்காரன் மூர்த்தியென்றும்
சங்கை யுடனாட்டுக் — கார
தைய லெனவும் மலையிலுள்ள
இருபத் தொரு வாதை — வந்து
இன்னல் புரியிது பின்னவரே 1215
கருத்தாகவே யிதனை — யாரும்
கட்ட முடியாது ஆகையினால்
குளத்தங் கரைதனிலே — கூண்ட
நீலன் குறிப்பு வயற்கரையில்
கிழக்கே முகமாக — கல்லால்
கெட்டவே வேண்டு மொருகோயில்
ஆவிநீங்க ளொருப்போல் — கூடி
அலங்கார மாகவே கல்லதனால்
கோயில் முடித்தாலும் — நீங்கள்
கும்பிட வேண்டுந் தினந்தோறும் 1220
மாறாமலே யிரண்டு — காலம்
மங்கள மாய்ப்பூசை செய்யவேணும்
பூராயமாய்ப் பூசை இட்டு
புண்ணிய மோங்க நடந்திடுவீர்
இனிமேலுஞ் சேதமில்லை — இயல்
வாகவே ரெக்ஷிப்பாள் உங்களைத்தான்
அனுக்க மினிவேண்டாம் — அம்மை
ஆதர வாகவே காப்பா ளென்றார்

(1206-1208) கரிமுகன் — யானை முகன்; வினாயகன். கட்டுடனே துதி செய்தவன் — தெய்வ பக்தியுடனே வணங்கியவன். பரிவாக பன்னிட்டு — பக்தியுடன் பன்னீர் தெளித்து (தரையில் மணற் பரப்பி அதனில் கிரகக் கட்டங்கள் அமைப்பதற்குப் பயன்படும்படி ஈரப்படுத்த பன்னீர் தெளித்து) கிரகங்களை சரியாகவே நிறுத்தி — அரசனின் ஜனனத் திற்கு ஏற்ப கிரகங்களை இலக்கினத்தில் இருந்து தொடங்கிக் கிரகங்களை சரியாக அமைத்து.

(1209-1224) வட குவலயம் — வட நாடு. மாதேவன் — சிவபிரான். வாதை — துஷ்ட தெய்வங்கள். கட்ட முடியாது — தடுத்து நிறுத்த முடியாது. நீலன் குறிப்பு — ஒருவனின்



'தாழாக்குடி கரையாளர்கள் நல்லாள் பார்த்து
வெள்ளிக் கிழமை உதயந்தனில் ஒருப்பாலே
தென்னோ லையினாற் கூரை வேய்ந்து'

அமைந்த தேவியின் ஆலயம்



தாழாக்குடி செங்கிடாய்க்காரன், கழுக்காரன் கோயில்

**வேறு**

இப்படியே அந்தச் சோதிடனானவன் சொல்ல 1225
எல்லோருங் கூடியே சம்மதித்து ஏதுசெய்தார்

**(கரையாளர் ஒன்றுகூடி கோயில் கட்டிப் பூசை செய்தல்)**

நட்புடனே வரியிட்டுப் பணமு மெடுத்து
நலமுடனே கரையாளர்கள் நல்லநாள் பார்த்து
வெள்ளிக் கிழமை உதயந்தனி லொருப் பாலே
வினைஞர்கள் கூடிமரம் வெட்டிக் காலதும் நாட்டி 1230
கள்ள மில்லாமலே கல்லால் சுவரதுங் கட்டி
கரையாளர் தானும்தென் னோலையினாற் கூரைவேய்ந்து
சித்தியாக வயலொன்றுக்கு மூன்றரி யிட்டு
சிறப்புடன் காலையும் மாலையும் பூசைநடத்தி
ஒத்த முரசது கொட்டியே பொங்கலுமிட்டு 1235
உளக்கோயிலுக் குள்ளே மஞ்சனை மாலையுஞ் சாற்றி
இன்பமுடன் கோயிலில் பூசை தவறாத வண்ணம்
இரக்கமுடைய கணியானால் பூசை நடத்தி
பொன்னெனப் போற்றியே தாழக்குடி யூரிலுள்ளோர்
என்று உழவர்கள் சந்தோஷமாக யிருக்க 1240
எல்லோருங் கூடி வயலுழுது பயிரேற்ற
நன்னய மாகவே செய்தவினை தவறாமல்
நலமுடன் மாரிபொழிந்து விளைந்து கிடக்க
நலமதா கந்த கணியானும் பூசைநடத்தி
நாள்வழி குப்பையை நீலன்குறுப்பு வயினின் 1245
தலத்தி லெறியவே குப்பை உயர்ந்து உயர்ந்து
சளன்போலவே கதிர்தானுமே முங்கிக் கிடக்ச

பெயர். ஆவி நீங்க — உயிர் போக. கும்பிட — வணங்க. இரண்டு காலம் — காலை, மாலை இருவேளை. பூசை சேதமில்லை — துன்பம், அழிவு எதுவும் இல்லை. அனுக்கம் — அச்சம்.

(1225-1247) நட்புடனே — அன்புடனே. உதயம் — விடியற்காலம். மரம்வெட்டி — கோயில் கட்ட மரம் வெட்டி. கால் — முகூர்த்தக்கால். கள்ளம் இல்லாமல் — குறைபாடு இல்லாமல் — தெளிவாக தென்னோலை — தென்னை ஓலை. கூரைவேய்ந்து — ஓலையால் சிறுகுடில் கட்டி. சித்தியாக — வெற்றி பெறும்படியாக வயல் ஒன்றுக்கு — நிலச்சுவான்தார் வயல் ஒவ்வொன்றுக்கும். மூன்றரி — விளைச்சலுக்கு ஏற்ப மூன்றில் ஒரு பங்கு வரி. ஒத்த முரசுகொட்டி — அந்த தெய்வங்களுக்கு ஏற்ற முரசு கொட்டி. மஞ்சணை — சிறு தெய்வங்களின் உருவங்களின் மீது பூசப்படும் எண்ணெய்க் குங்குமம். மாலை — பூமாலை. மாரி பொழிந்து — மழைபெய்து. நாள் வழிக்குப்பை — அன்றாடம் பூசை நடத்துவதால் ஏற்படும். குப்பைப் பொருள்கள். நீலன் குறிப்பு வயல் — இசக்கி கோயில் கட்ட தேர்வு செய்யப் பட்ட இடம். சலன்போல — வஞ்சகன்போல (வஞ்சகன் தலை சாய்ந்து கொண்டு இருப்பது போல நெற்கதிரும் தலை சாய்ந்து இருக்கிறது என ஒப்பிடுகிறார்)

### (நீலன் குறிப்புக்குத் தூது அனுப்புதல்)

சிறந்ததோர் செந்நெல் விளைந்து கிடக்குது வென்ன
சீருடனே பயிரிட்டவர் கூடி விரைந்து
குறிப்புடனே சொல்லவே வேண்டுமென மனத்தெண்ணி 1250
குணமுடனே யொரு தூதனை விட்டனரப்போ
விட்டதோர் தூதன் விரைந்து வழிதான் நடந்து
வீரமுடன்வன் மேலாங் கோடானதில் வந்து
கட்டுடன் நீலன் குறிப்பின் மனையிற் சென்று
கண்டு வணங்கிட நீலன் குறிப்பு வன்றாலும் 1255
நன்றுடன் வந்ததோர் செய்தி யேதுவெனக் கேட்க
நாடியே தூதுவ னேதுமொழி சொல்லுவானாம்

### (தூதன் செய்தி கூறுதல்)

செந்நெல் விளைந்து கிடக்குத் தூத்திட வென்று
சீருடனும்மை அழைத்துவரச் சொன்னா ரென்றார்
என்றிட நீலன் குறிப்பு நீபோ நாளைவாறேன் 1260
இய்ல்புடன் கூறுகொடுத் தறுக்கச் சொல்லு வென்ன

### (நீலன் வருகையும் செயலும்)

நன்றெனவே வுணவு உண்டு விரைந்து நடந்து
நலமுடன் தாளக்குடி யானதில் வந்து சேர்ந்தான்
வந்து கரையாள னோடந்த வார்த்தையை சொல்ல
வயலு மறுக்கண மென்றவர் ஆள்களைத் தேட 1265
சிந்தை மகிழ்ந்தினம் ரண்டுவேளைத் தப்பாமல்
திடமுடனே கணியாறானும் தினமிருவேளை பூசை
தடையின்றிச் செய்து வாரசமையத்தில் மேலாங் கோட்டு
குடியினில் வாழ்ந்து வந்த குறிப்பெனும் நீலன் செய்த
கொடுமையால் வந்தகேடு கூறுவேன் சபையில் தானே 1270

(1248-1282) பயிரிட்டவர் — நிலத்தை உழுதவர். தூதன் — செய்தி கொண்டு செல்பவன். மேலாங்கோடு — நீலன் உடைய ஊர்; குமரி மாவட்டத்தில் உள்ளது. நீலன் குறிப்பின் மனை — நீலன் குறிப்பின் வீடு.

தூத்திட — தூசி போமாறு நெல்லைத் தூவுதல். இயல்புடன் — நேர்மையுடன். கூறு — பங்கு. அறுக்கச்சொல்லு — அறுவடை செய்யும்படி கூறு.

இதம் — நன்மை, இன்பம். தன் வீடு விட்டுக் கடந்து — தன் வீட்டைத் தாண்டி.

ஒற்றைக் கண் கிழவி — ஒரு கண் ஊனமுற்ற முதியவள் பெரியதடி — பெரிய கொம்பு ஊன்றி. நாவிதன் — அம்பட்டன். அந்தத்தடை — சகுனத்தடை. பிராமணன் — பார்ப்பான் — (ஒற்றைப் பார்ப்பான் எதிர்படுதல் சகுனத்தடை அல்லது காரியத்தடை என்பர்)

வேறு

இப்படியே கணியானும் பூசைசெய்து வரவே
இதம்பெறவே மேலாங்கோட் டூரில்வளர் குறிப்பு
சொற்படியே மறுநாளில் வயலறுப்புப் பார்க்க
சொகுசுடனே அன்னமுண்டு உடுப்புகளு மிட்டு
தன்னுடைய செறுக்கனுடன் கைக்குடையு மெடுத்து 1275
சந்தோஷ மாகவேதன் வீடுவிட்டுக் கடந்து

**(நீலன் குறிப்புக்கு ஏற்பட்ட சகுனத் தடைகள்)**

பின்னேவர ஒற்றைக்கண் கிழவியவள் தானும்
பெரியதடி யூன்றிஎதி ராகவந்து சேர
சந்தோஷ மாகவேதான் அந்தத்தடை விட்டு
தான்திரும்பி வாரபோது நாவிதன்வந் தெதிர்ந்தான் 1280
அந்தத்தடை யானதெல்லாம் தள்ளிவிட்டுப் போக
அப்புறத்தே பிராமணனும் வந்து எதிர்ந் தானே

**(நீலன் குறிப்பு சென்ற வழித்தட விபரம்)**

அந்தத் தடைவிட்டு ஆனைவயல் தடமுமிட்டு
அழகுகுளி மைக்காரும் விலக்குறியு மிட்டு
சுங்கான்கடை வீதிவிட்டு நீலன்குறிப் பவனும் 1285
சுறுக்குடனே தான்கடந்து இடமலையு மிட்டு
கள்ளியங்கா டோடுபுது வூரும்விட்டுக் கடந்து
கருத்துடனே தான்நடந்து வயலதிலே வந்தான்
பொள்ளெனவே நீலன்குறிப் பானவனும் வரும்முன்
புகழுடைய கரையாளர் கூறுபேசி அறுக்க 1290

**(நீலன் குறிப்பு வயலில் கட்டிய கோயில் பற்றி வினவுதல்)**

அறுத்தவயல் கரையில் நீலன்குறிப் பவனும்
ஆரடாஎன் வயல்கரையில் கோயில்வைத்த தென்று
வரப்புசுற்றி வாரபோது விளைந்தபயிர் மேலே
வாரியிட்ட குப்பைகண்டு கோபங்கொண்டு சீற
என்னுடைய வயலதிலே கணியாப்பயல் தானும் 1295

(1283-1300) ஆனை வயல்த்தடம் — ஆனை வயல் வழி. சுறுக்குடன் — விரைவாக. கடமலை — இடமலை என்ற ஊர். கன்னியங்காடு — கன்னியங்காடு என்ற ஊர். புது. வூர் — புதுவூர் என்ற ஊர். கரையாளர் — தாழக்குடியில் வாழும் மக்கள். கூறுபேசி — கூலிபேசி (இன்னார்க்கு இவ்வளவு எனப் பேசிக் கொண்டு)

அறுத்த வயல் — கதிர் அறுத்து முடிந்த வயல். வரப்பு — நிலத்தின் எல்லை. வாரியிட்ட குப்பை — இசக்கி கோயிலில் இருந்து அப்புறப்படுத்தப்பட்ட குப்பை. சீற — கோபமுற. கணியாப் பயல் — ஓர் ஜாதியான்.

சிறுக்கன் — சிறுவன். நெருப்பு எடுத்துவந்து — எரிப்பதற்குரிய நெருப்பு கொண்டு வந்து.

### (நீலன் குறிப்பு நெருப்பு இடுதல்)

இறுமாப்பாய் குப்பைதனை வாரியிட்டா னென்ன
தன்னுடைய சிறுக்கனையும் ஊரதிலே யனுப்பித்
தான்நெருப்பு எடுத்துவந்து தீயதுவும் மூட்டி
என்னசெய்வாள் இசக்கியம்மை எனமனதி லெண்ணி
இசக்கியம்மன் கோயிலிலே தீக்கொளுத்தி விட்டான் 1300

### (ஊர்மக்கள் வருத்தம்)

திண்ணமுடன் வயற்கரையில் வைத்ததொரு கோயில்
தீயெரியக் கண்டுஅந்த வூரிலுள்ளோர் தாமும்
இசக்கியம்மன் திருவுளமே இங்தவுண்டு மானால்
எண்ணியெட்டு நாளைக்குள்ளே கண்டிருக்க லாமே
மசக்கியவர் தங்களையும் இசக்கியம்மை தானும் 1305
மாய்த்துவிடு வாளெனவே மகிழ்ச்சியுட னிருந்து
இவனோடு சண்டையிட்டு எதிராடு வானேன்
இசக்கியம்மை யுண்டுமானால் கண்டிருக்க லாமே
பவம்நீங்கிக் காப்பாளென தாழக்குடி யூரார்
பாங்குடனே தானிருக்க வயலுறுத்து வந்தார் 1310
கொண்டுவந்து சூடுவைத்துக் காலத்தாலே யடித்து
கூண்டயெலி யுமழந்து கோட்டைதுகை கண்டார்
கண்டபோது காய்ச்சலுடன் மண்டையிடி கூட
கண்ணுவிரி யாத்துடனே அன்னங்குடி யாமல்
நீலன்குறிப் பானவனும் கண்கலக்கங் கொண்டு 1315
நீதியுட னிங்கிருந்தாள் இடருவரு மென்று
காலமேதா ணெழுந்திருந்து சிலுக்கனுடன் கூடி
கட்டுடனே தாளக்குடி விட்டு நடந்தானே

(1301-1318) இசக்கியம்மன் திருவுளமே — இசக்கியம்மனின் சக்தி இங்கு உண்டு மானால். கண்டிருக்கலாமே — நாம் உணர்ந்து கொள்ள முடியும் (அதாவது எண்ணி எட்டு நாளில் இத் தீச் செயலுக்கு இசக்கியம்மை நீலன் குறிப்பைத் தண்டிப்பாள் என்பதாம்) மசக்கியவர் — அழகு முதலியவற்றால் மயக்குபவர். மாய்ந்து — கொன்று. எதிராடுவா னேன் - வாதம் செய்வானேன். பவம் — துன்பம். சூடு வைத்து — மாடுகட்டி வட்ட வடிவில் நெல்மணிகளைப் பிரித்து எடுக்கும் பணி செய்து. கோட்டைத் தொகை — 21 மரக்கால் கொண்ட ஓர் அளவு. கண்ட போது — கணக்குப் பார்க்கும் போது. கண்ணு விரியா துடனே — கண் திறக்க முடியாதபடி. அனல் பரவ. அன்னம் முடியாமல் — சோறு உண்ண முடியாமல். கணமலங்க — துயரம் கொள்ள. நீதியுடன் — தரும முறைப்படி. இடர் — துன்பம். காலமே — விடியற்காலை. சிலுக்கன் — சிறுக்கன்.

(1319-1331) பாழான நிலத்தின் பயிர்போல — வரண்ட நிலத்துப் பயிர்போல. நினைப்பு பலியாமல் — எண்ணியது நிறைவேறாமல். அங்குள்ள பேர் அறியாமல் — தாழக்குடியில் உள்ள கறையாளர்கள் அறியாமல். வாடி — மனம் சஞ்சலப்பட்டு. ஒருவர்க்குஞ் சேதி சொல்லாமல் — யாருக்கும் தகவல் தராமல்.

## (நீலன்குறுப்பு தாளக்குடி விட்டுப் போதல்)

**வேறு**

தாளக்குடி விட்டு நீலன்குறுப்பு
 தண்ணுடைய சிறுக்கனையும் கூட்டி
பாழான நிலத்தின் பயிர்போல நினைப்பு
 பலியாம லங்குள்ள பேரறி யாமல் 1320
வாடி யொருவர்க்குஞ் சேதி சொல்லாமல்
 வந்ததோர் நீலன் சிறுக்கனுடனே

## (இசக்கி நீலன்குறிப்பைப் பின்தொடர்தல்)

ஓடி நடக்கிற வேளை தனிலே
 உரமுடன் அந்திர யிசக்கியுடனே
சின்ன யிசக்கியும் செங்கிடாய்க் காரன்
 தீர முடன்வர கொக்கோட் டிசக்கி
மன்னவன் மூர்த்திமார் ஐவருடனே
 மங்கைமே லாங்கோட் டிசக்கியுங் கூடி
இங்கே யிவனைநாம் கொன்றோமே யானால்
 எவரு மறியவே மாட்டார்க ளிப்போ 1325
சங்கையுடன் மேலாங் கோட்டூரில் வந்து
 சடிதியில் கொல்லலா மென்னவே எண்ணி
எல்லோருங் கூடி குறிப்பை முன்விட்டு
 எழிலுடன் பின்னாலே வார பொழுது
தள்ளாடித் தள்ளாடி நீலன் குறிப்பு
 தடங்கல் பலதுங் கடந்து நடந்து
வல்லமை குன்றியே மேலாங் கோட்டூரில்
 வந்து தன்னில் வில்மனையடி னொன்றும்
கொல்லாமல் பாயில் விழுந்து கிடக்க
 சுறுக்குடன் மந்திரமூர்த்தி யடிக்க 1330

## (நீலன்குறிப்பு கொல்லப்படுதல்)

இசக்கியம்மன் கோயில் தன்னை எரித்து
 இழுதையாம் நீலன் குறிப்பு மிறந்தான்
பசப்புடன் தீக்கொண்டு வந்த சிறுக்கன்
 மாண்ட பிறகிவர் எல்லோரும் கூடி

ஓடி நடக்கிற வேளை தனிலே — வேகமாக ஓட்டமும் நடையுமாக வருகிற வேளையிலே. மேலாங்கோட்டிசக்கி — மேலாங்கோட்டூரில் கோயில் கொண்டுள்ள இசக்கி. சடுதியில் — விரைவில். குறிப் பை முன்விட்டு — நீலன்குறிப்பை முன்னே போகவிட்டு. தடங்கள் பலதுங் கடந்து — சகுனத்தடைகள் பல கடந்து. வல்லமை குன்றியே — உடல் வலிமை குன்றியே. இழுதை — அறிவற்ற.

(இசக்கி மேலாங் கோட்டூரை அழித்தல்)

மாடுடன் ஆடு மனிதரைக் கொல்லத்
 தாண்டியே செத்தவர் வீட்டுக்கு வந்த
சனங்களையு மிவர் கொல்லுறார் பாராய்
 கொன்று மேலாங் கோட்டு ஊருக்கு பக்கல்
குளத்தங்கரை யிலிவர் கூடி நிற்க
 பண்டுள்ள சொந்தம்கொக் கோட்டூ ரிதன்னில் 1335
நீலன் குறிப்பு இறந்ததைக் கேட்க
 நினைத்தவஞ் மேலாங்கோட் டூரிலே வந்து
கோலமெல் லாங்கண்டு கேட்டு வூருக்கு
 குணமுட னேநடந் தேகிற வேளை
தக்ஷண மாக இசக்கியம் மையுமே
 சதிக்கண மென்ன இவன்பிற காலே
நிச்சயமாய்ச் சென்று ஊர்போகக் கொன்று
 நிமிசத்திலே கொக்கோட்டு ஊரிலுள் ளோரை
கொன்று யிசக்கி யம்மனுடன் வந்தோர்
 கூடி யிருக்கிற நேரந் தனிலே 1340

(மக்கள் சேரமான் தம்பிரானிடம் முறையிடுதல்)

சென்றந்த மோலங்கோட் டூரிலுள் ளோர்கள்
 சேரமான் தம்பிரான் னிடமதில் வந்து
நாட்டுக் கதிபதி சேரமான் மன்னா
 நாங்க ளிதுவரை யும்பொறுத் தோமே
காட்டுக்குள் வாழ்கின்ற வாதையோ பேயோ
 கனத்தநல் மூர்த்திமார் தானோ அறியோம்
மேலாங்காட்டூரு அழியுதே மன்னா
 மேலும் நாங்களந்த வூரி லிருக்க
ஏலாது ஆகையால் நீரும் உணர்ந்து
 எங்களை யங்கு குடியா யிருத்தும் 1345
மன்னனே யென்று குடிக் ளுரைக்க

(மன்னன் சோதிடனை அழைத்தல்)

 மறுத்துன்ர கூறுவான் சேரமான் நானும்
இன்னேரஞ் சோதியன் றன்னை யழைத்து
 என்முன்னே கொண்டு வரவேண்டு மென்றான்

(1332-1375) மேலாங் கோட்டூரிலுள்ளோர்கள் — மேலாங்கோட்டூர்வாசிகள். சேர மான் தம்பிரான் — திருவிதாங்கூரைத் தலைமையகமாக வைத்து ராச்சியம் ஆளும் அரசர். ஏலாது — முடியாது.

ஏவலாளர் — பணியாட்கள். சொந்தமுடன் — உரிமையுடன் கெணிதமிட்டு — கிரகங் களை ஆராய்ந்து.

**வேறு**

என்றரச னுரைத்திடவே ஏவலாளரை யனுப்பி
நன்றெனவே சோதிடனை நலம்பெறவே கூட்டிவந்தார்
வந்தவனைத் தான்பார்த்து வழுத்தலுற்றான் சேரமன்னன் 1350
சொந்தமுடன் வந்ததொரு சோதிடனே யிப்போது
கேடுவந்த காரணத்தைக் கணிதமிட்டுச் சீக்கிரத்தில்

**(சோதிடன் துன்பத்திற்குக் காரணம் கூறுதல்)**

நாடறியச் சொல்லுமென நலமுடனே சோதிடனும்
பன்னிரண்டு வீடமைத்து பாங்குடனே கோள்நிறுத்தி
நன்னயமாய்ப் பலன்பார்த்து நவிலலுற்றான் மன்னவர்க்கு 1355
சேரதேசம் ஆளும்மன்னா தீங்குசெய்யும் பேர்களவர்
வாரணஞ்சூ ழுலகுதனில் வளவனுட தேசத்தில்
கோட்டையிட்டு ஆண்டிருந்த கொடியிடைமார் தான்மடிந்து
வாட்டமின்றி சிவனிடத்தில் வந்துவரம் தான்வாங்கி
கூடல்நகர் தானழித்து குணமுடனே பூசையுண்டு 1360
நாஞ்சில்நா ட்டானதிலே நலம்பெறவே பூசையுண்டு
வாஞ்சையுட னிருக்கையிலே வளர்தாளக் குடியூரில்
இங்கிருந்து நிலமறுக்க ஏகினநீலன் குறிப்பு
வங்கிசமு மழிவதற்கு வன்னிவைத்தான் கோயிலிலே 1365
கோயிலிலே தீயெரியக் கூடியெங்கு நின்றவர்கள்
போய்வருவோ மென்றுயிவன் பிறகாலே வந்துகொன்று
ஊரையுந்தான் குழப்புகிறார் உண்மையுடை வாதைகள்தான்
பாரமுடனே யிவர்க்கு பண்டுபோலே கோயில்கட்டி
பூசையிட்டால் தீங்குமில்லை புகழுடைய மன்னாவென 1370
சோதிடனு முரைத்திடவே சொல்லுவானாம் சேரமன்னன்

**(கோட்டம் அமைக்க நாள் பார்த்தல்)**

கோட்டமொன்று அமைப்பதற்குக் குணமுடைய தலம்பார்த்து
நாட்டமுட னுரையுமென நவிலலுற்றான் சோதிடனும்
பொத்தையடி மாயிசக்கி புகழ்தளிக்குந் தெற்காக
சித்தியுடன் நாள்பார்த்துச் சினகரஞ்செய் தேமுடித்து 1375
பூசையிட்டு நீங்கள்துதி புரிந்துவர நன்மையுண்டு
தோஷமில்லை என்றுரைக்க சோதிடனைத் தானனுப்பி

பன்னிரண்டு வீடு — சோதிடம் பார்க்க அமைக்கப்படும் 12 இராசி கட்டங்கள் கொண்ட வரைபடம். கோள் — கிரகங்கள். நன்னயமாய் — உபசாரமாய். வளவனுட தேசம் — சோழராஜ்ஜியம். வங்கிசம் — வம்சம். வன்னி வைத்தான் — நெருப்பு வைத்தான். பண்டுபோல — முன்புபோல.

கோட்டம — கோயில். தலம் — இடம். தளி — கோயில். சினகரம் — சிறுகோயில். தோஷமில்லை — குற்றமில்லை.

## (மன்னன் கோயில் கட்டி பூசை செய்தல்)

குறித்தயிடந் தனில்அரசன் குணமுடைய தபதியரால்
தறித்துமரம் பணிப்படுத்தித் தலத்தில்வந்து சேர்ந்திடவே
நாள்பார்த்துக் கோயில்கட்டி நலமுடனே உருவெழுதி 1380
தாழ்ச்சியில்லாப் புகழ்வார மிதன்னில்பணி தான்முடித்தார.

## (கோயிற் பூசையும் இசக்கியம்மை காட்சியும்)

வேறு

ஆசையுடன் கோயில்வைத்து அல்லோருந் தான்மகிழ்ந்து
அடைவாய் மேலாங் கோட்டில் நிற்கின்ற
அல்லோர்க்குஞ் சந்தோஷ மாகவே
பூசையது தான்கொடுக்கப் புந்தியிலே தர்ன்நினைத்து 1385
பொருந்தும் வில்லுப்பாட்டுக் கொட்டு கூட்டியே
புகழதாக்க கோப்புகளுண் டாக்கினார்
துங்கமுடன் துள்ளுமறி யோடுகடா மாலைகளும்
சுறுக்குடனே தான்வருத்தி வைத்துமே
சொன்னபடி ஊட்டிட வேண்டுமென 1390
சங்கையுடனே குரவர்தான் தனுசிலே பாட
தையல் நல்லார்கள் குரவை பாடவே

## (இசக்கி நீரிட்டு ஆசி கூறுதல்)

சன்னத மானா ளிசக்கி யம்மையும்
அம்மையவள் சன்னதமாய் அல்லோர்க்கும் நீறிடவே
ஆனந்த மாயங்கு வந்த பேர்கள்தாள் 1395
அடிபணிந்து அவரவருஞ் சென்றனர்
செம்மை யுடன்சென்ற கொக்கோட் டூரிலுள்ள மானிடவர்
தேவிக்கு அவ்வூரிற் கோயில் கட்டியே
சிறப்புடனே பூசையிட்டு வைத்தனர்
எல்லோரும் பூசையுண்டு இனிதா யிருக்கையிலே 1400
ஏணிதனையாளும் சேர மன்னனும்
இட்டபடியால் பூசை யுண்டுமே
நல்லது போலமேலாங் கோட்டூரிலே யிசக்கியம்மை
நலமுடனே கண்ட நடுச் சொல்லியே
நாயகியும் பூசையுண் டிருந்தனள் 1405
இப்படியே ஊரிலுள்ளோர் எல்லோருமே கூடி
இசக்கியம்மை நல்லவள்தா னென்னவே

(1377-1392) தபதியர் — சிற்பியர் — கோயிலுக்குரிய விக்கிரகங்கள் செய்து தரக் கூடியவர். உருவெழுதி — தெய்வத்தின் சிலைக்கு கண் பகுதியை செதுக்கி. புந்தியில் — புத்தியில். தூங்கமுடன் — பரிசுத்தமுடன். தனுசு — வில்; தையல் நல்லார் — பெண்கள். குரவை — நாவாற் குழறி இடும் மகிழ்ச்சியொலி.

எண்ணி யனைவரும் போற்றி ஏகுவார்
இப்படியே எல்லோரும் இறைஞ்சித் தொழுதிடவே
ஏந்திழை இசக்கி யம்மை தானுமே 1410
எழிலுடனே வீதி யெங்குஞ் சுற்றவே
கூடியவ ரெல்லோரும் கும்மாளி தான்போட்டு
குணமுடன் கூடவெங்குஞ் சுற்றி வந்திட
கூடிப் பொந்துத் தடியுடன் மூர்த்தியும்
ஆடிக்களிப்பாய் வரவே அலறி விழியெறிய 1415
அரிவவையர் குரவை யொலியிடவே
அம்மன் பொன் னிசக்கியும் மகிழ்ந்திடவே
ஆசையுடனே துதிக்கும் அன்பர்களைத் தான் காத்து
அக்கிரமஞ் செய்பவரை வாட்டியே
அன்னை யெனவே யிசக்கி யம்மனும் 1420
பூசையுண்டு சேரமன்ன னாளுந்தேச மானதிலே
புகழுடனே கோடிக்கால மாகவே
புகழுமரி கோட்டைகாத்து நின்றாள்

**விருத்தம்**

ஆவலாய் மேலாங் கோட்டு அம்மை மரியின் கோட்டை
காவலாய் நின்று கொண்டு கனிந்திடும் அடியார் முன்னில் 1425
ஏவலாய்ச் சென்று கீர்த்தி எங்குமே வணங்கி நிற்க
தேவராயத் துதியுமேற்றுத் திடமுடன் வீற்றி ருந்தாள்.

**வேறு**

இருக்குமந்த நாளையிலே ஏந்திழையா ளிசக்கியம்மை
திருத்தமுட னிருப்பதற்குச் சினகரமுந் தான்முடித்து
விளக்கேற்றிப் பூசிக்கவே வேந்தனிட்ட வரிசையினால் 1430
பழக்கமுட னிருவேளை பணிவுடனே பூசைபண்ண
தூரியங்க ளார்ப்பரிக்கச் சொகுசுடனே யிசக்கியம்மை
சூரியன்போல் பிரகாசச் சொரூபமுட னேயிருக்க
பக்கத்திலே மற்றுமுள்ள பாரவலு வாதை நிற்க
சித்தத்திலே யிசக்கியம்மை சிந்தித்துடனேது சொல்வாள்
மலையாளந் தனிலிருந்தால் மற்றொருவ ரறியார்கள்
சலியாமலிடந் தோறும் தான்நடந்து வூட்டு வுண்டு
சிஷ்டர்களை ஈடேற்றி இதமுடனே நாமிருந்து
துஷ்டர்களை சிக்ஷைசெய்ய தொடங்கிடுவோ மென்ன வெண்ணி

(1393-1439) சன்னமானாள் — தெய்வம் ஒருவர் மீது எழுந்து கூறுகை நீறிடவே — ஆசிகூறி திருநீறிடவே. கும்மாளி — மகிழ்ச்சியில் ஆடுதல். பொந்துத்தடி — ஒருவகை மர ஆயுதம். தூரியங்கள் — இசைக்கருவிகள். ஆர்ப்பரிப்ப — முழங்க. பார வலுவாதை — கொடுமை நிறைந்த சிறு தெய்வங்கள். மலையாளம் — மலைசூழ்ந்தநாடு. சலியாமல் — வெறுப்பு அடையாமல். இடம்தோறும தான் நடந்து — பல இடங்களுக்கு நடந்து சென்று. இஷ்டர்கள் — நண்பர்கள். சிக்ஷை — தண்டனை.

## (இசக்கி தீர்த்தமாடப் புறப்படுதல்)

கட்டுடனே இசக்கியம்மை கன்னியா குமரியிலே 1440
செட்டுடனே நாமள்சென்று தீர்த்தமாடி வருவோமென
மந்திர மூர்த்தியுடனே மன்னவன்பொன் காத்தவனும்
தந்திரவான் கழுக்காரன் தானிவர்கள் கூடவர
மற்றுமுள்ள வாதைகளும் மகிழ்ந்தவர்கள் சேர்ந்திடவே
நற்றவத்தால் வரங்கள்பெற்ற நங்கைநல்லா ளிசக்கியம்மை 1445
குளிமைவனந் தான்கடந்து கூடிவந்தோர் குரவையிட
விழியெறிந்து யிவர்களெல்லாம் வில்லூனி மன்றம்விட்டு
சாலைவழி யாய்வரவே தந்திரவான் மூர்த்திசொல்வான்
கோலமுடன் சுசீந்திரத்தின் கோட்டம்வழி போவோமென்ன
துறட்டுக் கோடம்பலமும் சுங்கான்கன வீதிவிட்டு 1450
கறட்டுவழி யானதொரு கள்ளியங்கா டதுவுமிட்டு
பேர்பெரிய பெருவிளையும் பிறகு வாணி யன்மடமும்
சேரவே யிவர்கடந்து செம்பன்குள தானுமிட்டு
தாகமுடன் கோட்டாறு தான்கடந்து பேட்டைவிட்டு
வாகையடித் தெருவுமிட்டு வாராளே யிசக்கியம்மை 1455
ஆனைப்பா லங்கடந்து அறுமூன்றாம் படியுமிட்டு
மோனமுற்ற அத்திரிதான் முன்னிருந்த பள்ளிகண்டு
தாணுமா லயனாரும் தானிருக்குஞ் சுசீந்திரத்தில்
கோணலின்றி வந்துநின்று குருபரனைத் தான்தொழுது
அன்னமெனவே நடந்து ஆயிழையா ளிசக்கியம்மை 1460
கன்னியாகுமரி சென்றுகடல் தீர்த்தமாட வென்ன
சேகரமாக நடந்து சுசீந்திரமுந் தான்கடந்து.
பூதரத்தின் பக்கல்வழி பொங்கமுட னேநடந்து
சக்கரைக் குளமுமிட்டு சடுதியிலே தாயாரும்
ஒக்கவரு வாருடனே உயர்ந்தோரின் அகரமிட்டு 1465
நிச்சயமாய் நிலத்தேவரை நேரிழையாள் கண்டவுடன்
பக்ஷமுள்ள மூர்த்தியொடு பாங்கில்நின் றோருக்குரைப்பான்

*(1440-1447)* கன்னியாகுமரி — முக்கடல் கூடம் இடம். இந்தியாவின் தென்முனை நாமள் — நாம் தீர்த்தமாடி — புனித நீராடி. மந்திர மூர்த்தி — மந்திர மூர்த்தி என்ற பரிவார தெய்வம். மன்னவன் பொன் காத்தவன் — செங்கிடாய்க் காரன். தந்திரவான் கழுக்காரன் — தந்திரம் நிறைந்த கழுக்காரன் என்ற சிறு தெய்வம். குளிமை வனந்தான் கடந்து — குளிர்ச்சி பொருந்திய பல வனங்கள் கடந்து. வில்லூ ணிமன்றம் — ஒரு ஊர். சுசீந்திரக் கோயில் உள்ள ஊர்.

*(1448-1467)* துறட்டுக் கோட்டம்பலம் — ஓர் ஊர். சுங்கான்கன வீதி — ஓர் ஊர்: கறட்டு வழி — மேடு பள்ளமான வழி. கனி கன்னியங்காடு — ஓர் ஊர். பெருவிளை — ஓர் ஊர். வாணியன்மடம் — ஓர் ஊர். சென்பன்குளம் — ஒரு ஊர். கோட்டாறு — ஓர் ஊர் பேட்டை — ஓர் ஊர். வாகையடித்தெரு — ஒரு ஊர். ஆனைப்பாலம் — ஓர் ஊர்: 'அறு மூன்றாம் படியுமிட்டு மோன முற்ற அத்திரிதான் முன்னிருந்த பள்ளி கண்டு' — இந்திரிமுனிவர் முன்பு தவமிருந்த இடத்தைக் கண்டு. தாணுமாலயன் — சிவபெருமான்:




'அன்னமெனவே நடந்து ஆயிழையாள் இசக்கியம்மை
கன்னியா குமரிசென்று கடல்தீர்த்த மாடவென்ன'

**வந்த சங்கிலித்துறையும் அங்கமைந்த பகவதியம்மனும்.**



**வேறு**

கன்னி பகவதி ஊரினில் வந்து கருத்தா யிசக்கியம்மை
நிலத்தேவரை கண்டு களிந்து நின்றேது சொல்வாள்

## (இசக்கியின் கட்டளை)

இன்னிலந் தன்னிலே நன்மையுடன் வந்தோம் எதிராளி
யில்லாமையால்
இங்கேயும் திண்டுகள் மிண்டுகள் செய்யாமல் எழிலுடன்
நீராடி 1470
வந்திட வேண்டுமென அம்மை மூர்த்திக்கு வாக்குக் கொடுத்த பின்பு
வனிதை பகவதி கோட்டத் துள்ளாகவே வந்து யிசக்கியம்மை

## (பகவதி இசக்கியை வினவுதல்)

நின்றுதொழு திடகண்டு பகவதி நீவந்த தேதெனவே
நீதியுடனே யிசக்கி எனும்அம்மை நின்று பதிலுரைப்பாள்
தெக்ஷணந் தன்னிலேவந்து கடலினில் தீர்த்தமுந் தானாடி 1475
சிறப்புடன்நின் றிங்கேபூசை யுண்ணவந்தோம் தேவி
எனத்தொழுதாள்
அக்கணம் அம்மைமனது குளிர்ந்தவள் ஆயிழையைப் பார்த்து
ஆழியிற்சென்று நீதீர்த்த மாடியிங்கே ஆதரவாய் வருவாய்
என்ன பக வதியம்மை யுரைக்க இசக்கியம்மன் மகிழ்ந்து
எழிலுடன் வேளையிற்சென்று தீர்த்தமாடி ஏந்திழை
தானும்வந்து 1480
பகவதி யம்மைதனையே தொழுதிட பரமசுந் தரியவளும்
பாவையேஎன் னெனக்கேட்க யிசக்கியும் பகருவா ளோருரைதான்

## (இசக்கி பகவதியிடம் வரம் கேட்டல்)

செகமெங்கும் நாங்களும் சென்று பூசையுண்ண தேவி வரமருள்வாய்
தெக்கணந் தனிலும் தென்கொம்பு ஊரினில் சென்று அதிலிருந்தும்
ஆளும் குளக்கரை ஆனமறுகாலில் அன்புடன் வாழுமையன் 1485
அகத்திலும் பூசையுண் டன்பா யிருந்திட ஆதரவாக வேதான்
ஏழைக் கிரங்கி வரங்களைத் தந்துநீ ரெக்ஷ்ப்பாய் தேவியென்ன

சுசீந்திரத்தில எழுந்தருளியிருப்பவர். குருபரன் — சிவபிரான். சுசீந்தரம் — ஓர் தலம். பூதரம் — மலை. பக்கல் வழி — அடுத்த வழியாக. மலையைச் சுற்றிக்கொண்டு சக்கரைக் குளம் — ஓர் ஊர். நிலத்தேவர் — பிராமணர்.

(1468-1496) எதிராளி — பகைவர்கள். திண்டுகள் மிண்டுகள் — திண்டு முண்டு — எதிரிடைப்பேச்சு. வனிதை — இசக்கியம்மை. ஆழி — கடல. வேளை — கடல். தீர்த்த மாடி — புனித நீராடி. பரமசுந்தரி — அழகிய பகவதியம்மை. செகம் — உலகம். பூசை உண்ண — பலி கொள்ள. தெக்கணம் — தெற்கு. தென்கொம்பு — ஓர் ஊர். குளக்கரை —



தென்கொம்புரூர் தேசத்துக்கருகாகத் (தெங்கன்புதூர்) தோன்றும்
மறுகாலில் நிற்கின்ற ஐயன் ஆலயம்
(ஹரிகரபுத்திரன் ஆலயம்)



'மாரிபொழித்து நீராடுகிற ஓமடை மார்க்கம்'



ஓமடைமார்க்கத்தில் அமைந்துள்ள கோயில்.



ஓமடைமார்க்கத்தில் எழுந்தருளியுள்ள தெய்வமான
பெண்ணரசியரும் தோழியரும்

### (பகவதி கேட்டது அருளல்)

எழிலுடன அம்பிகை தானு மிரங்கியே இசக்கியம்மை கேட்ட
வரங்களது கொடுத்தானது மற்றுள்ள வாதை யுடனிசக்கி

### (இசக்கி தென்கொம்பூர் ஏகல்)

வல்லமையொடுதென் கொம்பூரில் செல்லவே வனிதையகம்
நின்னத்து 1490
உரமுடன் சின்ன யிசக்கியும் ஆடி உருத்திரனைப் போற்றி
உண்மையுடன் கூடி வந்தவர்க்கும் வரம் உதவவே தான்வாங்கி
கன்னல்மொழி யெனுஞ்சின்ன இசக்கியும் காதலாய்க் கூடவந்த
கல்யாணங் காத்தோ னுடன்கழுக் காரனும் கட்டுடை மூர்த்திகளும்
இன்னும் பலரு மெழுந்து நடக்க இசக்கியம் மன்மகிழ்ந்து 1495
எல்லோருங் கூடியே தென்கொம் பூருக்கு ஏகி நடக்க லுற்றார்

### (இசக்கி வந்த வழி கூறல்)

நடக்கும் வழிதனில் குண்டலுஞ் சுக்குப்பார் நாடிக் கடந்திவரும்
நன்மையுட னகுத்தீசர் புரமும் நளினத்தூ ருங்கடந்து
வடக்குத் தெற்காக கிடககும்மண் கோட்டையும் வாக்குடனே கடந்து
வலிமை யுடனே மூணாத்து முகப்பும் வளர்புத் தளமுமிட்டு
அருகே யிருந்த அழவர் குடியை அழித்துக் குரவை யிட்டு
ஆவ லுடனே யவர்களும் பால்குளம் அற்றங் கழிந்தவுடன்
துரிதமுடனே நடந்து தென்கொம்பூரர் தேசத் தருகாக
தோன்றும் மறுகாலில் நிற்கின்ற ஐயனைத் தோத்திரஞ் செய்திவரும்
ஐய னுடையதோர் கோயி லருகா யமர்ந்து குரவையிட 1505
ஆனதோர் மந்திர மூர்த்தி தடிகொண்டு அங்குமிங்கு மோட
பைய அரிஹர புத்திரன் றன்னைப் பணிந்து சிலநாளாய்
பாங்குடன் நின்றங் கொருவ ரறியாமல் பாரில் மாடாடுடனே
மக்களையுங் கொன்று நின்றிட அங்குள்ள மாந்தரிது வறிந்து
மாரி பொழிந்து நீராடுகிற ஓமடை மார்க்கத்தில் கோயில் வைத்து
1510

ஓர் ஊர். ஆனமறுகால் — குளக்கரையை அடுத்து ஓடும் வாய்க்கால். அய்யன்சாஸ்தாவல் வமையோடு — சகல சக்தியோடு. உருத்திரன் — ருத்திரன். கன்னல்மொழி — கரும்புச் சுவை போன்று தித்திக்கும் மொழி. கழுக்காரன் — இசக்கியின் பரிவாரங்களின் ஒன்று. கட்டுடை மூர்த்தி — இசக்கியின் ஆணைக்குக்கட்டுப்பட்ட மூர்த்தி.

(1497 — 1516) குண்டல, சக்குப்பாறை, அகத்தீசுரம், நளினத்தூர் மண்கோட்டை மூணாத்து முகப்பு, புத்தளம், அழவர்குடி, பால்குளம் — அகத்தீசுரம் தாலூக்காவில் அமைந்துள்ள சில ஊர்கள். மறுகா — வாய்க்காலில் தண்ணீர் மிகுந்து வரும்போது மிகுந்த நீரைத் திருப்பிவிடப பயன்படும் வாய்க்கால்.

திக்கெங்கும் போற்றிட பூசை புரிந்து தெரிசித்துத்தானிருக்க
தேன்மொழியா ளும்குடியை வளர்த்து சிறந்து அதிலிருந்து
எப்பொழுதுந் துதிசெய்து வருபவர்க் கின்னல்பல தீர்க்க

எழிலுடன் ஆள்உரு விட்டிடக் கண்டு
இசக்கியம்மன் றானும்
நட்புடன் சந்தோஷமாகவே தென்கொம்பு
நாட்டி லினிதிருக்க 1515
நடந்தகதைகள்பலது முரைக்கிறேன்
நன்மையுடன் கேளீர்

## (தென்கொம்பு நாட்டு நிகழ்வுகள்)

**வேறு**

கேளுமே யிசக்கியம்மை கீர்த்தியாய் படையுடனே
கெம்பீரமா யிருக்கும் நாளில்
ஓடக்கரை தன்னில்நிற்கும் ஆலமர மூடதிலே
ஒருவேளை தானிருப்பா ளம்மை
அம்மையவள் தோழியுட னாதரவாய்க் குரவையிட்டு
ஆரபார மாகஅங் கிருக்க
அன்புடனே வந்துதொழும் ஆளுகளை ஆதரித்து
ஐயனுட ஆதரவி னாலே 1520
வம்புபண்ணும் துஷ்டர்களின் வாணாள்த் தான்மடித்து
வாழ்ந்திருக்கும் வேளையது தன்னில்
காரணமாய் முன்நாளில் காட்டுவிளை யூரதிலே
கண்டனையனை; தொழுதிருந்த
திக்குக்குடி நாடான்றன் சிறப்புடைய வங்கிசத்தை
திருவிழியால் பார்க்க வந்தாரைய்யா
ஐயரவர் படையோடே ஆதரவாய் வாறபோது
அடுத்துவந்தா ளிசக்கியம்மை தானும்
காட்டுவிளை யூரதிலே கட்டுடனே வந்தபோது
கண்டனைய னோடுரைப்பா ளம்மை 1525

அரிகர புத்திரன் — ஐயப்பன். ஓமடை — கார்காலத்தில் மழைநீரை வாங்கும் வாய்க்கால் (மழை பொலிந்தால் நீர் வழிந் தோடுகிறவழி).

(1517-1527) கீர்த்தி — புகழ். ஓடைக்கரை. மூடு — ஆலமரம் அருகே உள்ள புதர்மேடு. ஆரபாரமாக — ஆரவாரமாக. காட்டுவிளை — ஓர் ஊர். கண்டனையன் — கண்டன் எனப்படும் ஐயப்பன் திக்குக்குடி — ஒரு ஊர். நாடான் — நாடார் சமூகத்தைக் குறிக்கும் ஒருமைச் சொல். வங்கிசம் — வம்சம். ஐவரவர் — சாஸ்தா. படையுடனே — தன் பரிவாரத்துடனே. ஆதரவாய் வாறபோது — அருள்புரியும் நோக்குடன் வரும் போது. காட்டுவிளை — ஓர் ஊர் கட்டுடனே — தனது ஆணைக்கு உட்பட்ட பரிவாரத்துடனே. யீசர்மகன் — சாஸ்தா எனப்படும் மணிகண்டன் ஆகிய ஐயப்பன். எழில் கண்டனையர் — ஐயப்பன்.

(இசக்கி தன் தனையனிடம் கூறுதல்)

உம்மை நம்பி யிங்கு வந்தோம் உதவிவேறில்லை யையயா
ஊட்டுணவு யிக்காலத்தில் வேண்டும்
என்றுசொல்லி யிசக்கியம்மை யீசர்மக னோடுரைக்க
எழில்கண் டனையர் சம்மதித்து

(ஐயன் காணியாளனுக்குக் கூறியது)

கயிலைவரம் வேண்டிவந்த காணியாளன் றனையழைத்து
கட்டுடனே ஏதுசொல்வா ரையா
என்குடையைப் பார்க்க வந்தே னிசக்கி யம்மை பின்னேவந்தாள்
இங்கு பூசை வேண்டு மெனக் கேட்டாள்
அம்மையவள் கேட்டபோது ஆதரவாய் சம்மதித்தேன்
ஆனகாணி யாளர்ஒன்று கேளு 1530
கோயில்வைத்துக் கொடைகொடுத்தால் குறையொருநாள் வாராது
கூடிநீங்க ளெல்லோரு மிப்போ
காட்டுவிளை யூரதிலே கல்லடித்துக் கோயில்கட்டி
காரணமாய் நீர்வணங்கு மென்ன

(காணியாளர் காட்டுவிளையில் கோயில் கட்டுதல்)

காணியாளர் சம்மதிக்கக் கட்டுட னிசக்கியம்மை
கண்டனைய னோடுஒன்று சொல்வாள்
காட்டகத்தில் நானிருந்தால் கடுமுதவி யில்லையென்ன
காரிகையாள் தானுரைத்த போது
நானுதவி யுண்டுமென வுரைத்து ஐயர்
நாடிச் சென்றார் தெங்கொம்புரூர் தன்னில் 1535
மந்திரத்துள் ளடங்காத மாதவ ளிசக்கியம்மை
மன்னன் மந்திரமூர்த்தி கழுக்காரன்
ஆட்டுக்கார யிசக்கியுட னந்திர யிசக்கியுமாய்
ஆகயிவர் சேகரமாய் நிற்க
ஐயனுரை தவறாமல் அல்லோருந் தான் கூடி
ஆயிழைக்குக் கோயில் கட்ட வென்ன
கோயிலுக்கு ஏற்றமரம் குணமுடனே தான்தறித்து
கோலாகல மாகப்பணி செய்து
கல்லடித்துச் சுவர்கட்டி காட்டுவிளை யூரதிலே
கனம்பெறவே செய்துமுடித் தாரே 1540

(1528-1534) குடை — கொடை — கிராமதேவதைக்கு செய்யுந் திருவிழா. கல்லடித்து — சிலைக்கல் அடித்து. கடுமுதவி — சிறந்த உதவி. காரிகையாள் — பெண்.

(1535-1561) சீலமாய் — தன் இயல்புக்கேற்ப — ஆலின் கீழே — ஆலமரத்தின் அடியில். கோலமாய் — அலங்காரமாய். பகவதிகோட்டம் — பகவதி அம்மன் ஆலயம். ஆதுலர் — ஏழை எளியோர். தன் மனையியுடனும் இன்புற்று இருத்தல் — செல்லக் கலியாணம் —



காட்டுவிளை ஊரில் கோயில் கொண்டுள்ள பெண்ணரசியாரின் (புருஷாதேவியின்) ஆலய முகப்பு. குழந்தையுடன் பெண்ணரசியார்



தாயும் மகளுமாகிய ஆலயத்தினுள் பெண்ணரசியரும் (தாயும் புருஷாதேவியும்) தோழி வாணுமாலையும்



பெண்ணரசியின் காவலர்களான செங்கிடாய்க்காரனும் கழுக்காரனும் ஆயுதங்களுடன்



பெண்ணரசியின் தனி உருவம்

முடித்தவர் கொடைகொடுக்க மூர்த்தியுடனி சக்கியம்மை
மோசமின்றி யேகுடியைக் காத்து
திக்குக்குடி நாடாரின் சேகரத்தை ஆதரித்து
சீராக காட்டுவிளை யூரில்
அம்மையவள் படையோடு ஆதர வுடனிருக்க
அப்பால் நடந்தகதை சொல்வேன்

## (இசக்கி சுக்குப்பாறைக்கு எழுந்த வரலாறு)

**விருத்தம்**

சீலமாய் ஆலின் கீழே சிறப்புட ணிருந்த தாயும்
கோலமாய் ஐய னோடு கூடியே சென்று கொஞ்சக் 1545
காலமாய் நின்று காட்டு விளையினிற் காலந் தள்ளி
ஏலமாய்ச் சுக்குப் பாரைக் கெழுந்திடு மியல்பு சொல்வாம்

## (சுக்குப்பாறை சுந்தரன் வரலாறு)

**வேறு**

சந்தமாய்க் காட்டுவிளையில் இசக்கி யென்னம்மை
தாஷ்டீகன் மந்திரமூர்த்தி கழுக்கார னோடு
விந்தையுடன் ஊட்டு உண்டு மகிழ்ந்து யிருக்க
வீரியென்னம்மை பகவதி கோட்டத் தருகாய்
சொந்தமாய் நாடார் பலருஞ் சுகித்திருக்கின்ற
சுக்குப்பாறை னேரியென்னுஞ் சிற்றூரில் வாழும் 1550
சுந்தரன் ஆதுலர்க் கன்ன மளித்திடுந்தீரன்
சுடலைமாட நாடானென்ன அவருட நாமம்
கண்ணியமாக வளர்ந்து கலியாண்ம் பண்ணி
காரிகையோடு சுகித்து யிருக்கிற நாளில்
அம்மை யடிமை நாடானெனவே யொருபாலன்
அன்புடன் வந்து பிறந்திடக்கண்ட தாய்தந்தை

மணமகனும் மணமகளும் சிறு வயதாய் இருக்கும் போதே செய்யும் திருமணம் — பாலிய விவாகம். எண்ணூற்று நாற்பத்து ஐந்து — கொல்லம் ஆண்டு 845. மேடம் — சித்திரை மாதம். ஈரைந்துதேதி — பத்தாம்தேதி. புதன்வாரம் — புதன் கிழமை. முகூர்த்தம் — நல்ல நேரம். தாப்பிட்டு — காப்பிட்டு — தீய சக்திகளிலிருந்து காக்கக் கையில் கட்டும் மஞ்சள் கயிறு. உறன் முறையார் — உறவினர். அகத்தீசர்புரம் — ஒரு ஊர். புவியூர் — ஒரு ஊர் மான் கோட்டை — ஒரு ஊர். வெங்கலராஜன் — ஒரு சிறு தெய்வம். மணக்குடி — ஒரு ஊர். களிக்கரை — ஒரு ஊர். பெருமாள் விளை — ஒரு ஊர். தென் கொம்பூர்க்கு அருகே ஓடம் மணல் ஓடை. மணப்பேரிகை — திருமண முரசு. சாற்றி — கொட்டி. பிரமசத்தி — திருமணப் பெண்ணின் பெயர். சாஸ்திரம் — வேதம். சங்கையுள்ள — வழக்குமுள்ள. பணி — ஆபரணம். பூட்டி — அணிவித்து. மணவறை — திருமணம் நடைபெறும் இடம் மலர்மாரி பூத்த மலர்கள் — மழை போல பூக்கள் சொரிய அக்கினி — நெருப்புக்கடவுள். ஆகாசம் — வானம். பஞ்ச பூதத்தில் ஒன்று. வாணி — சரஸ்வதி. பூதேவி — பூமாதேவி. சொக்கி — மயங்கி.

### (சுந்தரன் தன் மகனுக்குச் செல்லக் கலியாணம் செய்ய எண்ணுதல்)

சிந்தை மகிழ்ந்துதன் ஏக மகனை வளர்த்து
செல்லக் கலியாணஞ் செய்யவேண்டு மெனஎண்ணி
எண்ணூற்று நாற்பது ஐந்தெனு மாண்டினில் மேடம்
ஈரைந்து தெய்தியினில் புதன்வாரம் முகூர்த்தம் 1555
தாப்பிட்டு உள்ள சடங்கு முடிந்ததின் பின்னே
தாமச மின்றியே அம்மையடிமை நாடானை
மாப்பிள்ளை யாக்கி மணிக்குதிரை மீதிலேற்றி
மகிழ்ந்து உறன்முறை யார்களும் மேளத்துடனே

### (மணமகன் பரிவாரத்துடன் மணமகள் வீட்டுக்கு வருதல்)

கோப்புள்ள தோரகத் தீசர் புரமதும் விட்டு
குணமுள்ள பூவியூர் விட்டு மான்கோட்டை கடந்து
காப்பிட்ட கையுடன் மாப்பிள்ளை யானவன் றானும்
கட்டுடன் வெங்கல ராஜனிருப்பிடம் விட்டு
மணக்குடியோடு களிக்கரை தானுங் கடந்து
மகிழ்ந்து அரிய பெருமாள் விளையோடு கூடி 1560
சணத்தினில்தெங் கொம்பூருரின் மணலோடை விட்டு
தாண்டியல் லோரும் அளியங்காட்டு விளைதன்னில்
கணக்காய் உலகளந்தாளெனும் நாடாத்தி தானும்
கண்ணியமாக வசிக்கிற வீட்டிலே வந்தார்.

### (திருமணக் காட்சி)

வந்திட அங்குள்ளபேர் கூடி ஆசாரஞ்செய்து
வண்மையுடனே மணப்பேரிகையதுஞ் சாற்றி
சந்தமாய் பெண்ணா ரமுதம் பிரமசத்திக்கு
சாஸ்திரத்தின் படியுள்ள சடங்குகள் செய்து
மங்கையர் கூடியே சங்கையுள்ள பணிபூட்டி
மணவறை தன்னிலே மாப்பிள்ளை பெண்ணையும் வைத்து 1565
பொங்கிய மங்கல ஓசையுடன் மலர்மாரி
பூரித்த மலர்கள் பெய்ய திருத்தாலி பூட்டி

(1570-1586) ஒக்கவே — ஒத்தார்போல. நறுமலர் வாடைக்கு — மணமுள்ள (மலர்களின் வாடைக்கு. மலர் அணிந்து சென்றாள் பூத பிசாசுகள் பின் தொடரும் என்று மக்கள் இன்றும் நம்புவர்.) ஊக்கமுடன் — மகிழ்ச்சியுடன். பாதிமதியினை சூடும் பரமன் — பிறைச் சந்திரனைச் சூடும் சிவபெருமான். ஆதி — சிவன். ஐயிரண்டுமதி — பத்துமாதம். ஒப்பனையாகவே — பாவனையாகவே. நாமமிட்டு — பெயர்சூட்டி. மெச்சி — புகழ்ந்து. நாயகனாரருள் — இறைவன் அருள்.

சங்கைய் தாக மணவறைக குள்ள
சடங்கு தவறாது வேதமுணர்ந்தவர் செய்து நலமாய்
அக்கினி ஆகாச வாணி பூதேவி யறிய
ஆயிழையை மணஞ்செய்து மணவறை புக்கி
சொக்கி யிருக்கவே மாப்பிள்ளை பெண்ணையுங் கூட்டி
சுறுக்குடன் வாழவிட வேண்டுமென்ன நினைத்து

**(சுக்குப் பாறை வரும் பிரமசத்தியை இசக்கி பின்தொடர்தல்)**

ஒக்கவே மாப்பிள்ளை பெண்ணையுங் கூட்டிநடந்து
ஒய்யார மர்கவே தெங்கொம்பு ஓடை வழியாய் 1570
பக்குவமாக வரவே யிசக்கி யென்னம்மை
படையுடனே பிரமசத்தி நாடாத்தி யோடு
மாலைப் பொழுதில் நறுமலர் வாடைக்கு மெச்சி
மகிழ்ந்து அவளுடன் சேர்ந்து துடர்ந் தளைப்போ
பாலைப்பழித்த மொழியாள் பிரமசத்தியும்
பையச் சிரித்துக் குறவையு மிட்டு யிருந்தாள்
வேலை யொத்த விழியாள் பிரம சத்தி தானும்
வேடிக்கையாக சிரித்துக் குரவை யிடவே
கோலமாய் மாப்பிள்ளை பெண்ணோடு கூட வந்தோர்கள்
கொஞ்சமு மெண்ணாமலே மணலோடை கடந்து 1575
சுறுக்காய் பொழிமுகதோடு மண்கோட்டையு மிட்டு
சுவாமி யருளினாலே புவியூரதும் விட்டு
தர்க்கமில்லாத சத்தீசர் புரமுங் கடந்து
தாஷ்டீக னம்மை யடிமை நாடான் வாழுமூரில்
உருக்கமுடன் சென்று ஊர்வலமாகவே வந்து
ஊக்கமுடனவர் வீட்டிலெல்லோருமிருக்க
சுறுக்குடன் வந்தோர் அவரவர் வீட்டினிலே
சுடலை[illegible] நாடான் மைந்தனம்மை யடியானும்
பாதிமதி யினைச்சூடும் பரம[illegible] போற்றி
பாங்காய்ப் பிரம சத்தியுடனே யினிதாக 1580
சோதில்லாம லிருபேருஞ் சுகித்து வரவே
கொஞ்சும்கிளி மொழியாள் பிரமசத்தி தானும்

**(பிரமசத்தி கருவுறுதல்)**

ஆதியருளதினாலே கெற்பவதி யாகி
ஐயிரண்டு மதியாக வோராண் பிள்ளை பெற்றாள்
சாதி முறைப் படியுள்ள சடங்குகள் செய்து
சந்ததிக்குப் பேரிடணு மெனவே நினைத்து

(1587-1606) மதிபத்து — பத்துத் திங்கள்; பத்து மாதம். திகைத்த பொழுது — முடிவுற்ற போது மாயவள் நாடாத்தி — பிரம் சத்தி பெற்ற பெண் குழந்தையின் பெயர். ஈராறு —

(குழந்தைக்குப் பெயரிடுதல்)

ஒப்பனையாகவே அப்பனைப் பெற்றதோர் பாட்டன்
உத்தமனாஞ் சுடலை மாட நாடான் எனவே
செப்பமுடன் நாமமிட்டு அனைவரும் மெச்சி
செல்வனைப் போற்றி வளர்த்து வருகிற நாளில் 1585

(பிரமசத்தி மீண்டும் கருவுறுதல்)

நட்புடனம்மை பிரம சத்தியவள் தானும்
நாயகனா ரருளாலே கெற்பவதி யாகி
முற்படியே மதிபத்துந் திகைத்த பொழுது
மொய்குழ லாளுமோர் பெண்பிள்ளை தன்னையும் பெற்றாள்

(குழந்தைக்குப் பெயரிடுதல்)

பெற்ற மகவுக்கு உற்ற சடங்குகள் செய்து
பிரியமதாகவே மாயவன் நாடாத்தி யென்ன
உற்றாருரன் முறையார் கூடி நாம மிட
ஒண்டொடியாள் தனைப் பொன்னைப் போற்றி (வளர்த்தார்)
சொற்றவறாது நடந்த தமியவள் தானும்
சூரியனாரொளி போல பிரகாசமாக 1590
சற்றும் மலக்க மில்லாமல் பிரம சத்தியின்
சந்ததிமாய வட்கு வயதீரா ராச்சே

(இசக்கி மாயவளைப் பின்தொடர்தல்)

பன்னிரண்டு வயது பாவையர்க் கானபோது
பாங்கியோடிசக்கி யென்னம்மை தானும்
கன்னியே நாமள்சென்று காரிகை மாயவளை
கட்டாய மாய்ப்பெலி கொள்வோ மென்ன
எண்ணியே மாயவளை இரவதிலே யெழுப்பி
ஏடாகூடங்கள் பலசெய் குவராம்
கண்ணென வேவளர்த்த பெண்ணெனும் மாயவளை
கண்ணம்மை வீட்டுக்குச் செல்வோ மென்ன 1595
இரவிலேழுப்பிப் பலயிடங் களிலும் நடத்தி
இருப்பிடந் தன்னில் விட்டுசெல் குவராம்
உரமுள்ள மூர்த்தியுடன் சின்ன யிசக்கி யம்மை
ஒற்று மையாய்ப் பலருஞ் சூழ்ந்துவர
தீரமுடனே பலநாள் சேய்யிழையை எழுப்பி
தீங்கின்றியே அலைத்து விட்டு வந்தோம்

பன்னிரண்டு. ஏடா கூடங்கள் — முறைதவறிய செயல். இயமதாய் — சத்தமாக. தாஷடிகன் மூர்த்தி — துஷ்ட மூர்த்தி. அமுக்கி — அழுத்தி. நெறித்து.

### (இசக்கி மாயவளைக் கொல்ல எண்ணுதல்)

வரமும் முடிந்ததினி வாணுதல் மாயவளின்
வாணாளை யின்றுநாம் முடிப்போ மென்ன
திட்டமுட னேயெண்ணி சேகரமாகக் கூடி
சேயிழை மாயவளின் வீட்டில் வந்து 1600
சட்டமாய் நித்திரை செய்திட்டபெண் ணாரமுதை
தாய்தந்தை யாரு மறியாத வண்ணம்
இயமதா யெழுப்பி ஏந்திழை தன்னைகூட்டி
ஏகினார் மேற்குமுக மாக வேதான்
வட்டக்கிளியொடு பெரிய குளமு மிட்டு
வாணுதல் மாயவளைக் கூட்டி யேதான்
பாட்டியின் வீடுசெல்வோம் பாவையரே யெனவே
பைய நடத்தியங்கே செல்குவாராம்
தாஷ்டீகன் மூர்த்தி கழுக்காரனி சக்கியம்மை
தையலாள் மாயவனைக் கூட்டி யேதான் 1605
சேட்டைசெய் யாதிவளைக் கூட்டிகாளி கூரையில்
சென்றவுட னமுக்கிக் கொன்றனராம்

### (மாயவளைக் காணாது பெற்றோர் கலங்கித் தேடுதல்)

தேட்டமா யம்மையப்பர் சேயிழையைக் காணாமல்
தேடித் தடத்தின் வழியாக வேதான்
மண்கோட்டை தான் கடந்து மடமடனவே யோடி
மண்தூடி யென்னுங்களி தன்னிலே தான்
திண்ணமாய் மிதக்கும் தேன்மொழி மாயவளை
தேடியே வந்தோர் கண்டு கொண்டனராம்

### (இறுதிக் கிரியை செய்தல்)

கண்டவுட னழுது கண்ணீர் தண்ணீரா யோட
காரிகை மாயவளைத் தூக்கியேதான் 1610
அண்ணனுடனே யப்பரான பேர்களுங் கூடி
ஆதரவாகக் கொண்டு வீட்டில் வந்து
சொந்தப்புர யிடத்தில் பந்தித்து மாயவட்கு
சோடச முறைகளுஞ் செய்திருக்க

### (சின்ன இசக்கி பிரமசத்தியைக் கொல்லுதல்)

சந்தமாய் மூர்த்தியுடன் சின்ன யிசக்கியம்மை
சாற்றுவாளொருமொழி சூத்திரமாய்
இந்தக் காலத்தில் நாமள் ஏத்த பூசைக ளுண்ண
இப்போதே முயற்சிப்போ மென்ன வெண்ணி
தந்திரமாக நின்று தையலாள் மாயவளின்
தாயார் தனையுமங்கு கொன்றனராம் 1615



சுக்குப்பாறைதேரி விளையிலுள்ள மணிக்கட்டிவிளையின் கன்னிமூலையில் அமைந்த பெண்ணரசி (புருஷாதேவி)கோயிலின் எல்லைக்கல்லின் அமைப்பு



மணிக்கட்டிவிளை கோயில்



மணிக்கட்டிவிளை பெண்ணரசியார் (புருஷாதேவி)

பெண்ணரசியின் தாயும் வாணுமாலையும்



மணிக்கட்டிவிளை கோயிலிலுள்ள வாதைகள்

கொன்றிடக் கண்டவுடன் கூடியெல்லோரும் பேசி
    கோரணி ஏதெனவே ஆய்ந்தபோது
கொந்தலருங் குழலாள் தன்னை கொலை புரிந்த
    கொடிய யிசக்கி செய்த சூழ்ச்சி யென்ன

### (மக்கள் மந்திரவாதியைக் காணல்)

அன்றவர்கள் மதித்து ஆங்காரத் தோடெழுந்து
    அடுத்த சிற்றூ ரதனில் வாழ்பவனாம்
சென்று கண்டோர் புகழ்ந்துரைக்குஞ் சுப்பிரமணியன்
    சேயென்னுஞ் செந்திவேல் நாடான் றனையே

### (இசக்கியின் கோபம்)

மந்திரவாதி யெனக் கொண்டிவர் சாந்திசெய்ய
    மங்கை யிசக்கி யம்மை கோபமதாய் 1620
தந்திர மாகநின்று தான்பூசை கொள்ளவேணும்
    சந்தேக மில்லாம லிங்கே யென்ன
பொங்கரவ மணிந்த புண்ணியனைத் தொழுது
    பூவை யிசக்கியம்மை ஏது செய்தாள்

### (இசக்கி மறுமொழி)

மந்திரவாதி செய்த தந்திரமான தெல்லாம்
    மாயவே செய்தவர்க்கு ஏதுசொல்வாள்
என்னைப் பிடித்தடைக்க ஏலாது உந்தனுக்கு
    இயல்பாக ஒன்றுசொல்வேன் கேளடாநீ
சின்ன யிசக்கியுடன் ஆட்டுக்கார யிசக்கி
    தீரனாம் மூர்த்திக்கழுக் காரனுக்கு 1625
கண்ணிய மாகமணி கட்டிவிளையதிலே
    கன்னிமூலையிற் கோயில் வைக்க வேண்டும்
அந்நிலந் தன்னிலொரு வேம்பு முளைத்திருக்கும்
    அதுவே யடையாளங் காண்மந்திர வாதி
உந்தனிடத்திற் சொன்னேன் உண்மை யவர்க்குரைத்து
    ஊகமாய்ச் செய்தால் துயரில்லை யினி

*(1607-1628)* தேட்டமாய் — கவலையாய். அம்மையப்பர் — தாய் தந்தையர். மண் கோட்டை — ஓர் இடம். மண் ஆடியென்னுங்களி — புதை மணல். பந்தித்து — ஒழுங்கு செய்து. சோடசமுறை — பதினாறாம் நாள் காரிய சடங்குமுறை. நாமள் — நரம். மாய வளின் தாயார் — பிரமசத்தி. கன்னிமூலை — தென் மேற்கு திசை. சுப்பிரமணியன் சேய் — சுப்பிரமணியன் மகன். அரவம் அணிந்த புண்ணியன் — சிவபெருமான். பிடித் தடைக்க — கட்டுப்படுத்த. ஊகமாய் — ஆலோசனையுடன்.

### (மந்திரவாதி இசக்கியின் விருப்பத்தைக் கூறுதல்)

என்ன வுரைத்தமொழி கேட்டு அவர்க்குரைக்க
இசைந்துமே கோயில் கட்டவேண்டு மென்ன
தன்நில் மான மணிகட்டி விளையதிலே
சார்ந்துகன்னி மூலையில் பார்த்த போது 1630
முன்ன ருரைத்தபடி முறைபிச காதிருக்க
முகூர்த்த மீதென்ன எல்லோரும் மகிழ்ந்து
சந்தமதாகிய தோர் மந்திரவாதியினால்
சங்கையாய் கோயிலது வைத்த பின்பு
மங்கள மாகவேதான் பொங்கி மனம்மகிழ்ந்து
மாறிமாறியே பூசையிட்டுவர

### (பிரமசத்தியும் மாயவளும் இறைவியாதல்)

வன்கொலையாயிறந்த மங்கை யர்ரண்டு பேரும்
வாம தேவனைத் தொழுதேற்றி யேதான்
பொங்கமுடனே ஆட்டுக் கார யிசக்கியம்மை
பூசையுண் ணுறயிடந் தன்னில் நின்று 1635
மங்கை பிரமசத்தி மாயவள் ரண்டு பேரும்
மாறாமல் பூசையுடன் டினிதிருந்து
சங்கடமான குடிதன்னை மிகவே காத்து
தரியலரின்றி சுக்குப்பாறை யூரில்
இங்கித மாயிருந்த இந்தக் கதையதனை
எல்லோரும் பார்த்துணரும் வண்ணமாக
பங்க மின்றி யுரைத்தேன் பாலனுரையிற் பல
பழுதிருந்தாலும் பொறுப்பீர் பெரியோர்.

### விருத்தம்

பெண்ணரசிக்கு யம்மையொரு கண்ணுமக ளானதொரு
புருஷா தேவி தன்னையும் 1640
கண்ணியம தாகவே எண்ணியவள் புகழையே
காசியினி தனிற்ப ரப்பி
எண்ணுமிக் கொல்லமா யிரத்தொரு நூற்றுப்பன்
னிரண்டுக்குள்ள காலம் வரையும்
நண்ணியே பூசைசெய் கின்ற மு. பொன்னையா
நாடாரும் நாடும் வாழ்க. 1643

(1629-1643) வன் கொலை — கொடுமையான முறையில் அமைந்த கொலை. மங்கை யர் ரண்டுபேரும் — பிரமசத்தி. மாயவள் என்ற இரண்டு பேரும். வாமதேவன் — சிவ பிரான். காசினி — உலகம். கொல்லம் ஆயிரத்தொரு நூற்றுப் பன்னிரண்டு — கொல்லம் — 1812 — 1637.கி.பி. நண்ணியே — அருள்பெற வேண்டி. நாடாரும் — நாடார் சமூகத்தி னர். நாடும் — நாட்டில் உள்ள மக்கள் அனைவரும். வாழ்க — செழித்து வளமுடன் அமைய வேண்டுதல்.

# துணை நூல்கள்


## I. சுவடிகள்

1. புருஷாதேவி கதை எண். 50 — ஆசியவியல் ஆய்வு நிறுவனம், சென்னை - 41.
2. — இரத்தினசாமி நாடார், தெங்கம்புதூர், குமரி மாவட்டம்.
3. " — பொ. தங்கராஜ், சுக்குப்பாறை தேரிவிளை, குமரிமாவட்டம்.

## II. தமிழ் நூல்கள்

4 க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, — பா. ரா. சுப்பிரமணியன் (பதி.), க்ரியா, சென்னை. 1992
5 கான்சாகிபு சண்டை, — நா. வானமாமலை (பதி.), மதுரைப்பல்கலைக்கழகம், மதுரை. 1972
6. தமிழ் வில்லுப்பாட்டுகள், — தி. சி. கோமதிநாயகம், தமிழ்ப் பதிப்பகம், சென்னை. 1979
7 தமிழில் கதைப்பாடல்கள், — அ. நா. பெருமாள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. 1987
8. நாட்டார் வழக்காறுகள், — தே. லூர்து, மணிவாசகர் பதிப்பகம், சென்னை. 1988
9. நாட்டுப்புற இயல், — சு. சண்முகசுந்தரம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை. 1989
10 நாட்டுப்புறவியல் சிந்தனைகள், — அ. நா. பெருமாள், தேன்மழை வெளியீடு, சென்னை. 1987
11. நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், — துளசி, இராமசாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. 1985

## III. ஆங்கில நூல்கள்

12. Journal of American Folklore, — 'Oral Performance Narrative and Ritual in a Tamil Tradition', Vol 94, No 372 (Essay) 1981
13. The village gods of South India, — Right Reverend Henry Whitehead, D.D., Asian Educational Services, New Delhi. 1983

# சொல்லடைவு

(எண் வரிசை எண்)

## த



## தா



## தி



## தீ



## து

## பா



## பி



## பீ



## பு

## பூ



## பெ



## பே



## பை



## பொ



## போ

ம



மா

## வா



## வி

